# கான்ஸ்டபிள் கந்தசாமி

## முதல் அத்தியாயம்

## வந்தான் கந்தசாமி!

அதிகாலை ஆறு மணி இருக்கும். கிழ்வானத்தில் அப்போதுதான் சூரியன் எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தான். வானவெளியில் புகை மூட்டம் போல் கவிந்திருந்த மூடுபனி சிறிது சிறிதாகக் கலையத் தொடங்கியது. கோட்டை மைதானத்தில் வெளியூர் பஸ் நிலையத்தின் தினசரி நடவடிக்கைகள் வழக்கம் போல் அருணோதயத்துக்கு முன்னமே ஆரம்பமாகி விட்டன.

இன்னும் ஒரு மணி ஒன்றரை மணி நேரம் கழித்துப் புறப்படப் போகும் பஸ்ஸுக்கு ஆள் சேர்க்க இப்போது முதலே "குண்ணத்தூர், குண்ணத்தூர்! வேளச்சேரி, சேலையூர்!" என்று கண்டக்டர்கள் அபயக் குரல் கொடுத்துக் கொண்டிருந்தனர்.



இடையிடையே அவர்கள் 'பூம் பூம்' என்று ஹாரனே அழுத்தும்போதெல்லாம் மூட்டை முடிச்சுக்களோடு விரைந்து வந்து கொண்டிருந்த பாமரப் பிரயாணிகள் "ஐயோ, பூடிச்சு, பூடிச்சு! பஸ் பூடிச்சு!" என்று விழுந்தடித்துக்கொண்டு அழுகின்ற குழந்தைகளைத் தரதர வென்று இழுத்துக் கொண்டு ஓடி வந்தனர். ஒரு புறத்தில், வெளியூர் வண்டிகள் வந்தால் இரண்டணுக் காசாவது கிடைக்காதா என்ற அவல நம்பிக்கையுடன் வழிமேல் விழி வைத்துக் கொண்டிருந்த கூலிக்காரர்கள், தங்கள் கிழிசல் துணிகளினுல் தலையையும் உடம்பையும் மூடிப் போர்த்திக் கொண்டு மிகவும் பரிதாபமாகக் காட்சியளித்தனர்.

"டீ, சூடா டீ! பெஸல் டீ!" என்று ஒய்யாரமாகக் கூவிய வண்ணம் ஆவி கிளம்பும் டீ தநீர் தூக்குப் பாத்திரத்துடன் சுற்றி வந்த ஆசாமிக்கு அந்தக் குளிரில் வெகு நல்ல வியாபாரம். இந்தப் பஞ்ச காலத்திலும் கூடக் காலணுவுக்கு 'டீ' கொடுக்கக் கூடிய தர்மாத்மா அல்லவா அவன்!

இந்தச் சூழ்நிலையிலே தான், பஸ் ஸ்டாண்டிலிருந்த குண்டு குழிகளில் ஏறி இறங்கி ஒரு குலுக்குக் குலுக்கிய வண்ணம் வந்து நின்றது சாலையூரி லிருந்து வரும் பஸ்.

ஒடுங்கி நின்று கொண் டிருந்த கூலிக்காரர்கள் போர்வையோடு குளிரையும்



உதறி விட்டு மின்னல் வேகத்தில் பஸ்ஸை நோக்கிப் பாய்ந்தனர். பிரயாணிகள் இறங்கத் தொடங்கினர். பஸ்ஸின் மேல்தளத்திலிருந்த மூட்டைகளும் பெட்டிகளும் அவசரமாகக் கீழே இறக்கப்பட்டன. டிரைவரின் ஆசனத்துக்கு அருகில் போலீஸ் உடையில் உட்கார்ந்திருந்த கான்ஸ்டபிள் கந்தசாமி கம்பீரமாகக் கீழே இறங்கினான்.

பார்த்தவுடன் மனத்தில் பதிந்து விடும் தோற்றம். சுமார் இருபத்தைந்து வயதிருக்கும். ஐந்தே முக்காலடி உயரம். உயரத்துக்கேற்ற பருமன். மாநிறமான முகத்தில் முறுக்கி விட்ட மீசை. அவன் சிரிக்கும்போது கருமேகத்திலிருந்து எட்டிப் பார்க்கும் வெண்ணிலவைப் போல் மீசைக்கு இடையே தெரியும் வெண்மையான பற்கள். மிகவும் கூர்மையான பார்வையுள்ள பளபளப்பான கண்கள்.

கந்தசாமி தன் 'கிரீடத்'தைத் தலையில் தூக்கிவைத்துக்கொண்டு மைதானத்தை ஒரு நோட்டம் விட்டான். அவனை வரவேற்க அங்கே யாரும் வரவில்லை என்பதால் அவன் மனமுடைந்து போகவில்லை.

ஆனால் வண்டிக்கு மேல் வைத்திருந்த அவனது படுக்கையை யாரோ எடுத்து மண்ணில் போட்டு விட்டார்கள் என்பதைக் கண்டபோது தான் அவனுக்குக் கோபம் பொத்துக் கொண்டு வந்தது. போலீஸ்காரன் படுக்கைக்கா இந்த மரியாதை! எதிரே அவன் கண்ணில் பட்ட கூலிக்காரன் மீது அவன் கோபம் திரும்பியது. கண்களை உருட்டி அவனை விழித்து நோக்கினான்.




"ஏய்! இந்தப் படுக்கையை யார் இப்படித் தூக்கிப் போட்டது?" என்று கேட்டான்.

"நான் இல்லீங்க..." என்று அஞ்சிய வண்ணம் பதிலளித்தான் அந்தக் கூலியாள்.

"தூக்குடா, தலையிலே!" என்று கையை ஓங்கிக் கொண்டே

விரட்டினன் கந்தசாமி. கூலிக்காரன் விதியை நொந்த வண்ணம் அதைத் தலையில் தூக்கி வைத்துக் கொண்டான். "உம், நட!" என்று அதட்டிக் கொண்டே அவனை முன்னல் நடக்க விட்டுப் பின்தொடர்ந்தான் அந்தப் போலீஸ் வீரன்.

மைதானத்துக்கு அப்பால் சாலையோரத்தில் ஒரு கிழக் குதிரை வண்டி நின்று கொண்டிருந்தது. பின்னங் கால்கள் இரண்டும் ஒன்றோடொன்று முட்டிக் கொண்டு எலும்புக் கூடாகக் காட்சியளித்த அந்தப் பஞ்சகல்யாணி தன் தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு அரைத் தூக்கத்தில் இருந்தது. வண்டிக்காரக் கிழவன் ஒரு சால்வையைப் போர்த்திக் கொண்டு 'பிளாட்பாரத்'தில் அமர்ந்திருந்தான்.

கந்தசாமி குதிரையை ஒரு முறை மேலும் கீழும் பார்த்து விட்டு, "பெரியவரே, இது குதிரை தானே?" என்று கேலியாகக் கேட்டான்.

கிழவன் சிரித்துக் கொண்டே எழுந்து, "என்ன அப்படிக் கேட்கிறீங்க! சும்மா மெயில்கணக்கா பறக்குமுங்க!...எங்கே போவணும்?" என்று கேட்டான்.

"வண்டியிலே கட்டி வைக்காட்டி அது இருக்கிற நிலைக்குக் காற்றிலே பறக்கத் தான் செய்யும்!" என்று சொல்லிக் கொண்டே வண்டியில் ஏறிக் கொண்டான் கான்ஸ்டபிள் கந்தசாமி.

கூலிக்காரன் அவனது படுக்கையை வண்டியில் வைத்தான். "மந்தாரப் பேட்டைக்கு விடுங்க!" என்று கந்தசாமி வண்டிக்காரனுக்கு உத்தரவிடவும், வண்டி நகர்ந்து சென்றது.

கூலியாள் மெதுவாக, "ஸார்!" என்றான், தலையைச் சொறிந்தவாறே.

"போடா அப்பாலே, ஐயா குடுத்ததை வாங்கிட்டுப் போவையா, காலங் காத்தாலே பஞ்சப்பாட்டு பாடிக்கிட்டு நிக்கிறான்!" என்று விரட்டினன் வண்டிக்காரன். கந்தசாமி சிரித்தான்.

குதிரை சப்பையானுலும் சாட்டை அடி சுளீர் சுளீரென்று விழவும் துள்ளித் துள்ளி ஒரு தனி நடை போட்டுக் கொண்டு ஓட ஆரம்பித்தது.

கந்தசாமியின் பெற்றோர் அவனது சிறு வயதிலேயே இறந்து விட்டனர். அக்காள் முத்தம்மாள் தான் அவனைச் செல்லமாக வளர்த்து எட்டாம் வகுப்பு வரையில் படிக்க வைத்தாள். முத்தம்மாளின் கணவன் ராணுவத்தில் சிப்பாயாக இருந்து ஓய்வு பெற்றவன். கணவன் ஒரு ராணுவ வீரன் என்பதில் முத்தம்மாளுக்கு எவ்வளவோ பெருமை. நடக்காத யுத்தங்களில் அவன் புரியாத வீரச் செயல்களைக் கற்பனை செய்து அவள் தனது சிநேகிதைகளிடம் பெருமையடித்துக் கொள்ளாத நாள் இல்லை. 'சிப்பாய்க்காரன் வீடு' என்றால் அவர்களது வட்டாரத்தில் சின்னக் குழந்தைக்குக்கூடத் தெரியும். கணவனைப் போலவே தம்பியும் எதிர்காலத்தில் ராணுவத்திலோ போலீஸிலோ ஒரு உயர்ந்த பதவிக்கு வர வேண்டுமென்று அவள் எவ்வளவோ கோட்டை கட்டினுள். ஆனுல் கந்தசாமி எட்டாம் வகுப்போடு படிப்புக்கு முற்றுப்புள்ளி வைத்து விட்டு வீட்டில் தங்காமல் ஊர் சுற்றத் தொடங்கியதும் அவள் அடைந்த ஏமாற்றத்துக்கு அளவில்லை.

கணவன் உயிரோடிருந்த வரையில் குறைவின்றி நடந்து வந்த குடும்ப நிர்வாகம், திடீரென்று விஷ ஜுரத்தில் இரண்டு வருடங்களுக்கு முன்னல் அவன் இறக்கவும், கஷ்ட தசையை அடைந்தது. எனினும் சாமர்த்தியசாலியான முத்தம்மாள் பால் வியாபாரம் செய்து ஏதோ ஒரு விதமாகச் சமாளித்து வந்தாள். ஆனுல், தம்பி குடும்பப் பெயரை நிலைநாட்டுவான் என்று அவள் கண்ட கனவு என்ன ஆவது?

கடைசியாக, அவள் யார் யாரையோ சிபார்சு பிடித்துக் கந்தனுக்குப் போலீஸ் உத்தியோகத்துக்கு ஏற்பாடு செய்து விட்டாள். வேலூரில் பயிற்சிக் காலம் முடிந்ததும் சாலையூர் 'அவுட் போஸ்ட்'டில் தாற்காலிகமாக மூன்று மாதம் வேலைக்கு அனுப்பப்பட்டான். பிறகு சென்னை மந்தாரப்பேட்டைக்கே மாற்றல் உத்தரவு கிடைத்து விட்டது.

அவன் வரும் தேதியைக் குறிப்பிட்டு அக்காளுக்கும் கடிதம் எழுதியிருந்தான். சொந்த ஊருக்கே திரும்புகிறோம், அதுவும் போலீஸ் வீரனுக—என்ற நினைவில் கந்தசாமி பெருமிதம் அடைந்தான். கொள்ளைக்காரர்கள், கொலைகாரர்கள், கேடிகள், சைக்கிளில் விளக்கு இல்லாமல் போகிறவர்கள் ஆகிய எத்தனை பேர்கள் அவன் தலையைக் கண்டதும் நடுங்கப் போகிறுர்கள்! எத்தனை பேர்கள் அவனைத் தெருவில் பார்த்ததுமே பல்லைக் காட்டிச் சலாம் போடப் போகிறுர்கள்!- இவ்வாறு எண்ணியதுமே அவனது உடம்பு புல்லரித்தது. தொண்டையை ஒருமுறை அவன் கனைத்தான்.

"வண்டிக்கார ஐயா! சமீபத்திலே இங்கே ஏதோ ஒரு பெரிய கொலை நடந்துச்சாமே, மேல்கொண்டு என்ன ஆச்சு, தெரியுமா?"

கிழவன் லகானைச் சற்றுத் தளர்த்தி விட்டுத் திரும்பிப் பார்த்தான்.

"எந்தக் கொலையைச் சொல்கிறீங்க?"

"என்னய்யா பெரிய கொலேன்னு சொல்கிறேன்...!"

"கொலையிலே பெரிய கொலே வேறே. சின்னக் கொலே வேறுங்களா? சென்னைப் பட்டணத்திலே தினம் தினம் எத்தனையோ அக்கிரமம் நடக்குது! உங்களைப் போல இருக்கிறவங்க சரியாகக் கவனிச்சால்தானே உண்டு?"

"ஹூம்; இதுவரையிலே என்னை வெளியூரிலே அல்ல போட்டிருந்தாங்க! இனிமேல் பாருங்க, இந்த மந்தாரப் பேட்டை டிவிஷன் என்னமாத்தான் அலறப் போகுதுன்னு! அந்த ஊரிலே போன மாசம் பாருங்க, ஒரு பெரிய பாங்கிக் கொள்ளை நடந்தது. பாதி ராத்திரியிலே புகுந்து கொள்ளையடிச்சுட்டாங்க. பின்னுலேயே ஒரு பெரிய தோப்பு! கொள்ளைக்காரங்க தோப்பிலே இருக்காங்கன்னு நல்லாத் தெரிஞ்சும் ஒரு பயல் தைரியமாக உள்ளே போய்ப் பிடிக்கப் பயந்து செத்தானுங்க. சே! நீங்களும் ஒரு மனுஷங்களான்னு நான்போனேன்! தன்னந்தனியாகப் போய் அத்தனை பேரையும்வளைச்சுக் கட்டிட்டேன், பெரியவரே! பேப்பரிலே பார்த்திருப்பீங்களே?..."



கிழவன் ஆச்சரியத்தோடு அவனைப் பார்த்தான். "நான் பேப்பர் படிக்கிறதில்லீங்க. எந்த ஊரிலே நடந்த கதைங்க இது?"

"சாலையூர் தெரியுமா?"

"சாலையூரா!... நம்ம ஊர்ப் பக்கமாச்சே அது! அங்கே ஏதுங்க பாங்கி?"

ஏது? கிழவன் எமகாதகனுக இருப்பான் போலிருக்கிறதே என்று எண்ணிய கந்தசாமி உடனே சாமர்த்தியமாகப் பேச்சை மாற்றினன்.

"அந்த ஊரிலே பாங்கி இருக்கிறது என்று சொன்னேன்! இங்கே பட்டணத்திலே எங்கேயோ கொள்ளை அடிச்சுட்டு அங்கே வந்து ஒளிஞ்சுக்கிட்டாங்கையா என்று சொன்னு..."

"ஓஹோ! இருக்கலாமுங்க!"

"சரி, சரி, உன் குதிரை பின்னுக்குப் போகுதா? கவனி ஐயா! நீயும் உன் வண்டியும்!" என்று வெறுப்போடு கூறினன் கந்தசாமி.

முத்தம்மாள் குடியிருந்த வீடு ஒரு சிறிய சந்தில் இருந்தது. நாட்டு ஓடுகள் வேய்ந்த பழைய காலத்துக் கட்டடம். காரைப்பூச்சுகள் இடிந்து செங்கற்கள் வெளி நீட்டிக் கொண்டிருந்த வெளித் திண்ணைகள், ஒரு இடைகழி, இருண்ட கூடத்துக்குப் பின்னுல் எதிரெதிராக இரண்டு அறைகள், முற்றத்துக்கு அப்பால் பின்கட்டில் ஒரு சமையலறை—இவ்வளவுதான் வீட்டின் அமைப்பு. பின்புறத்தில் தாறுமாருக மண்டிக் கிடந்த ஒரு விசாலமானதோட்டம் இருந்தது. ஒரு மூலையில் வாழை மரங்கள், இன்னொரு பக்கம் சுரைக் கொடிகள், நடுவே ஒரு கிணறு; கிணற்றுக்குச் சற்று அப்பால் ஓங்கி வளர்ந்த இரண்டு தென்னை மரங்கள், குறுக்கே கழிவுத் தண்ணீர் ஓடும் சாக்கடைக் கால்வாய் ஆகிய இத்தனை வைபவங்களுக்கும் இடையே தென்னை மரத்தில் கட்டப்பட்டிருந்த எருமை மாடு அந்தத் தோட்டத்துக்கே சோபையைக் கொடுத்துக் கொண்டிருந்தது.

முத்தம்மாள் அன்று அதிகாலையிலேயே எழுந்து விட்டாள். தன் வீரத் தம்பி இன்று ஊரிலிருந்து வரப் போகிறுன் என்ற மகிழ்ச்சியில் அவளுக்குத் தலைகால் புரியவில்லை. நாற்பத்தைந்து வயதைத் தாண்டி விட்டோம் என்கிற நினைவே இன்றி இளம் பெண்ணைப் போல் ஓடி ஓடி வேலை செய்தாள். அவளது பரபரப்பில் முன்னுல் செய்ய வேண்டிய காரியங்களைப் பின்னுல் செய்து, செய்ய நினைத்தவற்றை மறந்து, கூடத்தில் போட்ட கோலங்களைத் தன்னை மறந்து பெருக்கித் தள்ளி, தன் புத்தியைத் தானுகவே சபித்துக் கொண்டு இங்குமங்கும் வேகமாக ஓடிக் கொண்டிருந்தாள்.

அடிக்கொரு முறை வீதியில் வண்டிச் சத்தம் கேட்கும்போதெல்லாம் முகத்தில் கோல மாவும் கரியுமாக, பருத்த சரீரத்தைத் தூக்கி, அவள் ஓடி வந்த காட்சி மிகப் பரிதாபகரமாக இருந்தது.

வாசலில் தண்ணீர் தெளித்துப் பெருக்கிக் கொண்டே சுற்றுமுற்றும் பார்த்தாள். "உன் தம்பி வரப் போகிறுனு?" என்று யாராவது கேட்க மாட்டார்களா என்ற ஏக்கம் அவளது மனத்தில் துடித்தது. ஆனுல் அந்தக் காலை நேரத்தில் தங்கள் வேலைகளை விட்டு இவளிடம் வந்து குசலம் விசாரிக்க வேண்டும் என்ற பண்பு யாருக்குமே உதிக்க வில்லை. பக்

கத்து விட்டு மருதம்மாளிடம் விரோதம் இல்லாவிட்டால் முத்தம்மாளே ஓடிப் போய் அவளிடம் சொல்லி யிருப்பாள். ஆனால் அந்த ராங்கிக்காரி இவளைச் செல்லாக் காசுக்கும் மதிப்பதில்லை. 'ஏதடா சிப்பாய்க்காரன் வீடாயிற்றே?' என்ற எண்ணம் துளிக்கூட இல்லாத ஜன்மம் அது! அந்த வட்டாரத்திலேயே அவள் ஒருத்திதான் முத்தம்மாளை அலட்சியப்படுத்திப் பேசுபவள். போதாக்குறைக்குப் போன வாரம் அவளது அண்ணன் மகன் ஒருவன் ஊரி லிருந்து வந்து விட்டானென்று, ஏதோ சீமையிலிருந்து மகாராசா வந்துவிட் டது போல் அவள் ஊர் முழுதும் சள சளவென்று பேசிக் கொண்டு திரிந்த தைக் கண்டு முத்தம்மாளுக்கு ஒரே எரிச்சலாக இருந்தது. 'தம்பி கந்தசாமி யின் கால் தூசு பெறுவானா அந்தத் தங்கவேலு? ஆகட்டும், இது போலீஸ் காரன் வீடு என்பதைக் காண்பித்து விடு கிறேன்' என்று மனத்தில் கறுவிக் கொண்டே துடைப்பத்தை 'விருக் விருக்'கென்று ஓட்டிப் பெருக்கினாள்.

'அம்மே!' என்று குரல் கொடுத்தது, தோட்டத்தில் இருந்த எருமைக் கன்று.

''ஐயையோ! இன்னும் மாடு கறக் கவே இல்லையே! என் புத்தியைச் செருப் பால் அடிக்கணும். தம்பி வந்ததும் வராததுமாக, 'காப்பி வச்சியா அக்கா' என்று கேட்டுக் கொண்டே வருவானே'' என்று தன்னைத்தானே திட்டிக் கொண்டு கையில் துடைப்பத்துடன் புழக்கடைப் பக்கம் ஓடினாள். அங்கு அவள் கண்ட காட்சி அவளைத் திடுக்கிட வைத்தது.

கன்றுக்குட்டி அவிழ்த்து விடப்பட்டு ஊட்டிக் கொண்டிருந்தது. அருகில் அடுத்த வீட்டு மருதம்மாளின் ஏழு வயது மகன் ஒரு வாழைப் பழத்தைத் தின்ற வண்ணம் நின்று வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தான்.

''அட, நீ கட்டையிலே போக!'' என்று திட்டிக் கொண்டே ஓடிப் போய்ச் சிறுவனின் முதுகில் சுளீரென்று ஒரு அறைவைத்தாள் முத்தம்மாள். சிறுவன் வாழைப் பழத்தைக் கீழே போட்டு விட்டு, ''அம்மாடி!'' என்று அலறினான்.

அவ்வளவுதான்! அடுத்த வீட்டி லிருந்து பூதம் புறப்பட்டுவிட்டது. ஆம், பூதாகாரமான தோற்றமுடைய மருதம் மாள் புடவையை இழுத்துச் செருகிக் கொண்டு பாய்ந்து வந்தாள். மறுகணம் அத்தோட்டம் யுத்தரங்கமாக மாறியது.

கைகலக்கவில்லை என்ற ஒரு குறையைத் தவிர மற்றப்படி இடி முழக்கம் போன்ற குரலொலியோடு கிளம்பிய சுடுசரங்கள் ஒன்றையொன்று மோதிப் பூமியையே பயங்கரமாக அதிரச் செய்தன.

இதேசமயம் மருதம்மாளின் வீட்டுக் குள்ளிருந்து ஒரு கிருதா கிராப்புக்காரன் அசைந்தாடிக் கொண்டே வந்தான்.

தங்கவேலுவுக்குச் சுமார் முப்பது வயது இருக்கும். பனை மரம் போன்ற உயரம், கட்டுமஸ்தான உடல், சிவந்த கண்கள், அப்பொழுதுதான் விழித் தெழுந்தான் என்பதற்கு அடையாள மாக எண்ணெய் படிந்த முகம். கையில் பல் குச்சியுடன் புழக்கடைக்கு வந்து சேர்ந்தான் அவன்.

''என்ன அத்தை இது? காலையிலே அந்தச் சனியனோடு என்ன வம்பு செய்கிறாய்?'' என்றான்.

முத்தம்மாளுக்குச் 'சொரே'ரென்றது. அவளது ரத்தம் கொதித்தது. 'அவள் வாழ்ந்த வாழ்வென்ன? இருந்த இருப் பென்ன? அவளைப் போய் ஒரு தடியன் 'சனியன்' என்று சொல்லலாயிற்றே' என்று குமுறியது உள்ளம்.

''யாரைப் பார்த்துச் சனியனெங்கறே? நாக்கை அடக்கிப் பேசு!'' என்று உறுமினாள் அவள்.

''இல்லாவிட்டால் தலையைக் 'கிறுக்' குன்னு வாங்கிடுவையோ?'' என்று ஏளனமாகக் கொக்கரித்தான் அவன்.

''தலையை வாங்குகிறதும் வாங்காத தும் இன்னும் கொஞ்ச நேரத்திலே தெரி யப்போகுது இரு! என் தம்பி வரட்டும்!'' என்றாள் தனக்கு வந்த துக்கத்தை அடக் கிக் கொண்டு.

''உன் தம்பி இந்தப் பட்டணத்துக் கவர்னரில்லே!'' என்று கேட்டு மேலும் அவளது கோபத்தைக் கிளறிவிட்டான் தங்கவேலு.

இதே சமயம் வாசலில் குதிரை வண்டி வந்து நின்றது. கந்தசாமி இறங்கினான். முத்தம்மாளுக்குப் போலீஸ் உடையில் இறங்கிய அந்தக் கம்பீர உருவத்தைக் கண்டதும் உற்சாகம் கரைபுரண்டது. கூடவே மனத்தில் அடக்கி வைத்திருந்த துக்கமும் மடை திறந்து கொண்டது.

''தம்பீ!'' என்று கதறினாள் அவள்.

''என்ன அக்கா!'' என்று பதிலுக்குக் குரல் கொடுத்துக்கொண்டேமுற்றத்தை இரண்டுஎட்டில் தாண்டிப் புழக்கடையை நோக்கி ஓடிவந்தான் கந்தசாமி.

''சபாஷ்! இவருதானா உன் சூரத் தம்பி! அடேயப்பா பெரிய போலீஸ் புலியல்ல!'' என்று ஏளனமாகச் சிரித் தான் தங்கவேலு.

''பார்த்தியா தம்பி!'' என்று கந்த சாமியின் முகத்தை நம்பிக்கையோடு பார்த்தாள் முத்தம்மாள்.

கந்தசாமியின் முகம் சிவந்தது. மீசை துடித்தது. கோபத்தால் கைகால்கள் நடுங்கின. சட்டைக் கைகளை மடித்து

முண்டாவுக்கு மேல் ஏற்றிய வண்ணம் ஆக்ரோஷத்துடன், "ஏய்? யாரைப் பார்த்தடா பேசறே, மரியாதை கெட்ட பயலே!" என்று கர்ஜித்தவண்ணம் தங்கவேலுவை நோக்கிப் பாய்ந்தான்.

அவன் பாய்ந்த பாய்ச்சலைக் கண்டு தன் தம்பி இவ்வளவு பெரிய வீரனு என்று முத்தம்மாள் பிரமித்துப் போனுள். ஆனல் அடுத்தகணம் அவளது ஆனந்தத்தில் மண் விழுந்தது. சற்றும் எதிர்பாராத விதமாகக் கந்தசாமி தடாரென்று வெட்டிச் சாய்த்த மரம் போல் குப்புற விழுந்தான்.

மருதம்மாளின் பையன் வீசி எறிந்திருந்த அற்ப வாழைப் பழத் தோல் அந்த வீரனைச் சதி செய்துவிட்டது!

தங்கவேலு, "சபாஷ்! சபாஷ்! போலீஸ் புலி தண்டால் எடுக்குது!" என்று நையாண்டி செய்து கைகளைக் கொட்டி நகைத்தான். முத்தம்மாளுக்குத் துயரமும் அவமானமும் தொண்டையை அடைத்தன. கந்தசாமியை மெதுவாகப் பிடித்துத் தூக்கினுள்.

"இரு, அக்கா! சொல்கிறேன்! விடு என்னை. இந்தப் பசங்களுக்கு ஒரு சரியான பாடம் கத்துக் குடுக்காமே.." என்று அவன் திமிறினன்.

அவனது முகவாய்க் கட்டையில் சிராய்த்து ரத்தம் கசிந்து கொண்டிருந்தது. அவன் திமிற, அவள் 'வேண்டாம் வேண்டா'மென்று தடுத்து இழுக்க, வெகு பாடுபட்டு அவனைச் சமாதானப் படுத்தி உள்ளே இழுத்துக் கொண்டு வருவதற்குள் முத்தம்மாளுக்குப் போதும் போதுமென்ருகி விட்டது.

அவனைக் கூடத்துக்கு அழைத்துக் கொண்டு வருவதற்கும், வீதியில் பத்திரிகைக்காரச் சிறுவன், "மந்தாரப்பேட்டையில் பாங்கிக் கொள்ளை! காலைச் செய்தி ஒரணு!" என்று கூவுவதற்கும் சரியாக இருந்தது.

கந்தசாமி திடுக்கிட்டான். அவன் கீழே விழுந்து அடிபட்டுக் கொண்டதையும் மறந்து அவனது உடம்பில் ஒரு பரபரப்பு ஏற்பட்டது.

## இரண்டாம் அத்தியாயம்

# கிழட்டுச் சிங்கம்

"சூடு சிறுத்தாலும் காரம் போகாது" என்ற பழமொழி முத்துப் புலவர் விஷயத்தில் நூற்றுக்கு நூறுபங்கு உண்மையாக இருந்தது. வயது கிட்டத்தட்ட அறுபதை எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தது; உடல் தளர்ந்து விட்டது. வீட்டில் இரண்டாம் தாரத்தினிடம் அவர் பேச்சு எடுபடவில்லை. சுருட்டுக்கு ஒரணுக் காசு வேண்டுமென்ருலும் அவளது கையை எதிர்பார்த்துக் காலம்தள்ளும் நிலையில்தான் இருந்தார். ஆனலும் புலமையில் அவருக்கு இருந்த ஆர்வம் மட்டும் குறையவே யில்லை.

பர்மா நாட்டில் மாந்தலைக்கு அருகில் உள்ள தேக்கு மர எஸ்டேட் ஒன்றில் அவரது தமையனர் உத்தியோகம் பார்த்து ஏராளமாகப் பணம் திரட்டினர். புலவரும் அவரோடு கூடவே குடும்பத்தோடு சீரும் சிறப்புமாகத்தான் வசித்து வந்தார். ஆனல் அண்ணனைப் போல் அவருக்கு வியாபார விஷயத்தில் மனம் செல்லவில்லை. இலக்கியம், தமிழ்ப் புலமை என்று இப்படியே காலம் கழித்த அவருக்கு, அங்கிருந்த தமிழ்ப்பள்ளியில் ஆசிரியர் வேலை கிடைத்தது. அங்கு வட்டிக் கடை வைத்திருந்த நாட்டுக் கோட்டை நகரத்தார்களுக்கு அவரிடம் பெருமதிப்பு. புலவரையாவைத் தெரியாதவர்கள் அந்த வட்டாரத்தில் இல்லை.

தமிழ் அபிமானம் மிகுந்த செட்டிப் பிள்ளைகளிடம் ஒழிந்த வேளைகளில் இலக்கியச் சர்ச்சைகளில் ஈடுபட்டுத் தமது புலமையினல் அவர்களை வியப்பில் ஆழ்த்துவார். அவர்கள் மீது கவிதைகள் இயற்றுவார். அவர்களும் தாராளமாகப் பரிசில் வழங்குவார்கள்.

வாழ்நாள் முழுவதும் பிரம்மச்சாரியாகவே காலங்கழித்த அவரது தமையனர் திடீரென்று மாரடைப்பினல் இறக்கவும் அவர் தேடி வைத்த செல்வம் முழுவதும் புலவரைச் சேர்ந்து விட்டது. இரண்டாவது உலக யுத்தம் வந்தது. இம்பாலிலிருந்து தாக்கிய படைகள் மாந்தலையில் முதல் குண்டைப் போட்டதும் புலவர் குடும்பத்தோடு சொந்த நாட்டைப் பார்க்கக் கிளம்பி விட்டார். ஆனல் அங்கிருந்த வீடு வாசல் நிலபுலங்களையெல்லாம் அப்படியே விட்டுவிட்டுக் கையில் கிடைத்த ரொக்கத்தையும் நகைகளையும் மாத்திரம்தான் அவரால் கொண்டுவர முடிந்தது.

சென்னைக்கு வந்ததும் அப்போது மலிவாகக் கிடைத்த ஒரு சிறு வீட்டை விலைக்கு வாங்கிக்கொண்டு குடியேறினர்.

புலவர் தமது வாழ்க்கையில் செய்த மகத்தான தவறு ஒன்று. அதுதான் அவர் கண்ணம்மாளை இரண்டாந்தாரமாகக் கலியாணம் செய்து கொண்டது.

பர்மாவில் இருக்கும் போதே பிரசவத்துக்குப் பிறகு அவரது முதல் மனைவி இறக்கவும் அங்கிருந்த கண்ணம்மாளின் குடும்பத்தார் அவளைப் புலவரின் தலையில் கட்டி விட்டனர். முதல்தாரத்துக்கு ஒரே ஒரு பெண் குழந்தை இருந்தது. கண்ணம்மாளின் பெயரைச் சொல்லிக் கொள்ளச் சந்ததியே ஏற்படவில்லை.

பர்மாவிலிருந்த வரையில் கண்ணம்மாளும் கணவனிடம் மரியாதையாகத்தான் இருந்தாள். ஆனால் சென்னைக்கு வந்த பிறகு கொஞ்சம் கொஞ்சமாக அவளது போக்கில் மாறுதல் ஏற்பட்டது. புலவருக்கு எங்கேயும் கைகட்டிச் சேவை செய்ய விருப்பமில்லை. தமது புலமையைக் கொண்டே பிழைத்து விடலாம் என்று நம்பினர் அவர். தாம் இயற்றிய கவிதைகளையெல்லாம் தொகுத்துப் பிரசுரிக்க வேண்டியதுதான் தாமதம், மக்கள் 'நீ நான்' என்று போட்டி போட்டுக் கொண்டு அவற்றை வாங்கி விடுவார்கள்; நாலு தலைமுறைக்கு வேண்டிய செல்வம் மளமள வென்று சேர்ந்து விடும் என்று மனக்கோட்டை கட்டினர் அவர்.



சொந்தச் செலவில் அச்சடித்து முதல் தொகுதியை வெளியிட்ட சமயத்திலேயே கண்ணம்மாள் பலமாக ஆட்சேபித்தாள். அதற்கேற்றாற் போல் அச்சடித்த புத்தகங்களில் ஒரு பிரதியைக்கூட ஏனென்று கேட்பாரில்லை. ஆனல் புலவர் இதனல் சோர்ந்து போகவில்லை. மேலும் இரண்டு மூன்று தொகுதிகளாவது வெளி வந்து விட்டால் அவரது பெயர் பிரபலமாகிப் பிறகு மளமள வென்று விற்பனை ஆரம்பமாகும் என்ற அசைக்க முடியாத நம்பிக்கையுடன் மற்றத் தொகுதிகளையும் அச்சடித்து விட்டார். ஆனல் அவர் நம்பியிருந்த அந்த 'மக்கள்' அவரைக் காலை வாரி விட்டு விட்டார்கள்.

தம்பதிகளுக்குள் மன வேற்றுமை ஏற்பட்டு விட்டது. வீட்டில் அவரது பேச்சுக்குத் துளிக்கூட மதிப்பில்லாமல் போய் விட்டது.

மனம் குன்றிய நிலையில் ஞாபக சக்தியும் குறையத் தொடங்கியது. இத்தனைக்கும் அவருக்கு ஆறுதலளித்து வந்தவை இரண்டே இரண்டு விஷயங்கள் தான். ஒன்று மகள் சிங்காரி. மற்றொன்று அவரது கவிதை ஆர்வம்.

தளதள வென்று பசுங் கொடி போல் வளர்ந்து பருவ மங்கையாகத் திகழ்ந்த சிங்காரிக்குத் தந்தையின் மீது எவ்வளவோ அனுதாபமும் அன்பும் இருந்தன. எனினும் சிற்றன்னைக்கு எதிராக ஏதும் பேச முடியாத நிலையில் இருந்தாள் அவள். எப்போதாவது தனியாகச் சந்தித்து அவரைத் தேற்றுவாள்.

தோட்டத்துப் பக்கம் இருந்த தமது தனியறையில் பிற்பகல் அணைத்துவைத்த துண்டுச் சுருட்டைத் தேடிக்கொண்டிருந்தார் புலவர். சிங்காரி அச்சமயம் மெதுவாக உள்ளே நுழைந்தாள்.

"என்ன அப்பா தேடிக் கொண்டிருக்கிறீங்க?"

"சுருட்டுத் துண்டை எங்கேயோ வைச்சுட்டேன் அம்மா! அது கிடைக்கவே மாட்டேங்கிறது!"

"இதோ புஸ்தகக் கட்டுக்கு நடுவிலே வைச்சிருக்கிங்களே!" என்று எடுத்துக் கொடுத்தாள் சிங்காரி.

முத்துப் புலவர் தமது மகளை நிமிர்ந்து நோக்கினர். அங்கங்களில் பூரித்துத் திகழ்ந்த அவளது யௌவன உருவத்தைக் கண்டதும் அவருடைய கண்களில் கண்ணீர் சுரந்தது.

"குழந்தை! உனக்காகத்தான் நான் உயிரோடு இருக்கிறேன். உன்னை ஒரு நல்ல இடத்தில் கல்யாணம் கட்டிக் கொடுத்து விட்டால்..."

"அப்பா! இரைந்து பேசாதீர்கள். சின்னம்மா காதிலே விழப் போகுது!"

புலவர் மெதுவாகப் பேசினர்.

"இதோ பாரம்மா, குழந்தை! பர்மாவிலேயிருந்து வரப்போ உன் அம்மாவுடைய நகை ஏராளமாக இருந்தது. அதை யெல்லாம் அப்படியே வைச்சிருந்து உன் கலியாணத்தின்போது போட வேணும்னு நினைத்திருந்தேன். எல்லாத்தையும் அந்த மகராசி பிடுங்கி வைத்துக் கொண்டாள். என்னென்ன நகைகள் இருந்தன என்றே எனக்கு இப்போது நினைவில்லை."

சிங்காரி மெதுவாகக் கூறினள்:

"அப்பா! சின்னம்மாவுக்குத் தெரிந்த வங்க ஒரு அம்மா வருவாங்களே தெரியுமா? மருதம்மான்னு...

"அந்த அம்மா மூலமாக நாலைந்து நாட்களுக்கு முந்திச் சின்னம்மா ஏதோ நகைகளை யெல்லாம் வித்துட்டமாதிரி தெரியுது, அப்பா. அடிக்கடி அவங்க கூடிக் கூடி ரகசியம் பேசறுங்க. நேத்து

சின்னம்மா பீரோவைத் திறந்தபோது நான் எதேச்சையாகப் போனேன். கட்டுக் கட்டாக நோட்டு வைச்சிருந்தது. என்னைப் பார்த்ததும் தடாலென்று கதவைச் சாத்தி 'ஏண்டி இங்கே வந்தே' என்று விரட்டி விட்டாங்க அப்பா!'' என்றாள் சிங்காரி.

புலவருக்கு ஆத்திரம் மூண்டது.

குரல் நடுங்க, ''மகாலட்சுமி போன்ற உன் அம்மாவின் நகைகளைத் தொட இவளுக்கு என்ன அதிகாரம் இருக்கிறது? அந்த நாசகாலியை என்ன செய்கிறேன், பார்!'' என்று குமுறினார் அவர்.

''அப்பா கத்தாதீங்க. வீண் ரகளை வேண்டாம். கொஞ்சம் பொறுமையாக யோசித்து என்ன செய்வது என்று முடிவு பண்ணலாம்'' என்று சமாதானப் படுத்தினாள் அவள்.

''இல்லை, சிங்காரி! அந்தத் துடைகாலி என் எண்ணத்தில் மண்ணைப் போடப் பார்க்கிறாள். வீடு அவள் பெயரில் இருக்கிறது. இப்போது உன்னுடைய நகைகளுக்கும் வழி வைத்து விட்டாள். உன் எதிர்கால வாழ்க்கை நன்றாக இருக்க அவள் சகிக்க மாட்டாள்'' என்று பித்தம் பிடித்தவர் போலக் கத்தத் தொடங்கினார் அவர்.

சிங்காரி சிரமப்பட்டு அவரது வாயைப் பொத்தினாள். ''அப்பா, அப்பா! அதோ பேசுகிறாங்க பார்! அவங்கதான் மருதம்மா'' என்று ரகசியமாகக் கூறினாள். கூடத்தில் அப்போதுதான் விஜயம் செய்திருந்த மருதம்மாளுடன் பேசிக் கொண்டிருந்தாள் கண்ணம்மாள்.

''சமாசாரத்தைக் கேட்டாயா, கண்ணம்மா? நம்ப மந்தாரப்பேட்டை பாங்கியிலே கொள்ளை போயிடுச்சாம். நல்ல காலம். உன் பணத்தை அதிலே போடாமல் தப்பிச்சே! அதுக்குத்தான் நான் அப்பவே இந்தப் பாங்குகளை நம்பிப் பணத்தைப் போடக் கூடாதுன்னு அடிச்சுக்கிட்டேன். எத்தனை ஏழைங்க பணம் போச்சோ!''

''நல்லாச் சொன்னே, மருதம்மா! ஏழைங்க பாங்கியிலேகூடப் பணம் கட்டு வாங்களா என்ன?''

''அப்படி இல்லையே, ஏதோ கையிலே இருக்கிற ஐந்து பத்தை..''

''சரிதான், இந்தப் பிச்சைக் காசுக்கெல்லாம் கணக்குவைக்கத்தான் பாங்கியைத் தொறந்து வைச்சிருக்காங்களா? நம்மைப் போல இருக்கிறவங்களுக்காகத்தான் பாங்கி!''

''ஆமாம், ஆமாம்! நீ சொல்கிறதும் சரிதான்'' என்று ஆமோதித்துத் தாளம் போட்டாள் மருதம்மாள்.

''அப்புறம் நான் சொன்னேனே, அந்த விஷயமா யோசித்தாயா?''

''மெதுவாய்ப் பேசு. அந்தக் கிழக் கோட்டான் காதிலே விழப் போகுது'' என்றாள் கண்ணம்மாள்.

சிறிது நேரம் அவர்களுக்குள் தணிவான குரலில் சம்பாஷணை நடந்தது.

கிழவரின் உள்ளம் குமுறியது.

''குழந்தே! எனக்கு ஒண்ணு தோன்றுகிறது...'' என்று என்னவோ சொல்ல வாயெடுத்தார் அவர். அதற்குள் அங்கு வந்த கண்ணம்மாள் தனது கண்களை உருட்டிச் சந்தேகத்தோடு அவ்விருவரையும் மாறி மாறிப் பார்த்தாள்.

''என்ன பண்ணுறீங்க அப்பனும் மகளும்?''

புலவர் கோபம் கொந்தளிக்க, ''நீ.. நீ...'' என்று ஆரம்பித்து மேலே பேச முடியாமல் தடுமாறினார்.

''சுருட்டைக் காணோமென்று சொன்னார் சின்னம்மா! தேடி எடுத்துக் கொடுத்தேன்'' என்று குழைவாகப் பேசினாள் சிங்காரி.

''எப்பவும் இந்த எழவுதான். சுருட்டைக் காணோம், சுக்கங்காயைக் காணோமின்னு! சரி! சரி! நேரமாகுது. எழுந்திருங்க. சீக்கிரமா இந்திரா டாக்கீசுக்குப் போய் 'கியூ'விலே நின்று இரண்டு பத்தணா டிக்கட்டு வாங்கிக்கிட்டு அங்கேயே கேட்டண்டை நில்லுங்க. நான் வந்து விடுகிறேன்...'' என்று இரண்டு ரூபாய் நோட்டைப் புலவரிடம் நீட்டினாள் கண்ணம்மாள்.

புலவர் ஒருகணம் அவளை உற்று நோக்கினார். இத்தனை நாளுமில்லாமல் தம்மைத்தான் அவள் சினிமாவுக்கு அழைத்துக் கொண்டு போவதாகச் சொல்லுகிறாள் என்று நினைத்துக் கொண்டார் அவர். எனினும் பிகுவை விடாமல்., ''எனக்குச் சினிமாவும் வேண்டாம், ஒன்றும் வேண்டாம். நான் வரமாட்டேன்!'' என்றார் அவர்.

கண்ணம்மாள் அவரை வெறுப்போடு முறைத்துப் பார்த்தாள்,

''ஹூம்! உன்னை யார் கூப்பிட்டாங்க. கஷ்ட காலம்தான்! நீ டிக்கட்டை வாங்கி வைச்சுக்கிட்டு நில்லு. இதோ நானும் மருதம்மாவும் வருகிறோம்...'' என்று ஏக வசனத்தில் கூறினாள்.

அவளது உத்தரவுக்குக் கீழ்ப்படிவதா? அல்லது ஒத்துழையாமை இயக்கத்தை ஆரம்பிப்பதா என்று யோசித்துக்கொண்டிருக்கையிலேயே சிங்காரி கண்ணம்மாளிடமிருந்து பணத்தை வாங்கி, ''இந்தாங்க, அப்பா!'' என்று நீட்டினாள்.

கிழவர் தமது மகளின் முகத்தைப் பரிதாபமாகப் பார்த்துக் கொண்டே பணத்தை வாங்கிக் கொண்டார். ஒரு பெருமூச்சுடன் துண்டை உதறிப் போட்டுக் கொண்டு கிளம்பினார். (தொடரும்)

மூன்றும் அத்தியாயம்

## முதல் வழக்கு!

கண்ணம்மாளிடம் பணத்தைப் பெற்றுக் கொண்ட முத்தையப் புலவர், நேராக இந்திரா டாக்கீஸை நோக்கி நடந்தார். கொட்டகையருகில் வந்த போது அங்கு அதிக ஜனங்கள் இல்லை. பத்துப் பதினைந்து பேரே டிக்கட் வாங்கு மிடத்தில் ஒழுங்காக வரிசையில் நின்று கொண்டிருந்தனர். அவரும் அவர்களுக் குப் பின்னால்போய் நின்றுகொண்டார்.

அப்போது டிக்கட் 'கவுண்டர்' திறக்கப் படவில்லை. கண்ணம்மாள் கொடுத்த இரண்டு ரூபாயையும் தமது கிழிசல் பர்ஸில் போட்டுச் சட்டைப் பையில் வைத்திருந் தார். கூட்டம் தான் அதிகமாக இல்லையே, ஜன்னலுக்கு அருகில் போய்ச் சேர்ந்தவுடன் சாவதானமாகப் பணத்தை எடுத்து டிக்கட் வாங்கிக் கொள்ளலாம் என்று நினைத்தார்.

தியேட்டர் வாசலில் காணப்பட்ட பெரிய விளம்பரம் அவரது கவனத்தைக் கவர்ந்தது. 'லுங்கி' உடுத்திய வசீகரத் தோற்றமுள்ள ஒரு பர்மா அழகி ஒய்யாரக் குடையொன் றைப் பிடித்துக் கொண்டு ஒயிலாக நிற்பது போல் தீட்டப்பட்டிருந்த வர்ணச் சித்திரம் ஒரு ஆள் உயரத்துக்கு நிறுத்தப் பட்டிருந் தது. அதனருகில் 'பர்மா ராணி' என்று பெரிய பெரிய எழுத்துக்களில் எழுதப்பட் டிருப்பதைக் கண்டதும் அவரது உள்ளம் மகிழ்ச்சியினால் நிரம்பியது. என்றும் மறக்க முடியாத அவரது பர்மா வாழ்க்கை நினை வுக்கு வந்தது. எங்கு திரும்பினாலும் பச்சைப் பசேலென்று காட்சியளிக்கும் செழுமை யான நாடு; அவர் வேலை பார்த்த தமிழ்ப் பள்ளிக்கூடம்; நாட்டுக் கோட்டைச் செட்டிமார்கள்; அவரது புலமைக்குக் கிடைத்த பாராட்டுக்கள் ஆகியவை ஒன் றன்மேலொன்றாக மனக் கண்முன்தோன்றின. பழனி யப்பச் செட்டியார் என்ற தனிகர் மீது சிலேடையாக அவர் இயற்றிய கவிதை யொன்றைச் சிரமப்பட்டு நினைவுக்குக் கொண்டுவர

# கான்ஸ்டபிள் கந்தசாமி

ஏ.கே.பட்டுசாமி



சாமா

முயன்றார். என்ன முயன்றும் 'உலகும் உன்தலையும்' என்ற இரண்டே இரண்டு வார்த்தைகளுக்கு மேல் ஞாபகத்துக்கு வரவில்லை. முதலிரண்டு சொற்களையும் திருப்பித் திருப்பிச் சொல்லிக் கொண்டேயிருந்தால் மற்ற வரிகள் தாமாக நினைவுக்கு வந்து விடும் என்ற எண்ணத்துடன், விடாமல் "உலகும் உன் தலையும், உலகும் உன் தலையும்" என்று முணுமுணுத்துக் கொண்டே யிருந்தார். தமக்குப் பின்னால் எண்ணிறந்த ஜனங்கள் 'கியூ' வரிசையில் வந்து நின்றுவிட்டதையோ, மற்றவர்கள் அவரை ஒரு தினுசாகப் பார்ப்பதையோ அவர் கவனிக்கவேயில்லை.

திடீரென்று டிக்கட் ஜன்னல் திறக்கப்பட்டதும் அது வரையில் ஒழுங்காக நின்று கொண்டிருந்தவர்கள் அத்தனைபேரும் தாறுமாறாகக் கலைந்து, தாங்கள் மனிதர்கள் என்பதையே மறந்து ஒரேயடியாக முன்னுக்குத் தாவினர். கூட்டம் அவரை இடித்து முன்னால் தள்ளுவதற்கும் மறந்து போன கவிதையின் முதல் வரி முழுமையும் அவரது நினைவுக்கு வருவதற்கும் சரியாக இருந்தது.

"உலகும் உன் தலையும் உருண்டை வடிவமையா!..." என்று வாய்விட்டுக் கூறியவர் 'லபக்' கென்று முன்னால் உந்தப்பட்டதும் கற்பனை உலகை விட்டு இப்பூவுலகுக்கு வந்தார். நெரிசலில் அவரது மூச்சுத் திணறியது. இனிமேல் பணத்தைக் கையில் எடுத்துக் கொண்டு விடவேண்டியது தான் என்று சட்டைப் பையில் கையைவிட்டார். பை காலியாக இருந்தது! பர்ஸ் பறிபோய் விட்டது என்று தெரிந்ததும் அவரது ரத்தம் உறைந்து விடும்போலாகி விட்டது. என்ன செய்கிறோமென்று தெரியாமல் குழந்தையைப் போல் 'கா கூ' என்று விசித்திரமான குரலொலிகளைக்கிளப்பி அரற்றத் தொடங்கினார். "என்ன, என்ன?" என்று மற்றவர்கள் கேட்ட பிறகு தான், "பர்ஸ் போய்விட்டது!" என்று கூற முடிந்தது.



* * *

சுந்தசாமி உத்தியோகத்தில் சேர்ந்து சுமார் ஒரு மாத காலமாகியது. முதல் நாளே அவன் மந்தாரப்பேட்டை பாங்க் கொள்ளை விஷயமாக விசாரித்துத் தெரிந்து கொண்டான். ஆயுதம் தாங்கிய ஒரு கொள்ளைக் கூட்டத்தினர் நள்ளிரவில் திடீரென்று மோட்டார் காரில் வந்தனர்; காவல்காரரைக் கட்டிப் போட்டுக் கதவை எப்படியோ திறந்து கொள்ளையடித்துக் கொண்டு வந்த சுவடு தெரியாமல் ஓடி விட்டனர் என்பதை யறிந்ததும் அவனுக்கு அளவற்ற ஆச்சரியமாக இருந்தது.

அவன் சாலையூரிலிருந்து வந்த அன்றைக்குத் தான் ஜட்கா வண்டிக்காரனிடம் எங்கேயோ பாங்கிக் கொள்ளை நடந்ததாகவும், தன்னந் தனியாக அவன் கொள்ளைக்காரர்களைக் கைது செய்து விட்டதாயும் பொய்ப் பெருமை அடித்துக் கொண்டான். சென்னையில் கால் வைத்ததும் வைக்காததுமாக உண்மையிலேயே ஒரு பாங்கிக் கொள்ளை அவனது பேட்டையிலேயே, அவனை வரவேற்கத் தயாராய்க் காத்துக் கொண்டிருந்தது!

இன்ஸ்பெக்டர் அளகிரிசாமி நாயுடு ஒருமாத காலமாக மண்டையை உடைத்துக் கொண்டு என்னென்னவோ செய்து பார்க்கிறார். ஆனால் உருப்படியாக அவரால் ஒன்றுமே செய்ய முடியவில்லை. அவனது கற்பனை மட்டும் உண்மையாக மாறினால்!....இன்ஸ்பெக்டர் அவனுக்குத் தகுந்த வாய்ப்பளித்து, அந்தக் கொள்ளைக் கூட்டம் அவன் கையில் வகையாகச் சிக்கிக் கொண்டால்!....

அவனது கற்பனை மேலும் மேலும் உயரத் தாவியது. அவனைப் போலீஸில் சேர்த்து விட்டவர் எழும்



பூர் ஹெட் கான்ஸ்டபிள் ராமசாமி தான். ராமசாமி அண்ணன் பழம் பெருச்சாளி. அவர் கந்தசாமிக்கு எவ்வளவோ சொல்லியிருக்கிறார்.

"கந்தசாமி! நீ மட்டும் ஒழுங்காக நடந்துகொண்டு சில முக்கியமான சந்தர்ப்பங்களில் உனது சாமர்த்தியத்தைக் காண்பித்து விட்டாயானல் உத்தியோகத்திலே மளமள வென்று உயர்வு ஏற்பட்டு விடும். வெறும் கான்ஸ்டபிளாக இருந்தவன் ஹெட்கான்ஸ்டபிள்! பிறகு இன்ஸ்பெக்டர் வேலைக்குக்கூட உயர்வதற்கு வழி இருக்கிறது" என்று அவர் கூறிய வார்த்தைகள் அவனது நினைவுக்கு வந்தன.

அன்று மாலை 'இந்திரா டாக்கீஸ்' பக்கம் அவனுக்கும் கான்ஸ்டபிள் முருகேசனுக்கும் 'டியூடி' போடப்பட்டிருந்தது. தியேட்டரில் டிக்கட்டு வாங்கும் ஜனங்களைக் கண்காணித்துக் கொள்ள வேண்டியது அவனது பொறுப்பு. சுமார் ஐந்து மணிக்கெல்லாம் கந்தசாமி சினிமாக் கொட்டகைக் கெதிரே 'லத்தி' யுடன் ரோட்டில் குறுக்கும்நெடுக்குமாக உலாவிக் கொண்டிருந்தான். அடிக்கொரு முறை தன் 'பாக்கெட்' கடிகாரத்தைத் தொட்டுத் தொட்டுப் பார்த்துக் கொண்டு ஒய்யாரமாக நடந்தான்.

அது மிக அழகான கடிகாரம். முத்தம்மாவின் புருஷனுக்கு ஒரு துரை பரிசாகக் கொடுத்த அக் கடிகாரத்தை அவள் தன் உயிரைப் போல் மதித்துக் காப்பாற்றி வந்தாள். தினந்தோறும் அதற்குச் சாவி கொடுப்பதும் அவள்தான். கந்தசாமி அதைத் தொட்டால் அவளுக்கு மூக்குக்குமேல் கோபம் வந்துவிடும். ஆனல் அவன் போலீஸ் உத்தியோகஸ்தனாக மாறிவிட்ட பிறகு அதை அவனுக்குக் கொடுப்பதில் அவளுக்கு யாதொரு ஆட்சேபணையும் இருக்கவில்லை. சங்கிலி இல்லாமையால் அதையொரு



நூல் கயிற்றில் கட்டிப் பார்வையாக வெளிப்புறத்து ஜேபியில் விட்டு வைத்திருந்தான். அவன் கடியாரம் வைத்திருந்ததைக் கண்டு ஸ்டேஷனிலிருந்த அத்தனை கான்ஸ்டபிள்களுக்கும் வயிற்றெரிச்சல்தான். ஏட்டு (ஹெட்கான்ஸ்டபிள்) கோவிந்தப் பிள்ளை கூடப் பொருமைக்கண்ணேடு அவனைப் பார்த்ததாகத் தோன்றியது அவனுக்கு.

அவனது கடிகாரத்தில் மணி ஐந்தரையானபோது டிக்கட் வாங்கும் இடத்தில் ஜனக் கூட்டம் நெருக்கி அடித்துக்கொண்டிருந்தது.

என்ன ஜனங்கள்! காட்டுமிராண்டிகளைப் போலக் கத்துவதும் 'க்யூ'வில் கூட நிற்கத் தெரியாமல் ஒருவரையொருவர் இடிப்பதும்; அந்தச் சமயத்தில் அத்தனை ஜனங்களும் அவனது பாதுகாப்பில் அல்லவா இருந்தார்கள்! அவன் விரும்பியிருந்தால் அவர்கள் மீது இலேசாக ஒரு 'லத்தி சார்ஜ்' கூடப் பண்ணிவிட முடியும்!

'லத்தி சார்ஜ்' என்று நினைத்ததும் கூடவே அவனுக்குத் தங்கவேலுவைப் பற்றிய நினைவு வந்தது.



அந்த அயோக்கியன் மட்டும் இதைப்போன்ற சமயத்தில் அகப்பட்டுக்கொண்டானென்ருல் கட்டுக் கடங்காத கூட்டத்தின் மீது 'லத்தி சார்ஜ்' செய்கிற சாக்கில் அவனைச் செம்மையாகப் புடைத்து விடலாம். மிஞ்சி ஏதாவது தகராறு பண்ணினனென்ருல் அவனது கிராப்பு மயிரைக் கையினல் அப்படியே பிடித்து ஸ்டேஷனுக்குக் கரகரவென்று இழுத்துக் கொண்டு போய்......

இதுபோல அவன் மனத்தில் நினைத்துத் தங்கவேலுவின் சிகையைக் கையில் பிடித்து இழுத்துக் கொண்டு போவது போல் இடது கையை உயர்த்தி முஷ்டி பிடித்து அபிநயம் நடத்திக் கொண்டிருக்கையில் டிக்கட் கொடுக்குமிடத்தில் பரபரப்பு ஏற்பட்டது.

"ஐயையோ! பர்ஸ் போச்சு! பர்ஸ் போச்சு! அடிச்சுட்டான்; பணமெல்லாம் போச்சு!" என்று ஒருவர் கூச்குரலிடவும் அதைத் தொடர்ந்து "பிக்பாக்கெட்! பிக்பாக்கெட்!" என்று பல குரல்கள் எழுந்து ஒரே அல்லோலகல்லோலமாகப் போய் விட்டது.

கந்தசாமி வீராவேசமாகக் கூட்டத்தில் பாய்ந்தான். கூட்டம் அவனை நெருக்கியடித்தது. எவன் திருடினுலென்ன, யாருடைய பணம் போனுலென்ன என்று தன்னலத்திலேயே குறியாக இருந்த ஜனங்கள் அவன் மீது விழுந்து அலைமோதுவது போல் டிக்கட் 'கவுண்டரை' நோக்கித் தாவினர்.

கந்தசாமிக்கு எரிச்சலாக இருந்தது. போலீஸ்காரன் என்று துளிக்கூடப் பயமில்லாமல் சர்வசாதாரணமாக நினைத்து அவனைக்கூட அல்லவா நசுக்குகிருர்கள்! அவனுக்கு வந்த கோபத்தில் கைத்தடியால் அவர்களது தலைகளைப் பதம் பார்த்து விடலாமா என்று கூடத் தோன்றியது. ஆனுல் திருடனைப் பிடிக்க வேண்டுமே! முதல் முதலாகக் கிடைக்கப் போகும் வழக்கை ஆத்திரத்தினுல் கெடுத்துக்கொண்டு விடலாமா?

அவன் தீரத்துடன் முழங்கைகளால் இடித்துத் தள்ளிக் கொண்டு அந்த ஜன சமுத்திரத்தின் நடுவே புகுந்தான். டிக்கட் கொடுக்கும் ஜன்னலருகே திருதிருவென்று விழித்துக் கொண்டு நின்றிருந்த ஒரு ஆசாமியின் மீது அவனது பார்வை விழுந்தது. 'லபக்' கென்று அவனைப் பிடித்து இழுத்துக் கொண்டு சிங்கம்போல் வெற்றியோடு வெளியே வந்தான் கந்தசாமி.

முன்புறம் வழுக்கையோடிய தலையும் கிழிசல் சட்டையுமாகக் காட்சியளித்த அம்மனிதன் கந்தசாமியின் இரும்புப் பிடியில் சிக்கித் திணறினன்.

பிளாட்பாரத்தின் ஓரமாக அவனை இழுத்துக் கொண்டு போனதும் அவரைச் சுற்றிக் கூட்டம் கூடி விட்டது. இத்தனை ஜனங்களுக்கு முன்னுல் திருடனைப் பிடித்து விட்டோமென்ற மகிழ்ச்சியில் கந்தசாமி அம் முதியவனைப் பிடித்து ஒரு உலுக்கு உலுக்கி அவனது சட்டைப் பையைத் துழாவினுன். ஒரே ஒரு துண்டு சுருட்டைத் தவிர அதில் ஒன்றுமே இல்லாததைக்கண்டு அவனுக்குக் கட்டுக் கடங்காமல் ஆத்திரம் வந்தது.

"ஏ கிழவா!" என்று அதட்டல் போடவும் கிழவன் பயத்தால் நடுங்கிப் போய், "ஊ! ஊ!" என்று அர்த்தமில்லாமல் ஊளையிடத் தொடங்கினன்.

"ஏய்! சும்மா பாசாங்கு பண்ணினல் விட்டு விடுவாங்கன்னு நினைச்சியா! ஹூம், உன்னைப் போல எத்தனை திருடர்களை இந்தக் கையாலே பிடிச்சிருக்கேன்!" என்று உற்சாகத்தோடு கர்ஜித்தான் அவன்.

"என் பணப் பையைத்தான் யாரோ அடிச்சுட்டாங்கையா!" என்று குழறிக் கொண்டே கூறினன் கிழவன்.

சுற்றிலும் இருந்தவர்கள் கலீரென்று நகைத்தனர். சில சோம்பேறிகள் சீழ்க்கை யடித்தனர். எவனே ஒருவன் "சரியான சூரனையா! இப்படியல்ல திருடனைப் பிடிக்க வேணும்!" என்று கூறிக்கொண்டே நகர்ந்தான்.

கந்தசாமிக்கு அவமானமும் ஆத்திரமும் போட்டி போட்டுக் கொண்டு பொங்கின. அந்த விவேக மற்ற ஜனங்களை அப்படியே



நொறுக்கிவிட வேண்டும் போலிருந்தது. "போங்கையா! இங்கே என்ன கூட்டம் போடுகிறீங்க! போ அப்பாலே!" என்று அவன் அதட்டவும் அவர்கள் மூலைக்கு ஒருவராகப் பிய்த்துக் கொண்டு ஓடி விட்டனர்.

இப்போது அவனது கோபம், இத்தனைக்கும் காரணமாக இருந்த அந்தக் கிழவன் மீது பாய்ந்தது.

"ஏய் கிழட்டுப் பயலே! நிசத்தைச் சொல்லு! உன்னுடைய பர்ஸா திருட்டுப் போச்சு?"

"ஆமாமய்யா!..."

"யார் திருடினது?"

"அதுதானே தெரியவில்லை!"

"என்னய்யா அதிசயமாக இருக்குது! உன் சட்டைப் பையிலே கையைவிட்டு 'அபேஸ்' பண்ணுகிற வரைக்கும் சும்மா ஆடு கணக்கா இருந்து விட்டு இப்ப வந்து போலீஸ்காரன் கழுத்தை அறுக்கிறயே! இதோ பார், இந்தத் தடவை உன்னை மன்னிச்சேன்! இனிமேல் இது மாதிரி அஜாக்கிரதையாக இருந்தே, அப்புறம் அவ்வளவுதான்! தொலைஞ்சு போ!" என்முன் கந்தசாமி.

ஆனல் அந்தப் பிரகிருதி நகரவில்லை. தயங்கிக் கொண்டே, "என் பணப் பை...." என்று இழுத்தான்.

கந்தசாமிக்கு அவனது அதிகப் பிரசங்கித்தனத்தைக் கண்டு ரோஷம் பொத்துக் கொண்டு வந்தது. அவனது கழுத்தில் கையைக் கொடுத்துத் தள்ளிக் கொண்டே, "வா ஸ்டேஷனுக்கு! நீ பர்ஸைத் தொலைக்கவில்லை! என்கிட்ட அளக்காதே! உன் முகத்தைப் பார்த்தாலே தெரியுது நீ பக்கா திருடனென்று......" என்று உறுமினன்.

கிழவன் பரிதாபமாக அலறினன். ஜனங்கள் தூரத்திலிருந்து இன்னும் வேடிக்கை பார்த்துக் கொண்டு நின்றனர். தவிரவும் தூரத்தில் கான்ஸ்டபிள் முருகேசன் வேறு அவனை நோக்கி வந்து கொண்டிருந்தான். ஆகவே விஷயம் விரசமாவதற்குள் சட்டைப் பையிலிருந்து தனது குறிப்புப் புத்தகத்தையும் பென்ஸிலையும் கையில் எடுத்துக் கொண்டான்.

"ஏய்! உன்னுடைய பெயரென்ன?"

"முத்துப் பிள்ளை."

"விலாசம்?"

"14, காளிங்கராயன் தெருவு."

"சரி, இப்போதே ஓடிப் போ! இனிமேல் இந்தப் பக்கம் திரும்பிப் பார்க்காதே!" என்முன் அதட்டலாக.

முத்துப் புலவர் தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு பித்தம் பிடித்தவர் போல் திரும்பி நடந்தார்.

அதற்குள் அங்கு வந்து சேர்ந்த முருகேசன், "என்ன கந்தசாமி, என்ன கூட்டம்?" என்முன்.

"சும்மா இந்த பிக்பாக்கெட் களுதைங்க 'கலாட்டா' பண்ணிச்சு! பிடிச்சு ரெண்டு குடுத்து 'வார்னிங்' பண்ணி அனுப்பினேன்!" என்று சிரித்துக் கொண்டே சாமர்த்தியமாகப் பதிலளித்தான் கந்தசாமி.

"போகட்டும், கந்தசாமி! உன் கடிகாரத்திலே மணி என்ன ஆச்சு?"

கந்தசாமி கடிகாரத்தை எடுக்க நூல் கயிற்றை இழுத்தான். கயிறு மாத்திரம் வந்தது. கடிகாரம் வரவில்லை. சட்டைப்

பையைத் தடவிப்பார்த்தான். அவனுக்குப் பகீரென்றது.

சுமார் பத்து நிமிஷங்களுக்கு முன்னால் அந்தப்புரத்து ராணியைப் போல் சட்டைப்பையில் அலங்காரமாக வீற்றிருந்த அருமைக் கடிகாரம் அங்கே இல்லை......! போலீஸ்காரனிடத்தில் பிக்பாக்கெட்டா!

முருகேசன் விஷயத்தைப் புரிந்து கொண்டவன் போல் சிரித்தான்.

கந்தசாமியின் முகம் கறுத்து விட்டது.



புலவர் மெதுவாகச் சாலையோரமாக நடந்தார். அந்தப் போலீஸ்காரன் அவரது கழுத்தில் கையை வைத்து மரியாதைக் குறைவாகப் பேசி இம்சித்த துக்கத்தைக் கூட அவர் பொருட்படுத்தவில்லை. ஆனால் கண்ணம்மாளுக்கு என்ன பதில் சொல்லுவது? நடந்த விஷயத்தைக் கூறினால் நம்புவாளா அவள்?.. அவரை உயிரோடு வதைத்து விடமாட்டாளா!....

யாராவது இரண்டு ரூபாய் கடன் கொடுத்தார்களானால் விஷயத்தை வெளியே சொல்லாமல் ஓடிப்போய் டிக்கட்டை வாங்கிவிடலாம். ஆனால் அவரை நம்பி இரண்டணாக் காசு கொடுப்பவர்கள் கூட இல்லை என்றால் இரண்டு ரூபாய்க்கு எங்கே போவது? நினைத்த போது அவருக்குப் பணம் கிடைக்க இது என்ன பர்மா நாடா?....

பர்மா என்ற ஞாபகம் வந்ததும் கூடவே அவரது புலமையின் நினைவும் அதைத் தொடர்ந்து அவர் வெளியிட்ட புலமை மிக்க புத்தகங்களின் நினைவும் வந்தன. அவருக்குப் பளிச் சென்று ஒரு மார்க்கம் தோன்றியது.

எத்தனையோ புத்தகக் கடைகளில் அவரது கவிதைப்புத்தகங்களைப் போட்டு வைத்திருந்தார் அவர். நூற்றுக் கணக்கான பிரதிகள் வருடக் கணக்காக அக் கடைகளில் தூங்கிக் கொண்டிருந்தன. ஆனால் ஒருவராவது இதுவரையில் அவருக்கு ஒரு செல்லாக் காசுகூடக் கொடுத்ததில்லை. இத்தகைய ஒரு இக்கட்டான சந்தர்ப்பத்தில் அவர்களில் யாராவது ஒருவரை உதவி கேட்டால்?..

அடுத்த வீதியிலிருந்த 'பரதேசி நூலகம்' அவரது மனக்கண் முன் தோன்றியது. விடுவிடென்று நடந்தார்.

அந்தச் சிறிய புத்தகக் கடையின் சொந்தக்காரர் பரோபகாரம் பிள்ளை ஒரு சிறிய முக்காலியின் மீது உட்கார்ந்து, யாராவது புத்தகம் வாங்க வருகிறார்களா என்று தெருவில் போகிறவர்களையெல்லாம் ஆவலோடு பார்த்துக் கொண்டிருந்தார். புலவருக்கு நம்பிக்கை பிறந்தது. முன்புறத்திலிருந்த கண்ணாடி அலமாரியில் 'அல்லிஅரசாணிமாலை' 'தேசிங்கு ராஜன்' 'மதனகாம ராஜன்'— இந்தப் புத்தகங்களுக்கு நடுவே தமது சொந்த சிருஷ்டிகளான 'பஞ்சத்து ஆண்டியும்' 'பர்மாப் பரதேசி'யும் கம்பீரமாக வீற்றிருந்ததைக் கண்டு பெருமிதமடைந்தார் முத்துப் புலவர்.

கடையை நோக்கி யாரோ வருவதைக் கண்டதும், ஏதோ 'கிராக்கி' தான் வருகிறது என்று மகிழ்ச்சியோடு பற்களைக் காட்டி 'வாங்க வாங்க' என்று வரவேற்ற பரோபகாரம் பிள்ளை முத்துப் புலவரைப் பார்த்ததும் நீண்ட பெருமூச்சு விட்டார்.

புலவர் இங்கிதம் தெரிந்தவர். மனிதனைப் பார்த்ததுமே வெட்டு ஒன்று துண்டு இரண்டாகப் 'பணத்தை எடு!' என்பது தமிழ்ப் பண்புக்கே முரணானது என்று அவர் அறிவார். ஆகவே முதலில் ஒரு கூழைக் கும்பிடு போட்டு விட்டு முகத்தில் சிரமப்பட்டுப் புன்னகையை வரவழைத்துக் கொண்டு, "என்ன பரோபகாரம் பிள்ளைவாள், நலம் தானே?...." என்று அவரிடம் மெதுவாகக் குசலம் விசாரித்தார்.

சில மாதங்களாகத் தம் கடைப் பக்கமே தலை காட்டாமலிருந்த புலவர் திடீரென்று அன்று தோன்றியதும் பரோபகாரம் பிள்ளைக்கு ஓரளவு ஆச்சரியமாகக் கூட இருந்தது. "அட, இருக்கீங்....களா....! நான் வேறு மாதிரி நினைச்சுட்டேன்" என்றார்.

அதன் உட்பொருளை உணர்ந்து கொள்ள மாட்டாத முத்துப் பிள்ளை, "பின்னே, நான் மீண்டும் பர்மாவுக்குப் போய் விட்டதாக நினைத்தீர்களா?" என்று கேட்டார். அவர் முகத்தில் ஏதோ விவரம் தெரியாத சந்தேகப் பார்வை தோன்றியது. (தொடரும்)



# கான்ஸ்டபிள் கந்தசாமி

ஏ.கே.பட்டுசாமி

நான்காம் அத்தியாயம்

## சிருஷ்டிகர்த்தாவும் பிரசுரகர்த்தாவும்

முத்துப் புலவர் முகத்தில் தோன்றிய சந்தேகக் குறியைக் கண்டதும், "சேச்சே! அப்படி நினைப்பேனா! பர்மாவுக்குப் போனால்தான் சொல்லிலிட்டுப் போவீங்களே! ...... உம்......இப்போ எங்கே வந்தீங்க? உங்க புஸ்தகத்திலே ஒண்ணுகூட விற்கல்லே!" என்றார் பிரசுரகர்த்தர் பரோபகாரம் பிள்ளை.

"மெதுவாக விற்கட்டும். அதைப் பற்றிக் கவலையில்லை......"

"அட! உமக்குக் கவலையில்லை, ஐயா! அந்தச் சனியனைச் செல்லு பிடிக்காமல் கட்டிக் காப்பாத்துகிற கவலையெல்லாம் எனக்கல்ல இருக்குது!"

"போகட்டும், பிள்ளைவாள், இப்ப நான் வந்த காரியம் என்னவென்றால், அவசரமாக ஒரு இரண்டு ரூபாய் தேவைப்படுகிறது...."

"அதுக்கு?"

"கொஞ்சம் ஒத்தாசை பண்ணினீர்களென்றால்... ..."





''சரிதான், காலையிலே இருந்து போணியே ஆகல்லேன்னு சஞ்சலப்பட்டுக்கிட்டிருக்கிறேன்! நீங்க என்னடான்னு இரண்டு ரூபாய்க்கு வந்துட்டீங்க!''

''ரொம்ப அவசரமில்லாவிட்டால் நான் உங்களைத் தொந்தரவே பண்ண மாட்டேன். இந்தத் தடவை....''

''அட சரிதானய்யா, நீரும் உம் புஸ்தகமும்! அந்த எளவைத் தும்பு தட்டி இங்கே இத்தனை காலம் வச்சிருந்ததுக்கு நீங்களல்ல எனக்கு வாடகை தரணும்!''

''கையிலிருந்த பணம் காணுமல் போய்விட்டது, பிள்ளைவாள். கொஞ்சம் தயவுபண்ணுங்க'' என்று மேலும் கெஞ்சினுர் புலவர். ''நீங்க என் கணக்கில் கொடுத்தாலும் சரி, கடனுகக் கொடுத்தாலும் சரி!''

கடைக்காரருக்குக் கோபம் வந்தது.

''ஓய், பொல்லாத புலவரையா நீர்! உம் புஸ்தகத்தை என் அலமாரியிலே வாங்கி வைத்ததற்கு அபராதமா கேட்கறே! கடன் கொடுக்க இது என்ன வட்டிக் கடைன்னு நெனேச்சுக்கிட்டியா? மரியாதையா இப்போழுதே உங்க புஸ்தகத்தையெல்லாம் தூக்கிட்டுப்போய்யா, இடமாவது காலியாகும்!'' என்று எரிந்து விழுந்தார் நெஞ்சில் ஈரமே இல்லாத 'பரோபகாரம்' பிள்ளை.

புலவருக்குத் துக்கமும் அவமானமும் சேர்ந்து தொண்டையில் உருண்டையாக அடைத்துக் கொண்டது போலிருந்தது. தாயானவள் தன்னை யாராவது திட்டி விட்டால் கூடப் பொறுத்துக் கொள்வாள். ஆனுல் தான் பெற்றெடுத்த செல்வத்தை யாராவது பேச்சுவாக்கில் 'உதவாக்கரை', 'மண்டு' என்று சாதாரணமாகப் பழித்து விட்டால்கூட அவளால் அதைச் சகித்துக் கொள்ளவே முடியாது. தன் பேச்சு செல்லக்கூடிய இடமானுல் சண்டை பிடித்துத் தீர்த்து விடுவாள். அப்படிச் செய்யக் கூடிய நிலையில் அவள் இல்லையென்ருல் தனிமையில் உட்கார்ந்து ஒரு குரல் அழுதாவது தன் துயரத்தைக் குறைத்துக் கொள்வாள். எழுத்தாளர்கள், கவிஞர்கள் ஆகியோரது நிலையும் இதேபோன்றதுதான். எத்தனைதான் உலகவியல் தெரிந்தவர்களாக இருந்த போதிலும் தங்களது சிருஷ்டிகளை யாராவது துச்சமாகப் பேசி விட்டார்களென்ருல் அவர்களது மனம் புண்பட்டுப் போகும். வெளிக்குக்



காண்பித்துக் கொள்ளாவிடினும் உள்ளுக்குள் வேதனை அவர்களது உள்ளத்தை அறுத்துக் கொண்டேதான் இருக்கும். பிறருக்குச் சர்வ சாதாரணமாகத் தோன்றும் இவ்விஷயம் அவர்களுக்கு இரவெல்லாம் தூக்கத்தைக் கெடுத்து மனத்தை உழற்றிக்கொண்டேயிருக்கும்.

பரோபகாரம் பிள்ளையின் கடுஞ் சொற்கள் முத்துப் புலவருக்கு அளவற்ற துயரத்தைக் கொடுத்தன. தம்மைத் திட்டியதைவிடத் தமது அருமை நூல்களைச் 'சனியன்' 'இழவு' என்றெல்லாம் திட்டியதுதான் அவரது மனத்தை அறுத்தது. எனினும் அவரைப் போன்ற அவலநிலையிலுள்ளவர்கள் மனம் புழுங்கித் தவிப்பதைத் தவிர வேறு என்ன செய்துவிட முடியும்?

அவரது இருதயம் கனத்தது. இன்று யார் முகத்தில் விழித்தோமோ என்று வருந்திய வண்ணம் வந்த வழியே திரும்பி விரக்தியோடு நடந்தார்.

பொழுது அஸ்தமித்து இருட்டிவிட்டது. வீதிகளில் மின்சார விளக்குகள் பளிச்சிட்டன. எப்போதுமே விளக்கு வைத்தவுடன் பார்வை மங்கி விடும் அவரது கண்களுக்கு எதிரே வரும் ஆசாமிகள் கூடத் தெளிவாகத் தெரியவில்லை. ஒரு புல்லுக்காரியின் மீது மோதித் திட்டு வாங்கிக் கட்டிக்கொண்டு, ஓசைப்படாமல் வழுக்கிக்கொண்டே ஓடி வந்த ஒரு புத்தம் புதிய மோட்டார்காரில் அரைபடுவதிலிருந்து மயிரிழை தப்பி, தட்டுத் தடுமாறி நடந்து கொண்டேயிருந்தார்.

புத்தகக் கடைவீதியை விட்டுக் குறுக்குச் சந்தில் திரும்பும்போது, அவர் யாரை நினைத்துப் பயந்து கொண்டிருந்தாரோ, அந்தத் துர்த் தேவதையின் குரல் கணீரென்று கேட்டது. சடக்கென்று ஓரமாக ஒதுங்கி மூச்சை அடக்கிக் கொண்டு நின்றார்.

"அந்தக் கிழம் எங்கே போய்த் தொலைஞ்சுதுன்னு தெரியலையே!.. ஏதாவது வண்டியிலே மாட்டிக்கிட்டிருக்குமோ, மருதம்மா...?" என்றது கண்ணம்மாளின் உரத்த குரல்.

"நல்லாச் சொன்னே? அதுவா வண்டியிலே மாட்டும்! நம்மைப் போல் பத்துப் பேரை மாட்ட வைக்கும்! நான் சொல்கிறேன்னு கோவிக்காதே, கண்ணம்மா! அந்த மனுசனுக்கு உன் கிட்டத் துளிக்கூடப் பயமில்லை. நம்ம இரண்டு பேரையும் இப்படி நடுச் சந்தியிலே அலையவைச்சுட்டு, கையிலே பணம் கிடைச்ச தெம்பில் எந்த ஓட்டலிலே உட்கார்ந்து மொக்குதோ...!" என்று குத்திக் கொடுத்தாள் மருதம்மாள்.

"ஆகட்டும், வீட்டுக்கு வரட்டும், சொல்லுகிறேன். இதுங்களை யெல்லாம் வைக்கிற இடத்திலே வைக்கணும்!"

அதற்கு மேல் அவர்கள் பேசியது அவரது காதில் விழவில்லை. குரலொலி சிறிது சிறிதாக மங்கிக்கொண்டே போய் ஓய்ந்து விட்டதிலிருந்து தோழிகள் இருவரும் அவரைத் தாண்டிக் கொண்டு சுமார் முப்பதுகஜ தூரமாவது போய் விட்டிருப்பார்கள் என்பதை அவர் உணர்ந்து கொண்டார். பின்னும் சிறிது நேரம் வரையிலும் கூட அவர் பதுங்கியிருந்த இடத்தை விட்டு வெளியே வரவில்லை. அங்கேயே நின்று நிலைமையை அலசிப் பார்த்தார்.



சாதாரண நாட்களிலேயே அவருக்கு வீட்டில் 'மதிப்பு' அதிகம். இன்றுசினிமாவுக்குப் போகமுடியாமல் போனதுமட்டுமின்றிச் சிநேகிதியும் அவளும் தியேட்டர் வாசலில் அவரைத் தேடி அலைந்திருக்கிருர்கள். 'மகிஷாசுர மர்த்தனிக்கு' மருதம்மாள் தூபம் வேறு போட்டிருக்கிருள். இந்த நிலையில் 'பணத்தைத் தொலைத்து விட்டேன்' என்று சொல்லிக் கொண்டு அவள் எதிரில் போய் நிற்கவேண்டியதுதான் தாமதம், இரைதேடி அலைந்து கொண்டிருக்கும் புலியின் எதிரே ஆட்டுக் குட்டி, நியாயம் கேட்கப் போன கதையாகத் தான் முடியும்.... அப்படியே பிடுங்கித் தின்று விடுவாள்.

"வரட்டும், சொல்கிறேன்!" என்று அவள் கறுவியவண்ணம் போனதை எண்ணியதும் அவருக்கு எலும்பு வரையில் குளிர் எடுத்தது.

அன்றிரவு வீட்டுக்குப் போவது என்பது நடவாத காரியம். சாப்பாட்டையும் தூக்கத்தையும் பற்றிக் கனவுகாணமுடியாது. மேற்கொண்டு என்ன செய்வது? அவளுக்கு எப்படிப் பதில் சொல்லிச் சமாளிப்பது என்று நன்ருக யோசித்து முடிவு செய்து கொண்டுதான் வீட்டுப் பக்கம் போக வேண்டும் என்ற தீர்மானத்துடன் அவர் வீடு இருந்த திசைக்கு எதிர்த் திசையை நோக்கி நடக்கலானர். எங்குபோகிருேம் என்பது அவருக்கு நிச்சயமில்லை.

*  *  *

கடிகாரம் போனதில் கந்தசாமிக்கு மிகுந்த வருத்தம். அவனைப் பற்றிப் பெருமையாக எண்ணிக் கொண்டிருந்த முத்தம்மாளிடம் இந்த வெட்கக் கேட்டை எப்படிச் சொல்லுவது? கணவனுடைய ஞாபகச் சின்னமாக அவள் போற்றிப் பாதுகாத்து வந்த அந்தப் பொருள் போய் விட்டது என்று அறிந்தால் அவள் உயிரே போய்விட்டது போல ஊளையிடுவாள். அவன் தயக்கத்தோடுதான் அன்று வீடு திரும்பினன்.

உள்ளே நுழைந்ததும் நுழையாததுமாக முத்தம்மாள் முகமலர்ச்சியோடு அவனை வரவேற்ருள்.

"தம்பி! மாமன்கிட்டே யிருந்து கடுதாசி வந்திருக்குது. அவரும் முனியம்மாவும் இங்கே வருகிருர்களாம்!" என்று கூறினள்.

இச் செய்தியைக் கேட்டதும் அவனது முகம் சுருங்கியது. மாமனிடத்தில் அவனுக்கு விரோதமில்லை. ஆனல் முனியம்மாளைத்தான் அவனுக்குக் கட்டோடு பிடிக்கவில்லை. கிளி மூக்கும் அசட்டுப் பேச்சும் அநாகரிகமுமாக இருந்த அவளை அவன் சாதாரண ஆசாமியாக இருந்த சமயத்தில் கட்டிக் கொள்ளத் துடித்தான். ஆனல் இப்போது போலீஸ் வீரனகத் திகழும் அவனது அந்தஸ்துக்கு முனியம்மாள் ஏற்றவளாகப் படவில்லை.



உடையைக் கழற்றிக் கொண்டே, "எதற்கு வருகிருர்களாம்?" என்று கேட்டான்.

"என்னடா தம்பி இப்படிக்கேட்கிருயே! நான்தான் கல்யாண விஷயமாகப் பேசி முடிவு பண்ணலாம்னு வரச்சொல்லி எழுதியிருந்தேன்!"

"யாரைக் கேட்டுக்கிட்டு எழுதினே!" என்று சற்றுக் கடுமையாகவே கேட்டான் கந்தசாமி.

முத்தம்மாளுக்குத் தம்பியின் அதிகார தோரணையான பேச்சைக் கேட்டதும் 'சொரேர்' என்றது.

"ஏண்டா! உன்னைக் கேட்டுக்கிட்டுத்தான் ஒவ்வொரு காரியமும் செய்யணுமோ! பெரிய கவர்னர்ன்னு எண்ணம் போலே இருக்குது! உறவு விட்டுப் போகாமல் இருக்கணும்னு பெரியவங்க சொல்கிறபடிதான் கேட்கணும்!" என்று அழுத்தம் திருத்தமாகக் கூறினள் அவள்.

"நம்ப அந்தஸ்துக்குப் போயும் போயும்..."

"அந்தஸ்து வேறே வைச்சிருக்குதா நமக்கு; அன்றைக்குச் சூரன் மாதிரி போய் என் ஜன்ம விரோதி காலிலே தடால்னு வழிக்கி விழுந்து வச்சியே! அப்பவே என் அந்தஸ்து மண்ணோடே மண்ணாய்ப் போச்சே!"

கந்தசாமியினல் இந்தச் சுடுசரத்தைத் தாங்கிக் கொள்ள முடியவில்லை. 'வீட்டிலுமா இந்த அவமானம்? அக்காளா இப்படிப் பேசுகிருள்?' என்று மலைத்தான். வாய் திறவாமல் உத்தியோக உடுப்பைக் கழற்றி மடித்து வைத்தான்.

மௌனமாகப் பார்த்துக் கொண்டிருந்த முத்தம்மாள், "கடிகாரத்தை

எங்கேவைச்சே? சட்டையிலேயா வைச்சு மடிச்சுட்டே?'' என்று கேட்கவும் அவனுக்குப் பகிரென்றது. ஒரு சச்சரவுபோய் இன்னொன்று வந்துவிடப் போகிறதே என்று பயந்தான். பதில் பேசாமல் ஏதோ ஒரு தீர்மானத்துக்கு வந்தவன் போல் வேறு ஒரு சட்டையை எடுத்து மாட்டிக் கொண்டு கிளம்பினான்.

''எங்கேடா தம்பி சாப்பிடாமல்கூடப் புறப்பட்டுவிட்டே? நல்லதைச் சொன்னால் அதுக்குப் போய்...''

மேற்கொண்டு அவள் கூறியவற்றைக் கேட்க அவன் அங்கே இல்லை. வேகமாக நடந்து ஒரு ஹோட்டலில் வயிற்றை நிரப்பிக் கொண்டு நேராக ராவணகான சபாவை அடைந்தான்.

## ஐந்தாம் அத்தியாயம்
# சங்கீத கோவலன்

வெளியில் பாண்டு வாத்தியம் முழங்கிக் கொண்டிருந்தது. இரவு வீட்டுக்குப் போகாமலிருந்தால் ஒருகால் முத்தம்மாள் வழிக்கு வந்து விடலாம் என்று தோன்றியது. ஒரு பெஞ்சு டிக்கட்டை வாங்கிக் கொண்டு அவன் கொட்டகையினுள் நுழைவதற்கும் நாடகம் ஆரம்பிப்பதற்கும் சரியாக இருந்தது.

முதலில் கதையின்போக்கு அவனுக்குச் சுவாரஸ்யப் படவில்லை. ஆனால் கோவலனின் விவாகக் காட்சியிலிருந்து நாடகம் களை கட்டி விட்டதாக நினைத்தான்.

மாதவியின் அழகைக் கண்டு நாடக மேடையிலிருந்த கோவலன் மாத்திரம் மயங்கவில்லை. கந்தசாமிகூடச் சொக்கித்தான் போனான். கையில் மாலையொன்றைத் தாங்கி ஒய்யாரமாக அபிநயம் பிடித்து அவள் சுழன்று சுழன்று ஆடிய போது அவனுக்கு அந்தக் கொட்டகையே சுழல்வது போலிருந்தது. அவளது கண்களின் சுழற்சியோடு அவனது இருதயமும் சுழன்றது. மார்பில் கையை வைத்து அழுத்திக் கொண்டான்.

கையிலிருந்த மாலை யார் கழுத்தில் போய் விழுகிறதோ அந்த ஆசாமியைத் தனது மணவாளனாக வரிக்கப் போவதாக வாக்குறுதி செய்து விட்டு மாலையைச் சுழற்றிக் கொண்டே ஹார்மோனியத்தோடு சேர்ந்து பாடத் தொடங்கினாள் அவள்.

''மாலை யொன்றைக் கையில்
கொண்டு சுழற்றியே
மண்டபத்தில் நின்று விசிடுவேன் - அது
வந்து கழுத்தில் விழுந்தவரை - மண
வாளனாகக் கொண்டு ஏகிடுவேன்!''

நாடகம் பார்க்கிறோமென்ற நினைவே மறந்து விட்டது அவனுக்கு. அந்த மாலை தன் கழுத்தில் வந்து விழுந்துவிடக் கூடாதா என்று கூடச் சபலம் தட்டியது. ஆனால் அந்தப் பொல்லாத மாலை சொல்லி வைத்தாற்போல் கோவலனின் கழுத்தில்தான் போய் விழுந்தது.

''பொம்பளை என்றால் இப்படியல்லவா இருக்கணும்!'' என்று தன்னை மறந்த நிலையில் அவன் கூறவும் அருகிலிருந்தவர்களெல்லோரும் அவனை ஒரு தினுசாகப் பார்த்தார்கள்.

''அந்த அம்மா யாருங்க?'' என்று தன் பக்கத்திலிருந்தவரைக் கேட்டான்.

''எல்லாம் 'அமெச்சூர்' நடிகருங்க, ஸார்!'' என்றார் அந்த மனிதர்.

கந்தசாமியின் பள்ளி வாழ்க்கையில் 'அமெச்சூர்' என்ற வார்த்தை கற்பிக்கப் படவில்லை. 'திருச்சூர்' 'திருப்பாச்சூர்' என்பதைப் போல் 'அமெச்சூர்' என்பதும் ஒரு ஊரின் பெயராகத்தான் இருக்கும் என்று எண்ணிக் கொண்டான்.

''எங்கே இருக்குதுங்க அமெச்சூரு?'' என்று அவன் மீண்டும்கேட்கவும் அருகில் இருந்த அத்தனைபேரும் கொல்லென்று சிரித்து விட்டனர்.

மேடையில் கோவலன் மாதவியின் வீட்டுக்கு வந்து சேர்ந்து விட்டான். அவளுக்குப் பொன்னும் மணியுமாக வாரி வழங்கினான். கோவலன் செட்டியார் கொடுத்த 'நெக்லேஸ்' உண்மையிலேயே வைரம்தான் என்றனர் சிலர். மற்றும் சிலர் வெறும் கண்ணாடிக் கற்கள் என்றனர். முதலில் பேசியவர் ''இல்லை ஸார், அமெச்சூர் நடிகர்களானதால் நிஜ வைரமாலையையே இரவல் வாங்கிக் கொண்டு வந்து விட்டனர்'' என்றார்.

எது எப்படியாயினும் ஒளி வீசிய அந்த ஆபரணம் மாதவியின் அழகைப் பன் மடங்கு அதிகரித்துக் காட்டியது.

சிறிது நேரம் கழித்து மாதவி வீட்டுக் காட்சி மாறியது. கண்ணகி இறந்து விட்டாளென்ற பொய்ச் செய்தியைக் கேள்வியுற்ற கோவலன் அதை உண்மை என்று நம்பி ஒப்பாரி வைக்கத் தொடங்கினான். கந்தசாமிக்கு அதைக் காணச் சகிக்கவில்லை. ஒரு 'சிங்கிள் சாயா' வாவது போட்டு விட்டு வரலாம் என்று நினைத்து வெளியே எழுந்து வந்தான்.

அப்போது சுமார் ஒருமணியிருக்கும். சுக்ல பக்ஷத்துச் சந்திரன் மறைந்து சிறிது நேரந்தானாயிற்று. வானத்தில் இறைந்து

கிடந்த நட்சத்திரங்கள் மாதவியின் ஆபரணங்களிலிருந்த வைரங்களைப் போல் சுடர் விட்டுக் கொண்டிருந்தன. வீதியில் ஜன நடமாட்டமேயில்லை. அவனைத் தவிர கொட்டகையை விட்டு யாருமே வெளிவரவில்லை.

டீக் கடை கூட மூடப்பட்டு விட்டது. என்ன செய்வதென்று தோன்றாமல் கொட்டாவி விட்டுக் கொண்டு சுவரோரமாகக் கொஞ்ச தூரம் நடந்தான். அவன் நின்ற இடம் தியேட்டருக்குப் பின்புறமாக இருந்தது. அங்கே தன்னந்தனியாக ஒரு பழையமாடல் மோட்டார் கார் நிறுத்தப்பட்டிருப்பதைக் கவனித்தான். டிரைவரைக்கூடக் காணவில்லை. இதே சமயம் தியேட்டரின் பின்புறக் கதவு 'கிரீச்' என்ற சத்தத்துடன் வேகமாகத் திறந்தது.



கந்தசாமி பீடியைச் சடக்கென்று அணைத்து விட்டுச் சத்தம் வந்த திசையை நோக்கித் திரும்பினான். கொஞ்சமாகத் திறந்த கதவின் வழியே தலையில் கறுப்புத் துணியால் முக்காடிட்ட ஒரு உருவம் வெளியே வந்தது. அவன் உஷாராக நின்று கவனித்தான். வந்தது ஒரு பெண் பிள்ளை என்று நிச்சயமாகத் தெரிந்தது. பட்டுச் சேலை சலசலத்தது. அவளும் அவனைக் கவனித்து விட்டாள்.

''டிரைவர்!'' என்று சன்னமான குரலில் கூப்பிட்டாள் அந்தப் பெண்.

கந்தசாமிக்கு மயிர்க் கூச்செடுத்தது. சந்தேகமேயில்லை. அது அவன் மனத்தைக் கவர்ந்த மாதவியின் குரல் தான். அவனைத்தான் அவள் டிரைவர் என்று நினைத்துக் கொண்டாள் போலும்!

''மாதவி அம்மாவுங்களா! வாங்க, வண்டியிலே உட்காருங்க. நான் போய் டிரைவரைத் தேடிக்கிட்டு வருகிறேன்'' என்று கூறிக் கொண்டே ஓடிப் போய்க் காரின் கதவைத் திறந்தான். அவள் முன் புறத்து ஆசனத்தில் உட்கார்ந்து கொண்டு ''ரொம்ப தாங்க்ஸ், நீங்க டிரைவரைக் கூப்பிட வேண்டாம். கொஞ்சம் 'ஸ்டார்டிங் ஹாண்டிலை' மாத்திரம்..'' என்று இழுத்தாள். கந்தசாமிக்குத் தலை கால் புரியவில்லை.

''ஹாண்டில் போடணுமா, இதோ ரெடி!'' என்று கூறிக் கொண்டே முன் புறத்தில் தொங்கிக் கொண்டிருந்த இரும்புப் பிடியைச் சுழற்றினான். எஞ்சின் அலறத் தொடங்கியது. அவன் பல்லைக் காட்டிக் கொண்டே ஒதுங்கி நின்றான். வண்டி 'விர்' ரென்று கிளம்பி விட்டது.

வண்டி போனபிறகு தான் அவனுக்குத் தோன்றியது. 'சே, என்ன முட்டாள் தனம்! விலாசத்தைக் கூடக் கேட்டு வைத்துக் கொள்ளாமல் போனேனே' என்று தன்னையே கடிந்து கொண்டான் அவன். மோட்டார் வண்டி புறப்பட்டுப் போய் ஐந்து நிமிஷங்கள் ஆகியிருக்கும். தியேட்டரே அல்லோல கல்லோலப் பட்டு விட்டது. நாடகம் திடீரென்று நின்றது. ஜனங்கள் வெளியே வந்து கும்பல் கும்பலாக நின்று பேசலாயினர். போலீஸ் லாரி ஒன்று 'பூம் பூம்' என்று ஊதிக்கொண்டு வந்து நின்றது. கந்தசாமிக்கு விஷயம் புரியவில்லை. கூட்டத்தோடு கூட்டமாக நின்று கொண்டு அவர்கள் பேசுவதைக் கவனித்தான்.

''மாதவி வேஷம் போட்ட ஆசாமி வைரமாலையோடு கம்பி நீட்டி விட்டான்'' என்றார் ஒருவர்.

கந்தசாமிக்குத் தூக்கி வாரிப் போட்டது. ''என்னங்க நம்ப மாதவி அம்மாளா ?''

கும்பலில் இருந்த அத்தனை பேரும் அவனைப் பார்த்துச் சிரித்தனர்.

''மாதவி வேஷம் போட்டது ஆண் பிள்ளையாச்சே ஐயா !'' என்றார் ஒருவர்.

''ஆண் பிள்ளையா ?''

''ஆமாம், யாரோ கடலூர் ஆசாமி!''

''கடலூரா? அமெச்சூருன்னு யாரோ சொன்னாங்களே !''

அவன் கேள்விக்கு எவரும் பதில் கூறவில்லை. கடைசியில் வேஷம் போட்டது ஆண்பிள்ளை என்று அறிந்ததும், அவனுக்குக் கோபம் கோபமாக வந்தது.

போலீஸ் 'வானில்' இன்ஸ்பெக்டர் அளகிரிசாமியும் 'ஏட்டு'ப்பிள்ளையும் இருப்பதைக் கண்டான். அவர்கள் கண்ணில் படுவதற்கு முன் அங்கிருந்து நழுவினான் கந்தசாமி. (தொடரும்)



# காண்ஸ்டபிள் கந்தசாமி

ஏ. கே. பட்டுசாமி

ஆறும் அத்தியாயம்

## பாட்டுப் புலியும் போலீஸ் புலியும்

இரவு நெடுநேரமாகியும் தன் கணவன் வீடு திரும்பாததைக் கண்டு கண்ணம்மாள் கலவரமடைந்து போனாள். பத்து மணி வரையில் எங்கேயாவது ஊர் சுற்றிக் கொண்டிருப்பார், வந்து விடுவார், வந்ததும் சண்டை பிடிக்க வேண்டும் என்றுதான் கறுவிக் கொண் டிருந்தாள். ஆனால் அதன்பின்னும் அவர் வராமற் போகவே அவளுக்கு அச்சம் தோன்றத் தொடங்கியது. சிங்காரியின் மனநிலை விவரிக்க வொண்ணாததாக இருந்தது, தந்தையைக் காணவில்லையென்ற கவலை ஒருபுறம் உள்ளத்தை வதைத்துக் கொண்டிருக்க, முகத்தை உர்ரென்று வைத்துக் கொண்டிருந்த சிற்றன்னையிடம் அவர் எங்கே என்று கேட்கவும் பயமாக இருந்தது. மெல்லவும் மாட்டாமல் விழுங்கவும் மாட்டாமல் தவித்துக் கொண்டிருந்தாள் அவள். கடைசியாகக் கண்ணம்மாள் அவளை அதட்டிக் கேட்டாள்.

"எங்கேயடி போனார் உன் அப்பா? உன்கிட்ட ஏதாச்சும் சொன்னாரா?"

"இல்லையே, சின்னம்மா! நீங்க அவரை சினிமாக் கொட்டகை வாசலில் பார்க்க வில்லையா?" என்றாள்.

"பார்த்திருந்தால் உன்னைக் கேட்கஎனக்கென்ன கொழுப்பா பிடிச்சிருக்குது?...உங்கிட்ட சொல்லாமலா போயிருப்பார்! இருட்டிலே அவர் எங்கே

போனுரோ? என்ன செய்கிருரோ? எங்கேயாவது கண் தெரியாமல் கிழவர் கீழே விழுந்து வைச்சிருப்பாரோ?'' என்று அவரைப் பற்றிச் சிறிதளவு கவலையுடனேயே கேட்டாள் கண்ணம்மாள்.

சிங்காரிக்குப் பகீரென்றது, அவள் பேசாமல் தகப்பனுரின் அறையில் போய் உட்கார்ந்து கொண்டாள். சாப்பிடக் கூடப் போகவில்லை. 'எங்கேயாவது கீழே விழுந்து வைச்சால்!......' என்று அவளது சிற்றன்னை கூறிய நாராசச் சொல் காதுகளில் ரீங்காரம் செய்து கொண்டேயிருந்தது. திகிலோடு உறக்கம் பிடிக்காமல் உட்கார்ந்து கொண்டிருந்தாள். இரவு மணி பன்னிரண்டு, ஒன்று என்று வேகமாகச் சென்றுகொண்டேயிருந்தது.

தூரத்தில் ரிப்பன் கட்டடக் கடிகாரம் மணி இரண்டு என்பதைப் பாட்டுப் பாடி ஒலித்துக் காட்டியது. நாடகக் கொட்டகையிலிருந்து புறப்பட்ட கந்தசாமிக்கு இந்த அகால நேரத்தில் வீட்டுக்குப் போகப் பிடிக்கவில்லை. எங்கேயாவது பார்க்கில் போய்ப் படுத்து விட்டால் என்ன என்று சிந்தித்தான்; அவனது வீட்டுக்குப் போகும் வழியில் 'டைமண்ட் பார்க்' என்ற ஒரு பெரிய உபவனம் இருந்தது. ஒழுங்காக வைத்து வளர்க்கப்பட்டிருந்த புஷ்பச் செடி வரிசைகளுக்கிடையே விசாலமான சிமெண்ட் பெஞ்சுகள் போடப் பட்டிருந்தன. இரவின் மிச்சப் பகுதியை அங்கே கழித்து விடலாம். காலையில் எழுந்து வீட்டுக்குப் போய் உடுப்பை மாட்டிக் கொண்டு உத்தியோகத்துக்குக் கிளம்பி விடலாம் என்று அவன் முடிவு செய்தான்.

கடுமையான பனி கொட்டிக் கொண்டிருந்தது. சிலீர் சிலீரென்று வீசிய குளிர் காற்று உடம்பில் பட்டதும் தேள் கொட்டுவது போலிருந்தது. தூரத்திலே தெரிந்த பூங்காவின் ஓரத்தில் அடர்ந்து வளர்ந்திருந்த மரங்களின் உச்சியில் மின்மினிப் பூச்சிகள் 'மினுக் மினுக்' என்று சஞ்சரித்துக் கொண்டிருந்தன. அவனது மனம் ராவண கான சபாவில் நடந்த ஆச்சரியமான சம்பவங்களைப் பற்றி எண்ணமிட்டுக் கொண்டிருந்தது.

திருடனைப் பிடித்துத் தண்டிக்கச் செய்யவேண்டிய அவனே, திருடன் தப்பியோடுவதற்கு ஒத்தாசை செய்து விட்டான்! மூச்சுப் பிடித்துக் கொண்டு மோட்டார் 'ஹாண்டிலை'ச் சுழற்றியதை நினைத்ததும் அவனுக்குத் தன் மீதே எரிச்சல் வந்தது. தான் செய்த தவறை வேறு யாராவது பார்த்து விட்டிருந்தால் என்ன கதி!......பார்த்திருந்தால் உத்தியோகம் போவது மாத்திரமல்ல, திருடனுக்குத் துணைபோனவன் என்று அவனை ஒருவேளை வசமாக மாட்டிவைத்து விடுவார்கள். இந்த முட்டாள்தனத்துக்குப் பிராயச்சித்தமாக எப்படியாவது அந்த மாதவி வேஷக்காரனை மாத்திரம் அவன் கண்டு பிடித்துவிட்டால்!......

பூங்காவின் மத்தியிலே சென்ற அகலமான பாதை, அதை இரு பகுதிகளாகப் பிரித்துக் கொண்டிருந்தது. மவுண்ட் ரோட்டையும் மந்தாரப் பேட்டையையும் இணைத்துக் கொண்டிருந்த அந்தப் பாதையில் மட்டும் இங்கொன்றும் அங்கொன்றுமாக மங்கலான விளக்குகள் எரிந்து கொண்டிருந்தன. தோட்டத்தின் மற்றப் பகுதிகளில் இருள் சூழ்ந்திருந்தது. வலப் பக்கத்தில் தோட்டத்துக்கு அப்பால் கூவம் நதி சந்தடியின்றி ஆமை போல் நகர்ந்து கொண்டிருந்தது. கந்தசாமி படுப்பதற்கு வசதியாக ஒரு பெஞ்சைத் தெரிந்தெடுத்து அதைக்



கைக்குட்டையால் தட்டினன். இதே சமயம் கரடியின் உறுமலைப் போல் ஒரு மெல்லிய சத்தம் கேட்டது.

அவன் திடுக்கிட்டான். இருந்த இடத்தில் அசையாமல் நின்று கவனித்தான். மெல்லிய குரலில் யாரோ பேசுவது போல் இருந்தது. கண நேரத்தில் அவன் மனம் பலப்பல எண்ணியது. இத்தனை பெரிய நகரத்தில் தினந்தோறும் எத்தனையோ திருட்டும் புரட்டும் கொலையும் களவும் நடக்கின்றன. சந்தேகமின்றி இங்கும் அத்தகைய செயலுக்காக யாரோ சதி நடத்திக் கொண்டிருக்கிறார்கள் போலும்! இல்லா விட்டால் இந்த நேரத்தில் இந்த ஏகாந்தமான இடத்தில் வந்து ரகசியம் பேசவேண்டிய அவசியம் என்ன? சின்ன வயதில் அவன் கதைகள் கேட்டிருக்கிறன், திருடர்கள் கொள்ளையடித்த பொருள்களைக் காடுகளில் மரத்தடியில் பங்கு போட்டுக் கொள்வார்கள் என்று. அதைப் போல் ஏதாவது இருந்தாலும் இருக்கலாம்!

மீண்டும் அதே முனகல் தொடர்ந்து கேட்டது. சத்தம் வந்த திசையை நோக்கி ஓசைப் படாமல் அடி மேல் அடிவைத்து நடந்தான் கந்தசாமி. ஒரு பெரிய குரோடன்ஸ் செடிக்கு அப்பாலிருந்த ஆசனத்தில் யாரோ உட்கார்ந்திருப்பது தெரிந்தது. உற்றுக் கவனித்தான். ஆனல் அவன் சந்தேகித்தது போல் சதிப்பேச்சு அல்ல; கரகரப்பான தொண்டையில் யாரோ ஒப்பாரிக்கண்ணி பாடுவது போலிருந்தது.

"கன்னங்கரியவளே
கருஞ்சாந்து மேனியளே
உன்னைச் சரணடைந்தேன்
ஓட்டிடுவாய் துன்பமெல்லாம்..."

கந்தசாமிக்கு ஆச்சரியமாக இருந்தது. இந்த நேரத்தில் இங்கே வந்து உட்கார்ந்து பாடுகிறவன் யாராக இருக்கும்! ஒருகால் பைத்தியக்காரனே?

"யாரது?" என்று அதட்டல் போட்டான் அவன்.

பாட்டுக் குரல் 'டபக்' கென்று நின்றது. அவன் தைரியமாக அருகில் சென்றான். தன்னந்தனியாக ஒருவன் சிமெண்ட் பெஞ்சின் மீது உட்கார்ந்திருப்பது தெரிந்தது. சட்டைப் பையிலிருந்து நெருப்புப் பெட்டியை எடுத்து ஒரு குச்சியைக் கிழித்தான். எதிரேயிருந்த ஆசாமியைப் பார்த்ததும் அவனது ஆச்சரியம் பன்மடங்காகப் பெருகியது.

திக்குச்சியின் வெளிச்சத்தில் கண்ணைக் கொட்டிக் கொட்டி



விழித்துக் கொண்டிருந்தது, இந்திரா டாக்கீஸுக்கருகில் அன்று மாலே பர்ஸைத் தொலேத்து விட்டுச் சிக்கித் தவித்த அப்பாவிக் கிழவர்தான் என்பதை அவன் புரிந்துகொண்டான்.

அந்தப் பிரகிருதியைப் பார்த்ததும் அவர்மீது அவனுக்கு ஒருவிதமான இரக்கம் உண்டாகியது. எனினும் அதை வெளிக்குக் காட்டாமல், "ஏய், யாரையா நீ? என்ன பண்ணிக்கிட்டிருக்கே இங்கே?" என்று கேட்டான்.

"இயற்கையின் அழகைப் பாடிக் கொண்டிருக்கிறேன் அப்பா!"

"அழகா? இந்த இருட்டிலே என்ன அழகு தெரியுது உனக்கு?"

"புலவர்களின் கண்ணுக்கு இருள் ஒளி எல்லாம் ஒன்றுதான். இருண்ட இரவின் எழிலே......!"

"நீங்க புலவருங்களா?......சரிதான், பகல் நேரத்திலே பாடக் கூடாதா? வீட்டிலே படுத்துத் தூங்க வேண்டிய நேரத்திலே உடம்பைக் கெடுத்துக்கிறீங்களே! அதுவும் இந்த வயசிலே!..." என்று சற்றுஅநுதாபமான குரலில் அவன் கூறியதும் முத்துப் புலவரின்உள்ளம்நெகிழ்ந்து விட்டது. தம்மெதிரே சாதாரண உடையிலிருந்த அந்த ஆசாமிதான் தம்மை அன்று மாலே படாதபாடு படுத்திய போலீஸ்காரன் என்பதை அவரால் கண்டு கொள்ள முடியவில்லே. அதற்கு அனுகூலமாக அங்கு சூழ்ந்திருந்த இருள் வேறு அவரது மங்கிய பார்வைக்குத் திரை போட்டுக் கொண்டிருந்தது.



கந்தசாமி அவர் அருகே இருந்த இடத்தில் உட்கார்ந்து கொண்டான்.

"சிலருக்கு வீடு வாசல் இருந்தும்கூட அங்கே நிம்மதி கிடைப்பதில்லே!" என்று அவனது கேள்விக்குப் பதிலளிக்கும் தோரணேயில் கூறினர் புலவர்.

'சரி! சரி! இவரும் நமது கட்சிதான் போலிருக்கிறது' என்று எண்ணிய கந்தசாமி, "வாஸ்தவமான பேச்சுங்க!" என்று பளிச்சென்று ஆமோதித்தான்.

மணியோ இரண்டரைக்கு மேலாகி விட்டது. இன்னும் இரண்டு மூன்று மணி நேரம் இவரோடு பராக்காக உட்கார்ந்து பேசிக் காலம் கழித்து விட்டால் பொழுது விடிந்து விடும் என்று நினைத்தவனாக அவரது வாயைக் கிளறினன்.

மனிதரிலே இரண்டு வகை. ஒருசாரார் அன்னியர்களே அவர்கள் எத்தனே தான் ஒளிவு மறைவின்றி நடந்து கொண்டாலும் இலேசில் நம்பிவிட மாட்டார்கள். அவர்கள் பேசும் ஒவ்வொரு பேச்சையும் எடைபோட்டுத்தான் பேசுவார்கள். அப்பேர்ப்பட்டவர்களிடம் எந்தவித மான ரகசியத்தையும் கிரகிக்க முடியாது. மற்றொரு சாரார் இதற்கு நேர் மாறுன சுபாவமுடையவர்கள். குழந்தை போன்ற உள்ளம் படைத்தவர்கள். யாராவது ஒரு வார்த்தை அநுதாபமாகக் கூறிவிட்டால் போதும், எதிராளி எப்படிப்பட்டவர் என்பதைச் சற்றும் ஆலோசித்துப் பார்க்கவேமாட்டார்கள். மனத்திலுள்ள அந்தரங்கங்கள் அத்தனேயையும் அப்படியே எடுத்து வெளியில் வைத்து விடுவார்கள்.

முத்துப் புலவர் இந்த இரண்டாவது ரகத்தைச் சேர்ந்தவர். சிங்காரியைத் தவிர தம்மிடம் அநுதாபம் காட்டுகிறவர்களே இல்லேயே என்ற பெருங்குறை அவருக்கு நெடுநாளாக உண்டு. அவரைப் பரிவாக விசாரித்து அவரது அபிப்பிராயத்தை அப்படியே ஒப்புக்கொள்ளுகிற ஆசாமியும் இவ்வுலகத்தில் இருக்கிறுன் என்று கண்டதும் அவருக்கு மகிழ்ச்சி எல்லேயை மீறியது. மளமளவென்று அவர் பர்மாவிலிருந்தது முதல் பட்டணத்துக்கு வந்து பரிபவப்படுவது வரையிலுள்ள செய்திகளே ஒன்று விடாமல் கூறிவிட்டார். தமது முதல் தாரத்தின் நகைகளேக் கண்ணம்மாள் விற்றுப் பணமாக்கிவிட்டாள் என்ற விஷயத்தை மட்டும்தான் கூற மறந்தார்.

"இதோ பார் தம்பி, இப்போது சொல்லு! இந்த நிலேயில் நான் எப்படி வீட்டுக்குப் போக முடியும்? பணம் எங்கே, டிக்கட்டு வாங்காமல் எங்கே போயிருந்தாய் என்று அவள் கேட்டாள் என்றுல் நான் என்ன சொல்லுவது?"

கந்தசாமிக்கு அவர்மீது அளவற்ற இரக்கம் தோன்றியது. சாயந்திரம் அவரைப் படுத்திய பாட்டுக்குப் பிராயச்சித்தமாக ஏதாவது செய்ய வேண்டும் போலிருந்தது. சட்டைப் பையைத் துழாவிப் பார்த்தான். அதில் ஒரு ரூபாய் சில்லறைதானிருந்தது.

"இந்தாங்க, இதை வச்சுக்கிடுங்க, ஒரு ரூபாய்தான் இருக்குது!" என்றுன் அவன்.

புலவருக்குத் தமது நன்றியைத் தெரிவிக்க வார்த்தைகளே கிடைக்கவில்லே. அவர் கஷ்டப்பட்டு எழுதி அச்சிட்டுக்

கொடுத்த புஸ்தகங்களை ஈடாக வைத்துக் கொண்டு அத்தனை கெஞ்சியும் காலணாக் கூடக் கொடுக்காத பரோபகாரம் பிள்ளை எங்கே! கருணையே வடிவான இந்த மனிதன் எங்கே!

''வேண்டாமப்பா! நீ அன்போடு சொன்னதே போதும்!'' என்று நாத் தழுதழுக்கக் கூறினார்.

சிறிது நேரம் இருவருமே மௌனமாக யோசித்தனர். பிறகு கிழவர் பேசினார்:

''தம்பி! நீ அடிக்கடி என்னை வந்து பாரப்பா! உனக்குக் கவிதைகள் இயற்றக் கற்றுக் கொடுத்து உன்னைப் புலவனாக்கி விடுகிறேன்.''

''என்னையா!''

''ஏன்?''

''ஒண்ணுமில்லிங்க, சும்மாத்தான் கேட்டேன். அது கிடக்கட்டும், முதலில்வீட்டிலே என்ன பதில் சொல்லுவதுன்னு யோசனை பண்ணுங்க!''



புலவருடைய மனம் மீண்டும் படுத்து விட்டது. இது பெரிய பிரச்னையாயிற்றே!...

கந்தசாமி ஒரு யோசனை கூறினான்:

''பேசாமல் நான் சொல்லுகிறபடி செய்யுங்க. 'பணத்தை எவனோ 'பிக்பாக்கெட்' அடிச்சுட்டான், போலீஸ்காரன் துரத்திக் கொண்டு போய் அவனைப் பிடித்துக்கொண்டான்' என்று சொல்லுங்க.''

அவன் யோசனை கூறிக் கொண்டே போகையில் முத்துப் புலவர் குறுக்கிட்டுப் பேசினார்:

''போலீஸ்காரன் என்னையல்லவா பிடித்தான்!'' என்றார் சந்தேகத்துடன்.

''இருக்கட்டும், கேளுங்க. 'அப்புறம் என்னையும் ஸ்டேஷனுக்கு அழைத்துப் போனாங்க. ராத்திரி விசாரணை செய்து கேஸ் எழுதி முடிப்பதற்கு ரொம்ப நேரம் ஆகிப் போச்சு, அப்புறம் தெரிஞ்சவங்க வீட்டிலே படுத்திருந்தேன்' என்று சொல்லி வையுங்க.''

''அவள் நம்ப மாட்டாளே அப்பா!''

''நான் வந்து உங்களுக்குச் சாட்சி சொன்னால்?''

''சொன்னால் அத்தாட்சி என்ன என்று கேட்பாளே!''

''அத்தாட்சி என்னவா? போலீஸ்காரன் பேச்சைக் கூடவா அவங்க நம்ப மாட்டாங்க?'' என்றான் கந்தசாமி.

''போலீஸ்காரனா?''

''ஆமாங்க. நானும் ஒரு போலீஸ்காரன் தான்.''

''நீ போலீஸ்காரனா?....எத்தனை நல்லவனப்பா நீ! சாயந்திரம் ஒருவன் சினிமாக் கொட்டகையருகில் என்ன இம்சை பண்ணி விட்டான் தெரியுமா? உம், உன் பெயர் என்ன?''

''கந்தசாமிங்க!''

பொழுது விடியப் போகிறது என்பதைக் கிழ்வானத்தில் தோன்றிய மங்கிய ஒளி அறிவித்தது. மரங்களின் மீதிருந்த பறவைகள் உறக்கம் கலைந்தெழுந்து விதம்விதமான குரலொலிகளை எழுப்பி உதய கன்னியை வரவேற்றன.

''பொழுது விடியப் போகுது. தைரியமாகப் போலீஸ்காரனையே வந்து சொல்லச் சொல்லுகிறேன் என்று அடிச்சுப் பேசுங்க. நான் அப்புறமா வந்து பார்க்கிறேன்'' என்று கூறிக் கிளம்பினான் அவன்.

முத்துப் புலவர் உற்சாகத்தோடு எழுந்து கொண்டே, ''தம்பி! எனக்கு ஒண்ணு தோணுது. உன்கிட்ட சில ரொம்ப முக்கியமான விஷயமெல்லாம் பேசவேணும். நீ தவறாமல்ஒருநாளைக்கு வா!'' என்றார்.

''ஆகட்டும்'' என்று தலையை ஆட்டிக் கொண்டே சென்றான் கந்தசாமி.

தந்தையை எதிர்பார்த்துக் கொண்டு இரவு வெகு நேரம் வரையில் விழித்திருந்த சிங்காரி அதிகாலையில் கண்ணயர்ந்து விட்டாள். திடீரென்று கண்ணம்மாளின் இரைச்சலைக் கேட்டுத் திடுக்கிட்டு விழித்தாள்.

''எங்கேயடி அந்தக் கிழம்? இன்னும் வந்ததா இல்லையா?''

''காணோமே, சின்னம்மா..''

''காணோமேன்னு இங்கேயே இடிச்ச புளிமாதிரி உட்கார்ந்திருந்தால்?''

''போய்த் தேடிப் பார்க்கிறேன்'' என்று புறப்பட்டாள் அவள்.

கலைந்திருந்த தலையைக் கோதிச் சரிப்படுத்திக் கொண்டு, புடவைத் தலைப்பால் முகத்தை நன்றாகத் துடைத்த வண்ணம் முன்புறத் தோட்டத்தில் வந்து நின்று கொண்டு யோசித்தாள். மனம் சலிப்புற்ற நேரங்களில் புலவர் அடிக்கடி 'டைமண்ட்' பூங்காவில்

போய் உட்கார்ந்திருப்பது வழக்கம் என்பதை அவள் அறிவாள். முதலில் அங்கே போய்த் தேடிப் பார்த்து விடலாம் என்ற எண்ணத்துடன் தோட்டக் கதவைத் திறந்து கொண்டு நடந்தாள்.

முத்துப் புலவரை வழியனுப்பி விட்டுத் தன் வீட்டை நோக்கி நடந்த கந்தசாமி, அக்காளிடம் பேசுவதா வேண்டாமா? அவள் ஏதாவது கேட்டால் எப்படிப் பதிலளிக்க வேண்டும் என்றெல்லாம் மனத்தினுள் சிந்தித்தவண்ணம் நடை போட்டான். தெரு முனையை யடைந்ததும் அவளது வீட்டு வாசலில் ஒரு ஜட்கா வண்டி நிற்பதைக் கண்டான். வண்டியிலிருந்து மாமன் தருமலிங்கமும் அவரது மகள் முனியம்மாவும் இறங்கிக் கொண்டிருப்பதைப் பார்த்ததும் அவனுக்கு அதிர்ச்சி ஏற்பட்டது. பேசாமல் வந்த வழியே திரும்பிப் போய் விடலாமா என்றுகூட எண்ணினான். ஆனால் அவனது போலீஸ் உடை வீட்டிலல்லவா இருந்தது?

தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு உள்ளே நுழைந்தான். மாமன் வந்திருந்த மகிழ்ச்சியில் முத்தம்மாள் அவன் வந்ததைக் கவனிக்க வில்லை. முக மலர்ச்சியோடு அவரைக் குசலம் விசாரித்து வரவேற்பதில் ஈடுபட்டிருந்தாள். ஆனால் முனியம்மாளின் கழுகுப் பார்வைக்கு அவன் தப்பவில்லை. கூடத்தில் உட்கார்ந்திருந்த அவள் அவனைக் கண்டதும் எழுந்திருந்து நாணிக் கோணிக் கொண்டு அடுக்களைக்கு ஓடினாள்.

"எங்கே தம்பியைக் காணும்?" என்று கேட்டார் தருமலிங்கம்.

"இதோ இருக்கிறேன், மாமா! எப்போது வந்தீங்க?" என்று கேட்டுக் கொண்டே வந்தான் கந்தசாமி.

"சௌக்கியம்தான், அப்பா. எப்படி இருக்குது உன் உத்தியோகமெல்லாம்?"

"அதை ஏன் கேட்கிறீங்க, ஊரிலே திருட்டுப் பசங்க தொந்தரவெல்லாம் அதிகரித்துப் போச்சு!"

"நம்ப கிராமத்திலேகூட அதே நிலை தான் கந்தசாமி! போன வாரம் தொழுவத்திலே கட்டியிருந்த உழவு மாட்டை எவனோ அவுத்துக்கிட்டுப் போய் விட்டான். தலையாரியும்எவ்வளவோ முயற்சி பண்ணிப் பார்க்கிறான். ஆனால் ஒரு தடையமும் கிடைக்கலே!"

கந்தசாமிக்கு மாமனின் அறியாமையைக் கண்டு சிரிப்புத்தான் வந்தது.

"என்ன மாமா, உங்க தலையாரியை என்ன பட்டணத்துப் போலீஸ்கார ஜவான் என்று நினைச்சீங்களா?"

தம்பி மாமனுடன் சௌஜன்யமாகப் பேசுவதைக் கண்டு பூரித்துப் போன முத்தம்மாள் அவர்களது பேச்சில் மகிழ்ச்சியுடன் கலந்து கொண்டாள்.

"நம்ப தம்பி மாத்திரம் ஒரு வாரத்துக்குக் கிராமத்திலே வந்து இருந்திச்சுன்னால் அப்புறம் அங்கே திருட்டுப் பயமே இருக்காது!"

"ஹும், ஒருவாரம் எதற்காம்; ஒரு மணி நேரம் இருந்தால் போதாதா? பசங்களை ஒழிச்சுக் கட்டிட மாட்டேனா!"

அத்தானுடைய வீரப் பிரதாபங்களை அவன் வாயாலேயே கேட்ட முனியம்மாளுக்குச் சிரிப்பு பொத்துக் கொண்டு வந்தது. புடவைத் தலைப்பினால் வாயை மறைத்துக் கொண்டு இடி இடி யென்று சிரித்த அவளை வெறுப்போடு பார்த்தான் கந்தசாமி.

"என்னமுனியம்மா வயசுப்பொண்ணு இப்படியா சிரிக்கிறது!" என்று அன்போடு கடிந்தாள் முத்தம்மாள்.

கந்தசாமி பல்லைத் தேய்த்துப் பலகாரம் அருந்தினான். உடை மாட்டிக் கொண்டிருக்கையில் தருமலிங்கம் எதிரே வந்து நின்று கொண்டார்.

"என்னமோ கந்தசாமி, நீ 'முனியம்மாளைப் பார்க்கணும், கொண்டு வந்து விடச் சொல்லு'ன்னு சொன்னயாம். நானும் அழைத்து வந்து விட்டேன். அடுத்த மாசமேகூட முகூர்த்தம் வைத்துக் கொள்ளலாம்."

கந்தசாமி கீழ் உதட்டைக் கடித்துக் கொண்டு முத்தம்மாளை ஒரு தடவை முறைத்துப் பார்த்தான்.

"இப்படி வாங்க மாமா, இப்ப தம்பி அவசரமாக உத்தியோகத்துக்குப் போவுது. அப்புறம் சாவகாசமாகப் பேசலாம்" என்று நிலைமையைச் சமாளித்தாள் முத்தம்மாள்.

"இருக்கட்டும் பார்க்கிறேன்!" என்று மனத்துக்குள் கறுவிக்கொண்டே வெளிக் கிளம்பினான் அவன்.

டைமண்ட் பூங்காவைத் தாண்டித்தான் அவன் ஸ்டேஷனுக்குச் செல்ல வேண்டும். மரங்களின் சின்னஞ்சிறு கிளைகளில் உட்கார்ந்து உல்லாசமாக ஊஞ்சலாடிக் கொண்டிருந்த மைனாக் குருவிகள் இன்னிசையாகப் பாடிக் கொண்டிருந்தன. ஆனால் கந்தசாமியின் மனம் அந்தப் பட்டிக்காட்டு முனியம்மாளின் தோற்றத்தை நினைத்து நினைத்துப் படாதபாடு பட்டுக்கொண்டிருந்ததால் எதிரே நின்றுகொண்டிருந்த சிங்காரியை அவன் கவனிக்கவில்லை.

"ஏய்! மனுஷங்க நிற்கிறது கூடக் கண்ணுக்குத் தெரியல்லே?"

கந்தசாமி திடுக்கிட்டு நிமிர்ந்து பார்த்தான். எதிரே மரத்தின்கீழ் அழகி ஒருத்தி நின்று கொண்டிருந்தாள். (தொடரும்)

ஏழாம் அத்தியாயம்

## கல்யாண விஷயம்

அவளுக்குப் பதினேழு பதினெட்டு வயது இருக்கும். களை ததும்பும் மாநிற முகத்தில் ஆளை மயக்கும் கருவிழிகள். இளமையின் பரிபூரண ஆசியைப் பெற்ற அங்கங்களில் ஒரு அபூர்வமான கவர்ச்சி, அநாயாசமான நெளிவு, அலட்சியமான அலங்காரப் பேச்சு!

கந்தசாமி மலைத்து நின்றான்.

“ரோட்டிலே நடக்கறச்சே பார்த்துப் போக வேண்டாமா என்று கேட்டால் முழிக்கிறாயே?” என்றாள் அவள்.

இரவு பூராவும் கண் விழித்த கலக்கத்தினால் ஏற்பட்ட கனவுக் கோளாறு அல்லது உண்மையாகத் தான் எதிரே அந்த அழகி நிற்கிறாளா என்று மீண்டும் படபடவென்று கண்களைக்கொட்டிக் கொட்டிப் பார்த்தான்கந்தசாமி. கனவல்ல என்று நிச்சயமாகியதும் தொண்டையைக் கனைத்தான். ஆனால் பேச்சு வெளிவர மறுத்தது. தான் செய்த தவறுக்கு மன்னிப்பு கேட்கவும் அவனது ‘அந்தஸ்து’ இடமளிக்கவில்லை.

# கான்ஸ்டபிள் கந்தசாமி

ஏ.கே.பட்டுசாமி

எச்சிலைக் கூட்டி விழுங்கிக் கொண்டே வேறு பக்கமாகத் திரும்பிப் பார்த்தான்.

அவனது முகச் சேஷ்டைகளைக் கண்டு அவளுக்குச் சிரிப்பு வந்து விட்டது. ‘க்ளுக்’ கென்று அவள் நகைத்தாள். அதைக் கேட்டவுடனேயே கந்தசாமி கீழே குனிந்து ஒரு கல்லைப் பொறுக்கி எடுத்துக் கையை ஓங்கினான்.

"ஐயையோ!" என்று தலையைப் பிடித்துக் கண்களை மூடிக்கொண்டு அவள் அலறினாள். அடுத்த கணம் 'வள் வள்' என்று ஊளையிட்டுக் கொண்டே ஓடியது தூரத்திலிருந்த நாய்.

அவள் பெருமூச்சு விட்டாள். அவன் கலகல வென்று நகைத்தான்.

"நல்ல ஆளையா நீ! என்னைத்தான் கல்லாலே அடிக்கப் போகிறாயாக்கும் என்று பயந்தே போயிட்டேன்."

"ஹூம், உன்னைக் கல்லாலே அடிக்க எனக்குப் பயித்தியமா புடிச்சிருக்குது? பொது வழியிலே அநாவசியமாக நின்று தொந்தரவு கொடுக்கும் ஒரு பிராணிக்குத் தண்டனை கொடுத்தேன்; அவ்வளவுதான்" என்றான். ஹாஸ்யமாகப் பேசி விட்டதாக அவனுக்கு எண்ணம்!

அவளும் சிரித்துக் கொண்டே, "வாஸ்தவம்தான், மனுஷக் கேசு ஒன்றும் சரியாகக் கிடைக்காமப் போனால் இந்த நாய்க் கேசையாவது கவனிக்க வேண்டியதுதானே!" என்றாள்.

அவளது துடுக்கான பேச்சு அவனைச் சுருக்கென்று குத்தியது. ரோஷத்தோடு தனது இளம் மீசையை முறுக்கிய வண்ணம், "இதோ பாரு. உன்னைத் தவிர இந்தப் பேச்சை வேறே யாராவது பேசியிருந்தால் சும்மா விட்டிருக்க மாட்டேன்! இந்தக் கந்தசாமி சமாசாரம் உனக்குத் தெரியாது. கேடிங்களுக்கும் பிக்பாக்கெட்காரன்களுக்கும் ஐயா பேரைக் கேட்டாலே குலை நடுக்கமாக்கும், தெரியுமா? நேத்து சாயங்காலம் கூட இந்திரா டாக்கிஸுக் கருகிலே ஒரு கிழவனைப்புடிச்சு..." என்றான்.

"கிழவரையா?... இந்திரா டாக்கிஸுக்குப் பக்கத்திலேயா?" என்று ஆவலோடு கேட்டாள் அவள்.

"ஆமாம், அவனைப் புடிச்சு...."

"அவர் பெயர் என்ன தெரியுமா உங்களுக்கு?....பார்வைக்கு எப்படி இருந்தார் அவர்?"

அவளது குரலில் தொனித்த ஆதுரத்தைக் கண்டு கந்தசாமி வியப்படைந்தான். ஒரு கணம் யோசித்தான். போலீஸ் மூளையல்லவா? நாலும் நாலும் எட்டு என்று கணக்குப் போட்டுப் பார்த்ததும் பளிச்சென்று விஷயம் புரிந்து போய் விட்டது. அவளை ஏற இறங்க உற்றுப் பார்த்தான். முத்துப் புலவர் வர்ணித்தபடியே 'பச்சைக்கிளி' போலத்தான் இருந்தாள் அந்தச் சொர்ணக் கொடி.



அவனுக்குத் தெம்பு பிறந்து விட்டது. தொண்டையைக் கனைத்துச் சரிப்படுத்திக் கொண்டே, "கொஞ்சம் பொறு சிங்காரி! பொறு!" என்றான்.

அவளது முகம் ஆச்சரியத்தினால் மலர்ந்து வெட்கத்தினால் சிவந்தது.

"என்னுடைய பெயர் உங்களுக்கு..."

"எப்படித் தெரியும்னு கேட்கிறயா? ஹூம், இப்பத் தெரியுதா இந்தக் கந்தசாமி எப்படிப் பட்டவன் என்று? உன் பெயரை மாத்திரமில்லே, உங்க பாட்டி பெயரை வேணுமென்றால் கூடக் கண்டு பிடிச்சுடுவேன்! பக்கா 'ஸி. ஐ. டி.' போலீஸ்காரனுக்கும் தெரியுமா? இன்னும் கேளு; இப்ப நீ உன் அப்பாவைத் தேடிக்கிட்டு வந்திருக்கே! சரிதானா?"

கைதேர்ந்த ஆருடக்காரனைப் போல் பளிச் பளிச்சென்று விஷயங்களைக் கூறும் அவனைப் பிரமிப்போடு பார்த்துக் கொண்டே நின்ற சிங்காரி, "இப்போது அவர் எங்கே இருக்கிறார்?" என்று மிக ஆவலோடு கேட்டாள்.

"பயப்படாமல் வீட்டுக்குப் போ. இவ்வளவு நேரம் அங்கு வந்திருப்பார்."

அவனது பேச்சை நம்புவதா கூடாதா என்று புரியாமல் தயங்கித் தயங்கி நின்றாள் சிங்காரி.

"என் பேச்சை நம்பிப் போ சிங்காரி. காளிங்கராயன் தெருதானே? அப்புறமா வந்து பார்க்கிறேன்; உன் அப்பா கிட்டே சொல்லி வை. கட்டாயம் வருவேன். மறந்துடாதே!"

அவளது உருவம் கண்ணுக்கு மறையும் வரையில் அங்கேயே நின்று பார்த்துக் கொண்டிருந்தான் அவன். அவளும் திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டு சென்றாள். மனத்தில் நிரம்பி யிருந்த ஆனந்தத்தால் அவளுடைய உதட்டில் மலர்ந்திருந்த புன்னகை வெகு நேரம் வரையில் வாடவில்லை.

சிங்காரியைப் பார்த்தது முதல் கந்தசாமியின் மனம் இன்பக் கனவுகள் காணத் தொடங்கியது. அந்த அழகியை மீண்டும் பார்க்க ஆவல் உந்தியது. புலவர் என்னவோ அவனை வீட்டுக்கு வரச் சொல்லித்தானிருந்தார். ஆகவே ஓரிரண்டு முறை காளிங்கராயன் தெருவில் 'பாரா' கொடுத்துப் பார்த்தான். ஆனால் வீட்டிலிருந்துகேட்டபேரிடி முழக்கத்தைக் கொண்டு, பத்திரகாளி கோயிலுக்குள்ளே தானிருக்கிறது என்று புரிந்து கொண்டான். உள்ளே சென்றால் புலவருக்குக் கிடைக்கும் 'பிரசாத'த்தில் தனக்கும் பாதிப் பங்கு கிடைத்து விடும் என்று அஞ்சித் திரும்பினான்.

நாட்கள் ஓடிக்கொண்டேயிருந்தன. ஸ்டேஷனிலும் அவனுக்கு ஓய்ச்சல் ஒழிவில்லாமல் வேலை இருந்து கொண்டேயிருந்தது. எதற்கெடுத்தாலும் அந்த இன்ஸ்பெக்டரும் ஹெட் கான்ஸ்டபிளும், "கந்தசாமி இங்கே வா. இதைக் கவனி, அங்கே ஓடு!" என்று விரட்டிக் கொண்டே யிருந்தனர்.

அன்று என்ன ஆனாலும் சரி, பார்த்து விடுகிறது என்ற தீர்மானத்துடன் அவ்வீட்டினுள் நுழைந்தான். நல்ல காலமாக அந்தச் சமயத்தில் கண்ணம்மாள் வீட்டில் இல்லை. ஆகவே புலவர் சற்றுச் சுதந்திர புருஷராகவே விளங்கினார். சிங்காரியும் தகப்பனாரோடு சேர்ந்து, அவனோடு சிரிக்கச் சிரிக்கப் பேசினாள். அவள் வைத்துக் கொடுத்த காப்பி அவளது அழகைப் போலவே கிறுகிறுக்கச் செய்வதாக இருந்தது.

"என்ன ஆச்சு? ஏதாவது சண்டை பிடிச்சாங்களா அன்றைக்கு?" என்று சிங்காரியைப் பார்த்தவண்ணம் புலவரைக் கேட்டான் கந்தசாமி.

"என்னமோ கந்தசாமி! எனக்கே ஆச்சரியமாக இருக்கிறது. அவள் என்னிடம் இது வரையில அதைப் பற்றி ஒரு வார்த்தை கூடக் கேட்கவில்லை" என்றார் முத்துப் புலவர்.

சிங்காரி குறுக்கிட்டாள்.

"இல்லேங்க, அன்றைக்குக் காலையிலேயே சின்னம்மாவுடைய சிநேகிதி வந்திருந்தாங்க. என் கல்யாண விஷயமாக இரண்டு பேரும் ஏதோ மும்முரமாகப் பேசிக்கிட்டிருந்தாங்க. 'இந்தச் சமயத்திலே உன் புருஷன்கிட்ட சண்டை கிண்டை போடாதே! காரியத்



தைக் கெடுத்து வைச்சிடும்' என்று அந்த அம்மா சொன்னுங்க. அதனுலேதான் சின்னம்மா இதைப் பற்றி ஒன்றுமே கேட்கவில்லே'' என்ருள் அவள்.

''உன் கல்யாணத்தைப் பற்றியா?'' என்று சற்றுப் பரபரப்போடு அவளிடம் கேட்டான் கந்தசாமி.

''என் உயிரில் உடல் இருக்கிற வரையில் என் மகளேக் கண்டவனுக்குக் கட்டிக் கொடுக்க மாட்டேன்'' என்று ஆத்திரத்தோடு உளறிக் கொட்டினுர் முத்துப் பிள்ளே.

இதே சமயம் வெளித்தோட்டக் கதவு திறக்கப்படும் ஓசை கேட்கவும் அவர்களுடைய மந்திராலோசனே தட்டென்று முடிவடைந்தது. சிங்காரி கூடத்தை நோக்கி விரைந்தாள். மருதம்மாளோடு உள்ளே நுழைந்த கண்ணம்மாள், ''சிங்காரி, கொஞ்சம் சீக்கிரமா காப்பி வைச்சுக்குடு, மருதத்துக்குத் தலையை வலிக்குதாம்'' என்று கூறிக்கொண்டே தன் அறையை நோக்கி நடந்தாள்.

முத்துப்பிள்ளே கந்தசாமியைப் பார்த்துக் கையை அசைத்து, ''போய்விடு, போய் விடு! அப்புறமா பார்க்கிலே சந்திக்கலாம். உன்னிடம் ரொம்ப முக்கியமான விஷயமெல்லாம் பேசணும்!'' என்று ரகசியமாகக் கூறினுர்.

கந்தசாமி அந்த மனிதரைப் பரிதாபமாகப் பார்த்துக்கொண்டே அவ்வீட்டை விட்டுப் பிரிய மனமின்றிப் பிரிந்தான்.

## எட்டாம் அத்தியாயம்

# கருப்பண்ணசாமி

அன்றிரவு மணி பன்னிரண்டிருக்கும். அமாவாசைக்கு அடுத்த தினமாகையால் வானம் இருண்டு கிடந்தது.

கந்தசாமி கும்பாளம்மன் சந்தில் 'பீட்' கொடுத்துக் கொண்டிருந்தான். அந்தச் சிறு தெருவிலிருந்த மூன்று மின்சார விளக்குகளில் இரண்டு விளக்குகள் எரியவில்லே. பக்கத்து வீதித்திருப்பத்திலிருந்து ஒரு ஆசாமி கையில் ஏதோ ஒரு மிக நீளமான பொருளுடன் வந்து கொண்டிருந்தான். அப்போலீஸ் வீரனின் மனம் 'ஜாக்கிரதை! வருகிறவன் திருடனேதான்! விடாதே!' என்று எச்சரித்தது.

''ஏய் நில்லு அங்கேயே!''

வந்தவன் எட்டவே நின்ருன்.

இரண்டே தாவலில் கந்தசாமி அவன் நின்ற இடத்தை நோக்கிப் பாய்ந்தான். வந்தவனின் கையில் ஒரு நீளமான ஏணி இருந்தது. ஒருகால் சுவரேறிக் குதிப்பதற்காகவா?....

''என்ன அப்பேன், இந்த நேரத்திலே எங்கே புறப்பட்டே?''

''நான் ரோட்டு விளக்கு ரிப்பேர் காரனுங்க! இந்தத் தெரு விளக்கை ரிப்பேர் பண்ணுவதற்கு வந்தேனுங்க!''

''அட சரிதான் தம்பி, சும்மா அளக்காதே. என் சர்வீஸிலே உன்னேப்போல எத்தனே பேரைப் பார்த்திருப்பேன்! ராத்திரி இரண்டு மணிக்கா விளக்கு ரிப்பேர் பண்ண வருவாங்க?''

திருப்பத்தில் பூட்ஸ் சத்தம் கேட்டது. கந்தசாமி திரும்பிப் பார்த்தான். வாட்டசாட்டமான ஒரு ஆசாமி காக்கி அரை நிஜாருடன் அவர்களே நோக்கி வந்தார்.

வந்தவரின் உருவத்திலிருந்து அவர் போலீஸ் உத்தியோகஸ்தராக இருக்குமோ என்று அவனுக்குச் சந்தேகம் தோன்றியது. எதற்கும் முன் ஜாக்கிரதையாக அவருக்கு ஒரு 'ஸல்யூட்' அடித்து வைத்தான்.

அவருடைய கம்பீரமான தோற்றமும் கறுத்த முகமும், வில் மீசையும் ரத்தக் கண்களும் பார்க்கப் பயங்கரமாக இருந்தன. அவர் கந்தசாமியை நெருங்கியதும், ''யாரப்பா, நீதான் இந்த வார்டுக்குப் பீட்டா?...இந்த ஆசாமி யார்? விளக்கு ரிப்பேர்க்காரனு?'' என்று கேட்டார்.

''ஆமாங்க, ஆமாங்க!'' என்று இரண்டு கேள்விகளுக்கும் இரண்டு 'ஆமாம்' போட்டான் கந்தசாமி.

அவர் அந்த ஏணிக்காரனேப் பார்த்து, ''இன்னுமா ரிப்பேர் ஆகவில்லே? சீக்கிரம் அஞ்சு நிமிஷத்திலே முடித்துவிட்டு ஓடணும், தெரியுதா?'' என்று உறுமினுர்.

''ஆகட்டுமுங்க எசமான்!'' என்று பணிவாகக் கூறி விட்டு ஏணியுடன் நகர்ந்தான் அந்த ரிப்பேர் ஆசாமி.

''என்னப்பா, என்னே உனக்குத் தெரியுமல்லவா?'' என்று தணிவான குரலில் கந்தசாமியைக் கேட்டார் அவர்.

கந்தசாமி 'கிரீடத்'தைக் கையிலெடுத்துக் கொண்டு தலேயைச் சொறிந்தான்.

''தெரியவில்லே? உம்...போகட்டும்... ஸி. ஐ. டி. இன்ஸ்பெக்டர் கருப்பண்ணசாமி என்ற பெயரைக் கேள்விப்பட்டிருக்கிருயா?......''

கந்தசாமி அந்தப் பெயரைத் தனது ஜன்மத்தில் கேட்டதில்லே. என்ருலும் தனக்கு ஒன்றுமே தெரியாது என்று சொல்ல அவன் விரும்பவில்லே.

''நல்லாச் சொன்னீங்க. போலீஸிலே இருந்துக்கிட்டு இது கூடவா தெரியாது!

அந்தப் பெயரை நல்லாக் கேள்விப்பட்டிருக்கேனுங்க. ஆனால் அவரை நேரிலே பார்த்தது கிடையாது!''

''ரைட்டோ! இப்போது நன்றாகப் பார்த்துக் கொள்! நான்தான் அந்தக் கருப்பண்ணசாமி!''....

கந்தசாமி விரைப்பாக நின்று ஒரு சல்யூட் அடித்தான்.

''சரி, உன் பெயரென்ன?''

''கந்தசாமிங்க?''

''ஓ! நீதானா அந்தக் கந்தசாமி!''

''ஆமாங்க. நம்ப பேரைக் கேள்விப் பட்டிருக்கிங்களா, ஸார்?''

''மூக்கம்மாள் தெருவில்தானே குடியிருக்கிறாய்?''

''ஆமாம் ஸார்!''

''உங்க அக்காபுருஷன் ஒருவர் மிலிட்டரியிலே வேலை பார்த்தாரா?''

''ஆமாம் ஸார்! உங்களுக்கு....?''

''இப்போ நீ நம்பமனுஷனாகிவிட்டாய், கந்தசாமி! என் தமயனாரும் உங்க அக்காள் புருஷனும் ஒரே பட்டாளத்திலே வேலை பார்த்தவர்கள். அன்றைக்கு உங்க இன்ஸ்பெக்டரிடம் பேசிக் கொண்டிருக்கையில் அவர் உன்னைப் பற்றி வெகுவாகச் சொன்னார்.''

''யாருங்க நம்ப....''

''அளகிரிசாமி நாயுடுதான்!..'நம்ப டிபார்ட்மெண்டிலே இப்போது கந்தசாமி என்கிற ஒரு புதிய ஆசாமி சேர்ந்திருக்கிறான். ரொம்பப் புத்திசாலி! முன்னுக்கு வர வேண்டியவர்களில் அவன் ஒருவன்' என்று சொன்னார்!....''

கந்தசாமியின் உச்சி குளிர்ந்து விட்டது. ''ஸார்! அவரிடம் என்னைப்பற்றிக் கொஞ்சம்....''

''ஆகட்டும் கட்டாயம் கவனித்துக் கொள்கிறேன். ஆனால் நீயும் அதற்குத் தகுந்தாற்போல் பெரிய கேஸ் ஒன்றைப் பிடித்து விட்டால்......''

''நானும் அதற்குத்தான் பார்க்கிறேனுங்க! வகையா ஒண்ணும் மாட்ட மாட்டேன்னுதே ஸார்!''

''நீ ஒரு காரியம் செய்! எனக்கும் ஒத்தாசை, உனக்கும் நன்மை! இப்போது இன்னும் கொஞ்ச நேரத்தில் இங்கே ஒரு பெரிய கொள்ளைக் கூட்டம் வரப் போகிறது!....''

கந்தசாமி அசந்து போனான்!

''இப்பவா? இங்....கேயா?''

''ஆமாம், நமக்கு அதிக நேரமில்லை. துரிதமாக வேலை செய்ய வேண்டும்! இதோ உனக்கு எதிரே இருக்கிறது பார், பெரிய கட்டடம்!''....

கந்தசாமி நிமிர்ந்து பார்த்தான். தெரு விளக்கின் மங்கிய வெளிச்சத்தில் எதிர்க் கட்டடத்தின் முன்னால் ஆங்கிலத்தில் தொங்கிய போர்டை எழுத்துக் கூட்டிப் படித்தான்.

''மணிசங்கர் காந்திலால்:
வைர வியாபாரிகள்''

கருப்பண்ணசாமி மிகவும் தணிவான குரலில் பேசினார்:

''இன்றிரவு இந்தக் கட்டடத்தில் கொள்ளையடிக்கப் போவதாக எனக்குத் தகவல் கிடைத்திருக்கிறது. போலீஸ் பாராவைப் போட்டுக் குழப்பினால் கூட்டத்தினர் எச்சரிக்கையடைந்து வரவே மாட்டார்கள். பிறகு அவர்களைப் பிடிப்பது கடினம். நீ புத்திசாலி என்று எனக்குப் புரிந்து விட்டது. நாம் இப்போது வெகு ஜாக்கிரதையாக வேலை செய்ய வேண்டும். அவர்களைத் தந்திரமாகப் பிடிக்கச் சரியான பிளான் போட்டிருக்கிறேன்....இன்னும் சிறிது நேரத்தில் இங்கே ஒரு லாரி வரும்......''



''லாரியா?''

''ஆமாம், அதிலிருந்து நமது உடையில்லாத ''மப்டி'' ஆசாமிகள் சிலர் இறங்குவார்கள். அவர்களை இந்தக் கட்டடத்துக்குள் ஒளிந்து கொள்ளச் சொல்லிவிட்டுத் திரும்பவும் பழைய படி கதவைப் பூட்டிவிடப்போகிறேன்!''

''அப்புறம்?''

''கொள்ளைக்காரர்கள் வந்ததும் பூட்டை உடைத்துக் கொண்டு உள்ளே நுழைவார்கள். நுழைந்ததும், உள்ளே இருக்கும் நமது ஆட்கள் அவர்கள் மீது பாய்ந்து அவர்களைப் பிடித்து விலங்கு மாட்டி விடுவார்கள்!''

''ஆனால் முதலில் இந்தக் கட்டடத்தைத் திறக்க வேண்டாமா?''

கருப்பண்ணசாமி தமது சட்டையிலிருந்த சாவிக் கொத்தை எடுத்தார்.

''இந்தா கந்தசாமி, நான் இங்கேயே நின்று ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ளுகிறேன். நீ போய் ஓசைப்படாமல் இந்தச் சாவிகளில் எதையாவது போட்டு அந்தப் பூட்டைத் திற!''

இந்தச் சமயம் பார்த்து மின்சார விளக்கை ரிப்பேர் செய்து கொண்டிருந்தவன் எதையோ "லொடக்" என்று தட்டினன். அடுத்தவினடி அந்த வீதியில் எரிந்து கொண்டிருந்த ஒரே விளக்கும் அணைந்து எங்கும் ஒரே அந்தகாரம் சூழ்ந்து கொண்டது.

"என்னய்யா இது! இருந்த ஒரு விளக்கையும் அணைச்சுட்டே!" என்று இரைந்தார் கருப்பண்ணசாமி.

"ப்யூஸ் போயிடுச்சுங்க. வேறே 'ஒயர்' கொண்டு வந்துதான் மாட்டணும்" என்றான் அந்த ரிப்பேர் ஆசாமி.

"சரி, சரி, ஓடிப் போய்ச் சீக்கிரம் கொண்டு வா!" என்றார். அவன் ஏணியிலிருந்து இறங்கி ஓட்டமாக ஓடினன்.

"கந்தசாமி, இதுவும் நல்லதற்குத்தான். இருட்டாக இருந்தால் நம்மிடம் திருடர்கள் சுலபமாகச் சிக்கிக் கொள்வார்கள்! உம், சீக்கிரம் ஆகட்டும்" என்றார் அந்த ஸி. ஐ. டி.



கந்தசாமி இருட்டில் பூட்டைத் தடவி ஒவ்வொரு சாவியாகப் போட்டுப் பார்த்தான். இந்தக் கேஸில் மாத்திரம் அவனுக்குப் பெயர் கிடைத்து விட்டது என்றால் ராமசாமி அண்ணன் கூறிய மாதிரி ஹெட் கான்ஸ்டபிள் உத்தியோகம்கூடக் கிடைத்துவிடலாம்! பிறகு கண்ணம்மாளை வெகு சுலபமாகச் சரிப்படுத்திச் சிங்காரியை.....

பூட்டு 'டடக்' என்று திறந்து கொண்டது. இதே சமயம் வீதியில் லாரியின் ஓசை கேட்டது.

"கந்தசாமி! லாரி வந்துவிட்டது. திறந்தாயா? இல்லையா?"

"திறந்து விட்டேன் ஸார்!"

"சரி, சாவிக் கொத்தைக் கொடுத்து விட்டு நீ தெரு முனையில் போய் நின்று கொள். நான் நமது ஆசாமிகளை உள்ளே இடம் பார்த்து ஒளியச் சொல்லிவிட்டு வருகிறேன். இதற்குள் யாராவது வருவதாகத் தெரிந்தால் நீ எனக்கு எச்சரிக்கை செய்ய வேண்டும்...."

"யாராவது வந்தால் விஸில் ஊதறேன், ஸார்!"

"சேச்சே! காரியம் கெட்டு விடும். வருகிறவர்களுக்கு இங்கே போலீஸ் இருப்பதாகவே தெரியக் கூடாது. பூனை கத்துகிற மாதிரி கத்த வேண்டும். நான் புரிந்து கொள்வேன். என்ன?"

"நல்லதுங்க ஸார்!"....

லாரி மெதுவாக அங்கே வந்து நின்றது. லாரியிலும் விளக்கில்லை. இருட்டில் ஆட்கள் இறங்குவது தெரிந்ததே யொழிய அவர்களது முகங்களைப் பார்க்க முடியவில்லை. கருப்பண்ணசாமி அவர்களை அழைத்துக் கொண்டு கட்டடத்துக்குள் ஓசைப்படாமல் நுழைந்தார்.

கந்தசாமி தெருமுனையில் நின்று பாராக் கொடுத்தான்.

சுமார் பதினைந்து நிமிடங்கள் கழிந்தன. இன்னமும் கருப்பண்ணசாமி வரவில்லை. கொள்ளைக்காரர்களுடைய வாடையும் காணவில்லை. விளக்கு ரிப்பேர்க்காரனும் திரும்பவில்லை. கட்டடத்துக்குள்ளிருந்து ஏதோ 'லொட்' என்று ஓசை கேட்க ஆரம்பித்தது. இந்த ஸி. ஐ. டி. இன்ஸ்பெக்டர் அங்கே என்ன செய்கிறார்?

மேலும் பதினைந்து நிமிடங்கள் சென்றன. ஓசையும் சற்றே பலமாகக் கேட்டது.

கந்தசாமிக்கு இருப்புக் கொள்ளவில்லை. என்ன ஓசை என்று தெரிந்து கொள்ள ஆவல் துடித்தது. மெதுவாகக் கட்டடத்தை நெருங்கினன். சாத்தப்பட்டிருந்த கதவைச் சந்தடி யின்றித் திறந்து கொண்டு எட்டிப் பார்த்தான்.

அவன் கண்ட காட்சி அவனைத் திடுக்கிடச் செய்தது. டார்ச்சு விளக்கின் வெளிச்சத்தில் ஆசாமிகள் இரும்புப் பெட்டியைத் திறந்து கொண்டிருந்தார்கள். அவனது கைகால்கள் வெடவெடத்தன. அப்படியானல் கருப்பண்ணசாமி இன்ஸ்பெக்டர் இல்லையா? இப்போது என்ன செய்வது? என்ன செய்கிறோமென்று தெரியாமல் தன் சட்டைப் பையிலிருந்த ஊதுகுழலை எடுத்து மூன்று முறை மூச்சுப் பிடித்துக் கொண்டு பலமாக ஊதி விட்டான் கந்தசாமி.

அடுத்த கணம் அவனது தலையில் ஒரு பலமான அடி விழுந்தது. அவன் தடுமாறிக் கீழே சாய்ந்தான். கட்டடத்துக்குள்ளிருந்து ஆட்கள் 'திபுதிபு'வென்று வெளியே ஓடி வந்தனர்.

"கந்தசாமி! நீ செய்த உதவியை மறக்க மாட்டேன்!" என்று கருப்பண்ணசாமியின் குரல் கனவில் ஒலிப்பது போல் கேட்டது. அவன் நினைவு இழந்தான்.

மறுநாள் தலையில் கட்டுகளுடன் ஆஸ்பத்திரியில் இருந்தான். (தொடரும்)

# கான்ஸ்டபிள் கந்தசாமி

ஏ.கே.பட்டுசாமி



ஒன்பதாம் அத்தியாயம்

## புயலும் இடியும்

மறுநாள் எல்லாப் பத்திரிகைகளும் பின்கண்ட செய்தியை வெளியிட்டன.

"பிரபல வைர வியாபாரிகளான மணிசங்கர் காந்திலாலின் வியாபார ஸ்தலம் சூறையாடப்பட்டது. கொள்ளைக்காரர்களுடன் எதிர்த்துப் போராடிய கான்ஸ்டபிள் கந்தசாமிக்கு மண்டையில் பலமானகாயம். சென்னை ஜெனரல் ஆஸ்பத்திரியில் அவர் சிகிச்சை பெற்று வருகிருர்."

பத்திரிகையில் கந்தசாமியின் பெயரைக் கண்ட சிங்காரி ஆச்சரிய மடைந்தாள். "அப்பா, அப்பா! இதோ, பத்திரிகையிலே என்ன போட்டிருக்குது, பாருங்க!" என்று பரபரப்புடன் தந்தையிடம் வந்தாள்.

"என்ன போட்டிருக்குது, குழந்தை! யாராவது மந்திரி 'டீபார்ட்டி'க்குப் போனுர் என்று போட்டிருக்குதா?"

"இல்லையப்பா! நம்ம வீட்டுக்கு அன்று வந்தாரே, அந்தப் போலீஸ்காரர்......"

"உம், உம்......தங்கசாமியா?"

"இல்லையப்பா! கந்தசாமி" என்று அவன் பெயரைக் கூறியபோது அவளது முகத்தில் நாணம் படர்ந்தது.

"ஆமாம், ஆமாம் கந்தசாமி, அவரைப் பற்றி ஏதாவது போட்டிருக்குதா? படிபடி!"

சிங்காரி முழு விவரங்களையும் படித்தாள். கந்தசாமிக்கு மண்டையில் நல்ல காயம் என்று படிக்கும்போதே அவளுடைய ஹிருதயத்தில் சுளீரென்று அடி விழுந்தது போலிருந்தது.



''சபாஷ், நல்ல சாமர்த்தியக்காரப் பிள்ளை! வீரன் என்றால் அவன்தான் வீரன்'' என்றார் புலவர்.

''ஆஸ்பத்திரியிலே படுத்திருக்காராமே நாம் போய் அவரைப் பார்க்க வேண்டாமா அப்பா?'' என்று கொஞ்சலாகக் கேட்டாள் சிங்காரி.

''கட்டாயம் பார்க்கத்தான் வேண்டும் அம்மா, ஆனால்....உன்னுடைய சின்ன அம்மா ஏதாவது....''

''அவங்க திருவல்லிக்கேணியிலே யார் வீட்டிலோ கல்யாணம் என்று இப்பத்தான் போகிறுங்கப்பா...சாயந்திரம் தான் திரும்பி வருவாங்க. நாம் அதற்குள்ளாகப் போய் வந்துவிடலாம்'' என்று சொன்னாள் சிங்காரி.

தலையில் பெரும் கட்டுப் போட்டுக்கொண்டு படுத்திருந்த கந்தசாமியை அவர்களால் அடையாளம் கண்டுபிடிக்க முடியவில்லை. அவன் இருக்குமிடம் தெரியாமல் சுற்றுமுற்றும் பார்த்தாள் சிங்காரி. அதற்குள் அவர்களைக் கவனித்து விட்ட கந்தசாமி சிரமப்பட்டு, ''மாமா! இங்கேதான் இருக்கிறேன்!'' என்றான்.

அவனது குரலைக் கேட்டுத் திரும்பியசிங்காரியைப்பார்த்து மண்டை வலியையும் சகித்துக் கொண்டு அவன் இலேசாக முறுவலித்தான்.

அவனது பரிதாப நிலையைக் கண்டு வேதனையடைந்த அதே சமயத்தில் ''மாமா!'' என்று அவன் தன் தகப்பனாரை முறை கொண்டாடி அழைத்ததைக்கண்டு அவளது உள்ளத்தில் ஒரு இன்ப உணர்ச்சியும் தோன்றியது.

புலவரை அருகிலிருந்த ஆசனத்தில் உட்காரச் சொல்லி, அவள் பக்கத்திலே நின்று கொண்டாள்.

''மாமா!'' என்று மீண்டும் கூப்பிட்டு விட்டுச் சிங்காரியை உற்று நோக்கினான் அவன். அவள் நாணித் தலைகுனிந்தாள். புலவர் ஆட்சேபித்துப் பேசவில்லை.

''சொல்லப்பா கந்தசாமி! உடம்பு எப்படியிருக்கிறது? பேப்பரில் படித்தேன். ஏது, பெரிய கொள்ளைக் கூட்டத்தில் சிக்கிக் கொண்டாயாமே!''

இன்ஸ்பெக்டர் அளகிரிசாமி நாயுடு முதல் ஆஸ்பத்திரி நர்ஸ் உள்பட அவன் அதுவரையில் எத்தனையோ பேர்டம் சொல்லிவிட்ட தன் வீரக் கதையை மீண்டும் சொல்ல ஆரம்பித்தான்.

"நல்லாச் சொன்னீங்க. தன்னந் தனியாகக் கிடுகிடுன்னு சுற்றி ஒவ்வொரு திருடனையும் அடிச்சிருக்கேன் பாருங்க! ஆறு மாசத்துக்குப் படுக்கையைவிட்டு எழுந்திருக்க மாட்டாங்க!"

"உன் தலையிலே இருக்கிற கட்டைப் பார்த்தால் உன் உடம்பு குணமாவதற்குக் கூட வெகு நாட்களாகும் போல் இருக்குதே!"

"விட்டுத் தள்ளுங்க. இதெல்லாம் வரவா? செலவா! பயங்காளிப் பசங்க பின்னாலிருந்து அடிச்சுட்டாங்க! இன்னும் ஒரே வாரத்திலே நான் வெளியே வந்து விடுவேன்."

சிங்காரி தணிவான குரலில் பேசினாள்: "உடம்பைப் பார்த்துக்குங்க. நீங்க ஓயாமல் பேசிக்கிட்டே இருந்தால் உங்கள் உடம்பு ரொம்ப அலண்டு போகும்!"

அவள் தன்னிடம் காட்டும் பரிவைக் கண்டு கந்தசாமியின் உள்ளம் குளிர்ந்துவிட்டது.

"இதோ பார், தம்பி! முடிந்தால் நான் நாளைக்காவது மறுநாளாவது வந்து பார்க்கிறேன். இல்லையானால் உடம்பு குணமானதும் நீ நம் வீட்டுக்கு அவசியம் வா. சிங்காரியின் கல்யாண விஷயம் முத்திக்கிட்டே போகுது. அது விஷயமா உங்கிட்ட சில முக்கிய விஷயங்கள் பேச வேண்டும்" என்றார் புலவர்.

சிங்காரி விஷயம் என்றதும கந்தசாமி பேச்சோடு பேச்சாக, "இதோ பாருங்க, இப்பவே என் பெயர் பேப்பரிலெல்லாம் அடிபட்டுப் போச்சு. சீக்கிரமே உத்தியோகம் உயர்வதற்கு இதுதான் முதல் படி!" என்றான் பெருமிதத்துடன்.

இதே சமயம் வெளி வராந்தாவில் முத்தம்மாளின் குரல் கேட்கவே, "அக்கா! வாங்க" என்று வரவேற்றான் கந்தசாமி.

"நாம்ப போகலாம், அப்பா!" என்றாள் சிங்காரி. அவளது கண்கள் அவனிடம் விடை கேட்டன. அவனது முறுவல் விடை கொடுத்தது.

முத்தம்மாளும் தருமலிங்கமும் பேசிக் கொண்டே உள்ளே நுழைந்தனர். அவர்களுக்குப் பின்னால் தயங்கித் தயங்கி வந்து கொண்டிருந்த முனியம்மாளைத்தொடர்ந்து 'மப்டி'யில் வந்த கான்ஸ்டபிள் முருகேசன் அவளை அணுகி வெளி வராந்தாவிலேயே நிறுத்தினான்.

"இதோ பார், நீ கந்தசாமியின் மாமன்மகள் முனியம்மாள்தானே?"

அப்போது தான் அவர்களைத் தாண்டிச் சென்று கொண்டிருந்த சிங்காரி, "கந்தசாமி" என்ற பெயர் காதில் விழுந்ததும் சடக்கென்று திரும்பி அவர்களைப் பார்த்தாள்.



முனியம்மாள் சிரித்துக் கொண்டே, அந்த ஆசாமியிடம் ஏதோ பதிலளித்தாள். மீண்டும் அவன் தணிவான குரலில் ஏதோ கேலியாகக் கேட்கவும், அவள் நாணிக் கோணிக் கொண்டு, ''அப்புறமா சொல்லுகிறேன்'' என்று கூறிய வண்ணம் ஓடிவிட்டாள்.

சிங்காரியின் மனத்தில் புயல் வீசியது. 'கந்தசாமிக்கு மாமன் மகள் ஒருத்தி யிருக்கிறாளா? இந்த ஆசாமி அவளை என்ன கேட்டான்? ஒருகால் கல்யாணம் எப்போது என்றா? அதற்குப் பதிலாகத் தான் அவள் 'அப்புறமா சொல்கிறேன்' என்று கூறினாளா?'

இனம் தெரியாத ஒரு வேதனையும் பொறாமை யுணர்ச்சியும் அவளது உள்ளத்தில் வியாபித்தன.

* * *

வீட்டை நெருங்கியபோது அவர்களுக்கு ஒரு பெரிய அதிர்ச்சி காத்திருந்தது. மாலையில்தான் திரும்புவாள் என்று நினைத்திருந்த கன்னம்மாள் முன்புறத் தோட்டத்தில் கூண்டுப் புலி போல் மேலும் கிழுமாக உலாவிக் கொண்டிருந்தாள். வராந்தாவில் பயங்கர மீசையும், ரத்தக் கண்களும், கிருதாக் கிராப்புமாக உயரமான ஒரு ஆசாமி நின்று கொண்டிருந்தான். சிங்காரியின் மனம் 'திக்திக்' என்று அடித்துக் கொண்டது.

அவள் மெதுவாக, ''அப்பா, சின்ன அம்மா வந்துட்டாங்க, அப்பா!'' என்றாள்.

''சரிதான் இன்றைக்குக் கிரகபலன் சரியாக இல்லை'' என்று பெருமூச்சுவிட்டார் கிழவர்.

அவர்களைப் பார்த்ததும் அப்படியே நாகம் போல் சீறி விழுந்து பிடுங்கப் போகிறாள் என்று நினைத்ததற்கு நேர் மாறாகக் கண்ணம்மாள் சற்று நிதானமாகவே பேசியது சிங்காரிக்கு மிகுந்த ஆச்சரியத்தை யளித்தது.

''எங்கே போயிட்டீங்க சிங்காரி, காலையிலே கதவையும் பூட்டிக்கிட்டு?''

என்ன பதில் சொல்லலாம் என்று அவள் யோசித்துக் கொண்டிருக்கையிலேயே முத்துப் புலவர் குறுக்கிட்டு, ''ஆஸ்பத்திரிக்குப் போய்விட்டு வந்தோம்'' என்று உளறி விட்டார்.

'ஏன் போனீர்கள்?' என்று கேட்பாளோ என்று பயந்தபடி ஆகவில்லை.

''அப்பாவுக்கு உடம்பு சரியில்லேன்னு அழைச்சுட்டுப் போனியா, சிங்காரி, சரி சரி. கதவைத் திற'' என்று சாந்தமாகப் பேசினாள் கண்ணம்மாள்.

சிங்காரி கதவைத் திறந்தாள். கண்ணம்மாள் அந்தப் புது மனிதனை அழைத்துக் கொண்டு கூடத்துக்குப் போனாள். முத்துப் பிள்ளை விவரம் புரியாது விழித்துக் கொண்டே தம் அறையில் புகுந்து முடக்கிக் கொண்டார்.

''சிங்காரி! சீக்கிரமா தம்பிக்குக் கொஞ்சம் காப்பி போட்டு எடுத்துக் கிட்டு வா!'' என்றாள் கண்ணம்மாள்.

அவன், ''எதற்குங்க அதெல்லாம்? வேண்டாம்!'' என்றான்.

''சும்மா இருக்கட்டும் தம்பி, வித்தியாசம் பார்க்காதே. எங்கள் வீடு வேறே இல்லை. மருதமும் நானும் எத்தனை சிநேகம் தெரியுமா!''

அடுக்களையிலிருந்த சிங்காரிக்கு அவர்களது பேச்சு காதில் விழுந்தது. மருதம்மாள் அடிக்கடி பெருமையடித்துக் கொள்ளும் தங்கவேலு இவன்தான் என்று அவளுக்குப் புரிந்து விட்டது. அவனது கடுகடுப்பான முகமும், மிருகத்தைப் போன்ற தோற்றமும் அவளது மனத்தில் வெறுப் புணர்ச்சியையும் அருவருப்பையும் உண்டாக்கின.



வரவர மருதம்மாளிடம் சின்னம்மாவின் சிநேகம் வலுத்துக் கொண்டே வந்தது! தினம் தினம் அவர்கள் கூடிக் கூடி ரகசியம் பேசுவதும், இப்படிக் கண்டவர்களையும் வீட்டுக்கு அழைத்து வந்து 'காப்பியைப் போடு. பலகாரத்தைப் பண்ணு' என்று அவள் செய்த அதிகாரமும் சிங்காரிக்குக் கட்டோடு பிடிக்கவில்லை.

அவள் தன் சாரமற்ற வாழ்க்கையை எண்ணினாள். அன்பு காட்டிச் சீராட்டத் தாயில்லை. ஆதரவு காட்ட வேண்டிய தந்தை அநாதரவான நிலையில் இருந்தார். அந்த வாலிப வயதில் அவளது ஆசாபாசங்களை வெளியிடக்கூட வீட்டில் சுதந்திரம் கிடையாது. அவளுக்கென்று யாரும் தோழிகளும் இல்லை. அவளையோ, தந்தையையோ தேடிக்கொண்டு யாரும்

வீட்டுப் பக்கம் வரக் கூடாது என்பது கண்ணம்மாவின் கண்டிப்பான உத்தரவு! பொழுது விடிந்தால் பொழுது போனால் சின்னம்மாவையும், அவளது தோழிகளையும் மனச்சாட்சிக்கு விரோதமாகப் புகழ்ந்து பேசுவதும், அவர்களுக்குப் பணிவிடை புரிவதுமேதான் வாழ்க்கையின் லட்சியம் என்றாகி விட்டது! அவளது எதிர்காலம் என்ன ஆகும்? தந்தை மட்டும் இல்லாதிருந்தால், கண்ணம்மாளின் அதிகாரத்தைச் சகித்துக் கொண்டு ஒரு விநாடி அவள் வீட்டில் இருக்க மாட்டாள்.

காப்பி தயாரானதும் கொஞ்சம் ஒதுப்புறத்திலிருந்தே, "காப்பி போட்டாச்சு, சின்னம்மா!" என்றாள்.

"போட்டாச்சுன்னா இங்கே கொண்டு வாயேன், சிங்காரி!"

விதியே என்று தலைகுனிந்த வண்ணம் காப்பிப் பாத்திரத்துடன் கூடத்துக்கு வந்தாள் அவள். தங்கவேலு வேட்டை நாயைப் போல் அவளையே உறுத்துப் பார்த்துக் கொண்டிருந்தான்.

"சிங்காரி! உன்னை இவனுக்குத்தான் கட்டிக் கொடுக்கப் போகிறேன்" என்றாள் கண்ணம்மாள்.

சிங்காரியின் கையிலிருந்த காப்பிப் பாத்திரம் நழுவித் தடாலென்று கீழே விழுந்து, அதிலிருந்த காப்பி கண்ணம்மாவின் முகத்திலும், அருகில் இருந்த தங்கவேலுவின் முகத்திலும் தெறித்தது.

## பத்தாம் அத்தியாயம்

# பூகம்பம்

முனியம்மாள் ஊரிலிருந்து வந்தபோது பெருத்த மனக்கோட்டைகள் கட்டிக் கொண்டுதான் வந்தாள். அவளது பன்னிரண்டாம் வயதில் தாய் இறந்தது முதல் குடும்பப் பொறுப்பு முழுவதும் அவள் மீது விழுந்தது. கோவில், குளம், பூஜை, புனஸ்காரம், சிவனடியார்கள் சேவை என்று சதா பக்தி மார்க்கத்திலேயே ஈடுபட்டிருந்த தருமலிங்கம், வீடு வாசல் என்ற நினைவே இல்லாமல் இருந்தார்.

பெண்ணுக்கு வயதாகிக் கொண்டே வருவதும், அவள் மளமளவென்று இல்லறப் பாங்கையடைந்து நிற்பதுங் கூட அவரது கவனத்தைக் கவரவில்லை. கிராமத்திலுள்ள தன்னையொத்த வயதுள்ள பெண்கள் விவாகமாகிக் குடியும் குடித்தனமுமாக வாழ்வதையும், அடிக்கொருமுறை தங்கள் பிறந்தகத்துக்கு வரும்போது தமது இல்வாழ்க்கையைப் பற்றி அவர்கள் கூறும் பெருமைகளையும் கேட்டுக் கேட்டு அவளது இளம் உள்ளம் பொருமியது.

இந்தச் சமயத்தில்தான் முத்தம்மாளுக்கு அவளைப்பற்றி நினைவு வந்தது. முனியம்மாளைப் பட்டணத்தில் கொண்டு வந்து விட வேண்டியது என்று கடிதம் வந்ததும் அவள் தனது எதிர்காலத்தைப் பற்றிப் பிரமாதமாகக் கற்பனை செய்ய ஆரம்பித்தாள்.

அருமை அத்தான் தன்னிடம் அளவற்ற அன்பு காட்டுவான்; சுகம் என்பதையே கண்டறியாத தன் வாழ்க்கை வளம் பெறப் போகிறது, ஒரு போலீஸ் வீரனுக்கு வாழ்க்கைப்பட்டுச் சென்னைப் பட்டணத்தில் சீரும் சிறப்புமாக வாழப் போகிறோம், கிராமத்துக்கு வரும்போது மற்றப் பெண்களிடம் அத்தானின் வீரத்தைப் பற்றிக் கதை கதையாகச் சொல்ல வேண்டும் என்றெல்லாம் பெருமையாக எண்ணிக் கொண்டு சென்னை வந்த அவளுக்குக் கந்தசாமி அவளிடம் நடந்து கொண்ட முறை பெருத்த ஏமாற்றத்தையும் துக்கத்தையும் அளித்து விட்டது.

வந்தநாள் முதலாகவே அவன் அவளைக் கண்ணில் காணவொட்டாது வெறுத்தான். முதல்நாள் அவள் அன்போடு அவனுக்குக் காப்பியும் பலகாரமும் கொண்டு வைத்தபோதே, மற்றவர்களுக்குத் தெரியாமல் "சீ! உன் மூஞ்சியும் முகரையும். காப்பி கொண்டுவந்துட்டியா காப்பி? உன் கையாலே யார் வாங்கித் தின்னுவது! இன்னொரு தரம் என் எதிரே வந்தே தெரியும் சேதி!" என்று கடுமையாக அவளது மனத்தைப் புண்படுத்தி விட்டான். எப்பொழுதாவது அவனது சிப்பையோ, சோப்பையோ தப்பித்தவறி எடுத்துவிட்டால், "நாட்டுப் புறத்துக் கழுதை! உங்க ஊரிலே சோப்புத் தேச்சுத்தான் வளர்ந்தியா! இனிமேல் அதைத் தொட்டால் கையைக் காலை ஒடிச்சுக் கழுத்திலே மாட்டி விடுவேன்!" என்று விரட்டத் தொடங்கினான் அவன். இப்படித் திட்டுகிறானே என்று அவள் கண்ணைக் கசக்கினாள் என்றால் "மூதேவி மாதிரி அழத் தொடங்கி விட்டாயே? ஊருக்காவது போய்த் தொலைகிறதுதானே!" என்று கோபத்துடன் சீறி விழுவான்.

முனியம்மாளின் எண்ணக்கோட்டை கலகலத்து விட்டது. அதற்குத் தகுந்தாற்போல் முத்தம்மாளுக்கும் அத்தா

னுக்கும் இடையே நடந்த புகைச்சல்களி லிருந்து அத்தானைப் பற்றிக் கனவு காண்பது வீண் என்பதை அவள் உணர்ந்து கொண்டாள். அதிகமாக அவனிடம் பழகாமல் தொலைவாகவே இருக்கத் தொடங்கினாள். அவன் தலையைக் கண்டவுடனே பயந்து பதுங்கத்தலைப்பட்டாள்.

இந்த நிலையில்தான் முருகேசன் அன்று ஆஸ்பத்திரியில் சந்தித்துக் கனிவாகப் பேசினான். மணவாழ்க்கை என்பது தன் அதிர்ஷ்டத்தில் இல்லை போலும் என்று நிராசையடைந்திருந்த அவளது வறட்சி உள்ளத்தில் முருகேசனுடைய அநுசரணையான மொழிகள் ஒரு புது நம்பிக்கையைத் தளிர்க்கச் செய்தன.



அன்று காலையிலேயே தருமலிங்கம் ஊருக்குப் புறப்பட்டு விட்டார். முத்தம்மாளும் தம்பியைப் பார்க்க ஆஸ்பத்திரிக்குப் போய் விட்டாள். முனியம்மாள் ஆஸ்பத்திரிக்கு வருவதைத் தம்பி விரும்பவில்லை என்பதை அவள் ஜாடையாகக் கண்டு கொண்டாள். ஆகவே அவளை வீட்டைப் பார்த்துக் கொள்ளச் சொல்லி விட்டு அவள் மட்டுமே சென்றாள்.

அவள் போனதும் முருகேசன் வந்தான். முனியம்மாள் நாணத்தோடு எழுந்து அவனை வரவேற்றாள்.

''அவங்க ஆஸ்பத்திரிக்குப் போயிருக்காங்க!'' என்றாள்.

''நீ அதைச் சொல்லணுமா, முனியம்மா! அது தெரிஞ்சுதானே நான் உன்னைப் பார்க்க வந்தேன்!.....உன் கிட்ட ஒரு முக்கியமான சங்கதி கேட்கணும்....'' என்றான்.

முனியம்மாள் ஆவலோடு அவனது முகத்தைப் பார்த்தாள்.

''நீ அன்றைக்குச் சொன்னாயே, அத்தானுக்கும் உனக்கும் கல்யாணம் நடக்கப் போவதில்லை என்று! ஏன் அப்படி? ஏதாவது....'' என்று இழுத்தான் முருகேசன்.

முனியம்மாள் பதில் பேசவில்லை. முருகேசனின் கேள்வி அவளது துயரத்தைக் கிளறிவிட்டது. சந்தசாமி அவளை அலட்சியப் படுத்தித் திட்டிய திட்டுகள் நினைவுக்கு வந்ததும் கண்களில் நீர் சுரந்தது.

அவளது கண்கள் கலங்கியதைக் கண்ட முருகேசனின் மனம் வேதனையடைந்தது.

''என்ன முனியம்மா! நான் ஏதாவது தப்பாகக் கேட்டு விட்டேனா?''

துக்கம் தொண்டையை அடைக்க அவள் மெதுவாகத் திக்கிக் கொண்டே கூறினாள்: ''இல்லைங்க, அவருக்கு என்னைக் கண்டாலே பிடிக்கல்லே!......''

அவன் அந்தக் கள்ளங்கபடமற்ற பெண்ணைக் கனிவாகப் பார்த்தான்.

''நீ வருத்தப் படாதே, முனியம்மா! அவன் கிடக்கிறான்!'' என்று அவளைச் சமாதானப்படுத்தினான்.

அடக்க முடியாத துயரம் உள்ளத்தில் அலை மோதும்போது யாராவது ஆறுதலாக இரண்டு வார்த்தை கூறி விட்டால், அந்தத் துயரம் அடங்குவதற்குப் பதிலாக அதிகரித்து விடுவதும் உண்டு. முனியம்மாள் விஷயத்தில் இது உண்மையாகி விட்டது.

''இந்த உலகத்திலே, யாருமே விரும்பாத ஒரு ஜென்மமாகப் பொறந்துட்டேன்!...'' என்று விம்மலுக் கிடையே கூறி விசிக்கத் தொடங்கினாள் அவள்.

அதற்கு மேலும் அந்த அபலையின் அழுகையைப் பார்த்துக் கொண்டு வாளா இருக்க அவனால் இயலவில்லை. அருகில் சென்று அன்போடு அவளது கேசத்தை வருடிக் கொண்டே, ''இதோ பாரு முனியம்மா, என்னைக்கூடவா அப்படி நினைக்கிறே! அந்தப் பயலுக்கு உன் அருமை தெரியாமல் போனால் எல்லாருமே அப்படி இருப்பாங்களா? இதற்குப் போய் அசட்டுத்தனமா அழலாமா?... என்னைப் பாரு! கண்ணைத் துடைத்துக் கொள்'' என்று முருகேசன் அன்பாகப் பேசினான். அவளது உடல் ஆனந்தத்தால் சிலிர்த்தது.

இதே சமயம் வெளிவாசற்படி யருகில் ஆளரவம் கேட்கவும் முனியம்மாள் முருகேசனைக் கண்களால் எச்சரிக்கை செய்த வண்ணம் மெதுவாக உள்ளே நழுவினாள். முருகேசனும் பேச்சை மாற்றி, ''சரி, அவங்க இல்லையா?...... அப்படியானால் நான் போகிறேன். வந்தால் சொல்லுங்க!'' என்று கூறிக் கொண்டே திரும்பினான். அதேசமயம்

வீட்டுக்கு உள்ளே நுழைந்த முத்தம்மாள் "என்ன தம்பி, என்ன விசேஷம்?" என்று கேட்டாள்.

"ஒண்ணுமில்லே. கந்தசாமியை ஆஸ்பத்திரியிலே போய்ப்பார்க்க முடியல்லே. ஸ்டேஷனிலே ஏகப்பட்ட வேலை. இந்தப் பக்கம் ஒரு காரியமாக வந்தேன். அப்படியே உங்களையாவது பார்த்து விசாரிச்சு விட்டுப் போகலாம்னு வந்தால், நீங்க ஆஸ்பத்திரிக்குத்தான் போயிருக்கிறதாகத் தெரிஞ்சது. நீங்க இல்லாத சமயத்திலே நான் மட்டும் இங்கே நின்று பேசிக்கிட்டிருந்தால் தப்பு பாருங்க. அது தான் புறப்பட்டுவிட்டேன்!"

இதே நேரத்தில் முத்துப் பிள்ளையின் வீட்டில் பூகம்பத்துக்கான அறிகுறிகள் காணப்பட்டன. கண்ணம்மாள் ரௌத்திராகாரமான கோபத்துடன் விளங்கினாள். மருதம்மாளும் தங்கவேலுவும் மீண்டும் அப்போதுதான் வந்து போனார்கள். கண்ணம்மாள் சிங்காரியின் விவாகத்தைப் பற்றி அவர்களிடம் முடிவாகப் பேசித் தீர்த்து விட்டாள்.

'அடுத்த வாரம் வெள்ளிக்கிழமையன்று நிச்சய தாம்பூலம் மாற்றிவிடுவது. அதற்கடுத்த புதன்கிழமை திருநீர் மலையில் சுருக்கமான முறையில் கல்யாணத்தை நடத்திவிட வேண்டியது. உறவினர்கள் யாரையும் கூப்பிட்டுத் தம் பட்டம் அடிக்க வேண்டிய அவசியம் இல்லை. விவாகம் ஆன மறுநாளே தங்கவேலு சிங்காரியை அழைத்துக் கொண்டு ராணிப்பேட்டைக்குப் போய்விடுவான்.' இவ்வாறு அவர்களுக்குள்ளாகவே பேசி முடித்துக் கொண்டார்கள்.

வழக்கம்போல் முத்துப்பிள்ளையைப் பேச்சில் சேர்த்துக் கொள்ளவேயில்லை. அவரது மனம் குமுறிக் கொண்டிருந்தது. சிங்காரியின் மனநிலை விவரிக்க வொண்ணுததாக இருந்தது. இதற்கு முன் கண்ணம்மாளும், மருதம்மாளும் கூடிப் பேசும் போதெல்லாம், அவள் அவை சர்வ சாதாரணமான வெட்டிப் பேச்சுக்கள் என்று சிறிது அலட்சியமாகவே கருதியிருந்தாள். 'புலி வருகிறது, புலி வருகிறது' என்று கடைசியில் வந்தே விட்டது. இவ்வளவு சீக்கிரமாக முடிவு கட்டி விடுவாள் என்று அவள் எதிர்பார்க்கவே இல்லை. மருதமும் தங்கவேலுவும் விடைபெற்றுக் கொண்டு சென்ற உடனேயே சிங்காரி துக்கமும், கோபமும் ஒருங்கே கொந்தளிக்கக் கூறினாள்:

"சின்னம்மா! இப்பொழுதே சொல்லி விட்டேன். உங்க ஏற்பாடு எனக்குத் துளிக்கூடச் சம்மதமில்லை."

"ஆஹ்ஹாங்! அவ்வளவு தூரத்துக்கு வந்துவிட்டாயா நீ! நேற்றையச் சிறுக்கி, என்னை எதிர்த்துப்பேசக்கூடத் துணிச்சல் வந்துடுச்சா! என் தீர்மானத்தை மாற்ற ஈசுவரனாலும் முடியாது! பார்த்துடறேன் எப்படிச் சம்மதிக்காமல் போகிறேன்னு!" என்று கர்ஜித்தாள் கண்ணம்மாள்.

சிங்காரியும் விடவில்லை. தலைக்கு மேல் போகிற வெள்ளம், சாண் போனால் என்ன, முழம் போனால் என்ன என்று தைரியமாகவே பதிலுக்குப் பதில் சுடச் சுடப் பேசி விட்டாள்.

மகளது துணிவைக் கண்ட புலவருக்கும் தைரியம் பிறந்து விட்டது.

"இதோ பார்! என் மகளைக் கண்ட கழுதைக்கும் விலை கூறக் கடைத் தெரு கத்தரிக்காய் என்று நினைத்துக் கொண்டாயா! அவளை யாருக்குக் கட்டிக் கொடுக்கிறதென்று எனக்குத் தெரியும்! நான் அவளுக்குப் புருஷன் பார்த்து வைத்தாகி விட்டது!" என்று ஆவேசமாக இரைந்தார் அவர்.

அவ்வளவுதான்; எரிகிற நெருப்பில் எண்ணெயை ஊற்றியது போலாகி விட்டது. கண்ணம்மாள் எரிமலை போல் நெருப்பைக் கக்கலானாள்!

"ஹூம்! புருஷன் தேடுகிற முகரையைப் பாரு! காலணா சம்பாதிக்கக் கையாலாகவில்லை. உங்க அதிகாரம் கொடி கட்டிப் பறக்குதோ? ஏதேது? அப்பனுக்கும் பெண்ணுக்கும் வரவர வாய் துளுத்துப் போச்சு! இந்த வீட்டிலே என்னுடைய இஷ்டப்படித் தான் நடக்க முடியும்!"

"உன் இஷ்டமென்ன உன் இஷ்டம்! அவள் என் மகள்! அவளுடைய கல்யாண விஷயத்தில் தலையிடுவதற்கு உனக்கு எந்தவிதமான உரிமையும் இல்லை!"

"என்ன! எனக்கு உரிமையில்லையா? அப்படியானால் இது என் வீடு! என் பேச்சைக் கேட்காதவர்களுக்கு இந்த வீட்டிலே இருக்கவும் உரிமையில்லை."

முத்துப் பிள்ளைக்குத் தம் வாழ்க்கையிலேயே அதுவரையில் ஏற்பட்டு அறியாத கோபம் உண்டாகியது.

"என்னது! உன் வீடா! உன் அப்பன் வீட்டிலிருந்து சீதனம் கொண்டு வந்தியோ! இன்னொருதரம் சொல்லு!" என்று கையை ஓங்கிக் கொண்டு கண்ணம்மாளை நோக்கித் தடுமாறிக் கொண்டே இரண்டடி எடுத்து வைத்தார். அடுத்த விநாடி அவரது தலை கிர்ரென்று சுற்றியது. அந்த வீடும் அங்கிருந்த பொருள்களும் தட்டாமாலை யாடுவது போல் இருந்தன. தள்ளாடிக் கீழே விழுந்து விட்டார் அவர்.

"அப்பா! அப்பா!" என்று தீனமாகக் கதறிய வண்ணம் ஓடிப் போய் அவரைத் தூக்க முயன்றாள் சிங்காரி. (தொடரும்)

பதினோராம் அத்தியாயம்

## கலங்கரை விளக்கம்




கந்தசாமி ஆஸ்பத்திரிக்கு வந்து சுமார் பதினைந்து தினங்களாயின. அவனது உடம்பு வெகுவாகக் குணமடைந்து விட்டது. அன்றுகட்டுகளை அவிழ்த்து விட்டு வெறும் 'பிளாஸ்திரி' மாத்திரம் போட்டிருந்தார்கள். கூண்டுச் சிறையிலிருந்து எப்போது விடுபடுவோம் என்று ஏங்கித் தவிக்கும் பறவையைப் போலத் துடிதுடித்துக் கொண்டிருந்த அவனுக்கு, 'இன்னும் நாலைந்து தினங்களில் வீட்டுக்குப் போகலாம்' என்று டாக்டர் கூறியதும் ஒரே குதூகலமாக இருந்தது.

முதல் நாள் வந்து போன பிறகு சிங்காரியும் புலவரும் அந்தப் பக்கமே எட்டிப் பார்க்காதது அவனுக்கு மிகுந்த ஏமாற்றத்தையும் கவலையையும் கொடுத்துக் கொண்டிருந்தது. 'சிங்காரியின் கல்யாண விஷயம் வரவர முற்றிக் கொண்டே போகிறது!' என்று புலவர் கூறியது அவனது மனத்தை அரித்துக்கொண்டே யிருந்தது. ஒருவேளை கண்ணம்மாள் ஏதாவது தீர்மானமாக முடிவு செய்து கிழவரையும் சரிப்படுத்தி விட்டாளோ! அவர் மட்டுமென்ன? 'எடுப்பார் கைக் குழந்தை' தானே! யாராவது கொஞ்சம் தூக்கி வைத்துத் தேனொழுகப் பேசி விட்டார்களென்றால் உடனே அவர்களது வலையில் விழுந்து விட மாட்டாரா! ஆனால் சிங்காரி?...

பலவித சிந்தனைகளால் மூளையைக் குழப்பிக் கொண்டு படுத்திருந்த சமயத்தில் முருகேசன் அங்கு வந்து சேர்ந்தான்.

''என்ன கந்தசாமி! நாலைந்து நாட்களில் உன்னை 'டிஸ்சார்ஜ்' பண்ணப் போகிறாங்களாமே?'' என்று கேட்டான்.

''பின்னே, இங்கேயேவா நாள் கணக்கா படுத்திருக்கச் சொல்லறே?''

''அதுக்கில்லையப்பா, 'டிஸ்சார்ஜ்' பண்ணி விட்டால்கூட, பேசாமல் இன்னும் பதினைஞ்சு நாளைக்கு லீவு போட்டு விட்டு வீட்டிலே ஓய்வு எடுத்துக்கிட்டால்தான் நல்லது. நானும் அடிக்கடி வந்து உன்னைக் கவனிச்சுக்கறேன்'' என்றான் முருகேசன் மிகுந்த அன்புடன்.

கந்தசாமி அவன் கூறியதைக் கேட்டுச் சிரித்தான். அவன் அடிக்கடி வந்து கவனித்துக் கொள்ளுகிறேன் என்று கூறியது, அந்தச் சாக்கில் முனியம்மாளைப் பார்ப்பதற்காகத்தான் என்று அவனுக்கு நன்றாகத் தெரியும். அவன் ஆஸ்பத்திரியில் படுத்த நாள் முதல் தருமலிங்கமும் முனியம்மாளும் வரும் போதெல்லாம் முருகேசனும் கூடவே பருந்து போல் வட்டமிட்டுக் கொண்டு

சுற்றி வருவதை அவன் கவனியாமல் இல்லை. முருகேசனின் கண் வெட்டும், முனியம்மாளின் புன்சிரிப்பும் அவனது பார்வைக்குத் தப்பவில்லை. அதுவும் ஒரு நன்மைக்குத்தான் என்று கருதினன்.

''ஆமாம் முருகேசா! நான் வீட்டிலே ஓய்வெடுத்துக் கொண்டாலும் இல்லா விட்டாலும் நீ மாத்திரம் அடிக்கடி நம்ம வீட்டுக்குத் தவருமல் வந்து கவனிச்சுக்கோ அப்பா! அதுக்கும் உன் மேலே பிரியம்தானே?'' என்று சடக்கென்று ஒரு கேள்வியைப் போட்டு வைத்தான் கந்தசாமி.

எதிர்பாராத இந்தக் கேள்வி முருகேசனைத் திணறச் செய்தது.

''எதைச் சொல்லுகிருய் கந்தசாமி?''

''எதைச் சொல்லுவேன்! முனியம்மாளைத்தான் சொல்லுகிறேன்! இதோ பார், முனியம்மாளை நான் கட்டிக் கொள்ளப் போகிறதில்லை. அதுக்கும் உன் மேலே விருப்பம்தான் என்று எனக்கு நன்ருகத் தெரியும்!''

முருகேசனுக்குப் பழம் நழுவிப் பாலில விழுந்தது போலிருந்தது. கந்தசாமிக்கு அவளைக் கட்டிக் கொள்ள விருப்பமில்லை என்ற செய்தி அவனுக்குப் புதிதல்ல. ஆனல் பிடிவாதக்கார முத்தம்மாள் உறவு முறை விட்டுப் போகக் கூடாதென்று அவனது மனத்தைக் கரைத்து விடுவாளோ என்றுதான் அவன் அஞ்சிக் கொண்டிருந்தான்.

ஒரு நிமிஷம் அவன் பேசவில்லை. கந்தசாமி சிரித்தான்.

''எனக்கு எல்லாம் தெரியும், முருகேசா! முனியம்மா உனக்குத்தான்.''

முருகேசனின் முகத்தில் அசட்டுக் களை தட்டியது.

''என்ன கந்தசாமி, பரிகாசம் பண்ணறே! முனியம்மா உனக்கு என்று பிறந்து வளர்ந்திருக்குது! உன்னை நம்பிப் பட்டணத்துக்கு வந்திருக்குது! நீ என்னடான்னு, காஷாயம் வாங்கிக் கிட்டவன் மாதிரி பேசறியே!...அடுத்த மாசமே உன் கல்யாணத்தை நடத்தி விட வேணும்னு சொல்லிக்கிட்டிருக்குது உங்க அக்கா!'' என்று கூறி விட்டு அவனை அவநம்பிக்கையோடு ஒரு தடவை பார்த்தான்.

இதே சமயம் அழகே உருவெடுத்தது போன்ற ஒரு இளம் பெண் அவர்களை நோக்கி ஒய்யாரமாக நடந்து வருவதைக் கவனித்தான் முருகேசன். கந்தசாமியின் அருகில் அவன் உட்கார்ந்து பேசிக் கொண்டிருப்பதைக் கண்டு தயங்குவதைப் போல் ஒரு கணம் அவள் அந்த நீண்ட ஹாலின் கோடியிலேயே நின்ருள்.

கந்தசாமி அவளைக் கண்டதும் துள்ளி எழுந்தான். ''வா, வா, சிங்காரி!'' என்று மிகுந்த உரிமையோடு அவன் அவளைக் கூப்பிட்ட தோரணையைக் கண்டதும் முருகேசன் அயர்ந்துபோனன். ''முனியம்மாளை நான் கட்டிக் கொள்



ளப் போவதில்லை!'' என்று கந்தசாமி அழுத்தம் திருத்தமாகக் கூறியதன் பொருள் அவனுக்கு விளங்கி விட்டது.

''நான் போய்வருகிறேன், கந்தசாமி!'' என்று கூறிப் புறப்பட்டான்.

* * *

ஆஸ்பத்திரியில் படுத்திருந்த கந்தசாமியை மீண்டும் வந்து பார்க்க வேண்டுமென்று சிங்காரிக்கு உள்ளூற ஆவல் துடித்துக் கொண்டுதான் இருந்தது. ஆனால் தந்தையின் உடல் நிலை காரணமாக அவளால் வீட்டை விட்டுச் சிறிது நேரம்கூட நகர முடியவில்லை.

அன்று நிலைதவறிக் கீழே விழுந்த தன் தந்தையை மெதுவாகத் தூக்கினாள் சிங்காரி. புலவரின் கண்கள் மூடியிருந்தன. மூச்சு மட்டும் மெதுவாக வந்து கொண்டிருந்தது. ஒருகால் இறந்து போய் விடுவாரோ என்று கண்ணம்மாளுக்குக் கூடப் பயம் பிடித்துக் கொண்டது. என்றாலும் தன் பிடிவாதத்தை விட்டுக் கொடுத்துப் பயத்தை வெளிக்காட்ட அவள் விரும்பவில்லை. சிங்காரிக்கு உதவி செய்யவும் அவள் முன்வரவில்லை. பேசாமல் எழுந்து தன் அறைக்குப் போனாள்.

மிகுந்த சிரமப்பட்டு அவரைத் தூக்கிக் கொண்டு போய் அறையில் படுக்க வைத்து, முகத்தில் தண்ணீர் தெளித்து, விசிறிக் கொண்டிருந்தாள் சிங்காரி. அவளது உள்ளம் கசிந்து கரைந்தது. கள்ளமறியாத தந்தையின் பரிதாப நிலையைக் கண்டு அவளது ஆத்மா கதறி அழுதது. அவள் பொருட்டு அவருக்கு எத்தனை கஷ்டம்! வாழ்க்கையில் அவர் என்ன சுகத்தைக் கண்டார்? விச்ராந்தியாகஓய்வு எடுத்துக்கொண்டு கவலையின்றிக் காலந்தள்ள வேண்டிய வயதில் ஒரு நிமிஷமாவது அவருக்கு நிம்மதி உண்டா? அவள் ஒருத்தி மட்டும் அவருக்குப் பாரமாக இல்லாமல் இருந்தால்!....



புலவர் மெதுவாகக் கண்களைத் திறந்தார். மிரள மிரள விழித்தார். வலது கையைத் தூக்கி மெதுவாக மகளின் முகத்தின் அருகே கொண்டு போனார். அதற்குள் மீண்டும் நினைவு இழந்தார். சிங்காரி பயந்து போனாள். ஒருகால் அவருக்கு ஏதாவது நேர்ந்து விட்டால்?....

நேர்ந்து விட்டால், பிறகு ஒருகண நேரங்கூட இந்தப் பைசாசத்துடன் இருந்து வாழ முடியாது!....வேறு எங்கே போவது? யார் இருக்கிறார்கள்? அன்போடு ஆதரிக்கக் கூடிய உற்றாரோ உறவினரோ கிடையாது. அநுதாபமுள்ள நண்பர்கள் என்று சொல்லிக் கொள்ளக் கூடியவர்கள் எவருமில்லை..!

''ஏன் இல்லை? அன்று வந்தாரே, அந்தப் போலீஸ் இளைஞர் கந்தசாமி!'' என்று நினைவுறுத்தியது நெஞ்சம்.

அவளது பஞ்சை உள்ளத்தில் ஒரு அவல நம்பிக்கை தோன்றியது. ஆனால் மறுகணமே அந்த நம்பிக்கை வலிவு இழந்தது. ஆஸ்பத்திரி வராந்தாவில் முதல் நாள் அவள் கண்ட காட்சி!....முனியம்மாளிடம் கந்தசாமியின் நண்பன் கேட்ட கேள்விகள்! ''அப்புறமாகச் சொல்லுகிறேன்!'' என்று நாணத்தோடு முனியம்மாள் கூறிய பதில்...

அவளது அந்தராத்மா சிரித்தது. ''பைத்தியக்காரப் பெண்ணே! அந்த அதிர்ஷ்டம் உனக்குக் கிடையாது. தந்தை போனாரென்றால் அதோடு உனது வாழ்க்கைக்கும் ஒரு முற்றுப் புள்ளிதான்!'' என்றது உள்ளுணர்வு.

மாலையிலே புலவருக்குக் கடுமையான காய்ச்சல் கண்டுவிட்டது.

''ஏண்டி அப்பனும், பொண்ணும் என் பிராணனை வாங்குகிறீங்க! எவனாவது ஒரு டாக்டரை அழைத்து வந்து மருந்து வாங்கிக் கொடுத்துத் தொலைக்கிறது தானே!'' என்றாள் கண்ணம்மாள். தன் ஏற்பாடுகளெல்லாம் குட்டிச்சுவராகப் போய் விட்டதைக் கண்டு அவளுக்கு அளவுகடந்த ஆத்திரம். புலவரின் உடல் இருந்த நிலையில் கல்யாண விஷயங்களைத் தற்போதைக்கு ஒத்திப்போட வேண்டியதாயிற்று.

டாக்டர் வந்து மருந்து எழுதிக் கொடுத்தார். ''கொஞ்சங்கூட அதிர்ச்சி





''எந்த சந்தோஷ சமாசாரம் சொன்னாலும் உங்கள் முகம் மாறப் போகிறது இல்லை. பதினாறு வயது வரை குழந்தைகளுக்கு இலவசக் கல்வி தரப் போகிறார்களாம். அதற்கேனும் கொஞ்சம் சந்தோஷப் படுங்களேன்!''

''எப்படி சந்தோஷப்படுகிறது? என்னுடைய பையனுக்கு இன்றோடு பதினாறு வயது முடிந்து போகிறதே ஐயா!''

ஏற்படாமல் பார்த்துக் கொள்ள வேண்டும்! இருதயம் மிகவும் பலவீனமாக இருக்கிறது!'' என்று சிங்காரியிடம் எச்சரித்து விட்டுப் போனார்.

இரவு பகல் தந்தையின் பக்கத்தை விட்டு அசையாமல் இருந்து கவனித்து வந்தாள் சிங்காரி. சுமார் மூன்றாவது நாளன்று சிறிது சிறிதாகக் குணம் தெரியலாயிற்று. அவர் ஏதோ பேச முயன்றார். ஆனால் சிங்காரி அவரைச் சாந்தப்படுத்தி விட்டாள். எனினும் ஏதோ பலமாக யோசனை செய்வதும் தமக்குத் தாமே பேசிக் கொள்வதுமாக இருந்தார் முத்துப் புலவர்.

மேலும் ஐந்தாறு தினங்களில் மெதுவாக எழுந்து நடமாடத் தொடங்கினார் அவர். சிங்காரியை அருகில் அழைத்துத் தணிவான குரலில் பேசினார்:

''குழந்தை! நல்ல காலமாக இந்தத் தடவை நான் பிழைத்தெழுந்து விட்டேன். இன்னொரு முறை ஏதாவதென்றால் பிறகு நம்புவதற்கில்லை. அதற்குள் ஏதாவது வழி செய்ய வேண்டும். கந்தசாமியைப் போய்ப் பார். அவன் ஆஸ்பத்திரியிலிருந்து என்றைக்கு வரப் போகிறான் என்று தெரிந்து கொண்டு வா. வெளியே வந்தவுடனேயே என்னை வந்து பார்க்கச் சொல் அம்மா. இல்லையென்றால் நாளைக்கு நானாவது போய் அவனைப் பார்த்து விட்டு வருகிறேன்'' என்றார் முத்துப் புலவர்.

''பிறகு பார்த்துக் கொள்ளலாம், அப்பா! இப்பொழுது உங்கள் உடம்பு இருக்கிற நிலையில்...''

''என் உடம்புக்கு இப்போது ஒன்றுமில்லை, அம்மா. மனம்தான் சரியாக இல்லை. ஆனால் என்ன செய்ய வேண்டுமென்று நான் தீர்மானித்து விட்டேன். இவ்வளவு தூரம் ஆன பிறகு இனி சும்மா இருக்கக் கூடாது.''

''நீங்கள் என்னதான் பண்ணப் போகிறீர்கள், அப்பா!''

''அதெல்லாம் இப்போது கேட்காதே, குழந்தை! நான் சொல்லுகிறபடி செய்!'' என்றார் புலவர்.

சிங்காரி, டாக்டர் வீட்டுக்குப்போவது போல் கையில் புட்டியுடன் கிளம்பி நேராக ஆஸ்பத்திரியை அடைந்தாள்.

தன்னைப் பார்ப்பதற்காகத் தனியாக வந்திருந்த சிங்காரியைப் பார்த்ததும் கந்தசாமிக்குக் கரைகாணாத ஆனந்தம் ஏற்பட்டது. இதைப் போன்ற ஒரு சந்தர்ப்பத்தை எண்ணி எண்ணி அவன் எத்தனையோ முறை பெருமூச்சு விட்டிருக்கிறான். ஆனால் அவனது உள்ளக் கிளர்ச்சிகளை அவளிடம் ஒப்படைக்க வியாதியஸ்தர்கள் நிறைந்த இந்த இடமா கிடைக்க வேண்டும்?

''அப்பா வரவில்லையா சிங்காரி?'' என்று கேட்டான் அவன்.

சிங்காரியின் முகத்தில் கவலை படர்ந்தது. ''அப்பாவுக்கு ஏழெட்டு நாட்களாகக் காய்ச்சல். இந்தத் தடவை ரொம்பக் கவலைக்கிடமாகப் போச்சு. என்ன ஆகுமோ என்று பயந்தே போய் விட்டேன். இப்போது இரண்டு நாட்களாகக் கொஞ்சம் குணம்தான். உங்களைப் போய்ப் பார்த்து வரும்படி அவர் தான் அனுப்பினார்.''

கந்தசாமிக்கு அவள் கடைசியாகக் கூறிய வார்த்தை சிறிது ஏமாற்றத்தை அளித்தது. புலவர் சொல்லாவிட்டால் அவள் வந்திருக்கமாட்டார் போலும்!

''அப்படியானால் அப்பா சொல்லித் தான் நீ வந்திருக்கிறாயா, சிங்காரி? உனக்கு என் மேலே இரக்கமில்லையாக்கும்...'' என்றான். சிங்காரியின் கண்கள் கலங்கின. அவள் கால் கட்டை விரலால் தரையைக் கீறிக்கொண்டு நின்றாள்.

கந்தசாமியின் உள்ளம் இந்தக் காட்சியைக் கண்டு பாகாய் உருகியது.

''சிங்காரி! என் மனசு உனக்குப் புரிய வில்லை. உங்க சின்னம்மா உன் கல்யாணத்துக்கு ஏதோ ஏற்பாடு

குழந்தைகளின் ஈரல், குலேக்கட்டி வியாதிகளுக்கு

# ஜம்மியின் "லிவர்க்யூர்"

## மாதாந்திர விஜயம்

எமது வாடிக்கையாளர்களின் நலனேயும், சௌகரியத்தையும் முன்னிட்டு எமது டாக்டர் மேற்கண்ட இடங்களில் ஒவ்வொரு மாதமும் குறிப்பிட்ட தேதிகளில் விஜயம் செய்கிருர். அப்பொழுது அவரை நேரில் கலந்து ஆலோசிக்கலாம்.

ஆலோசனை நேரம்: குறிப்பு:—காலே 9 முதல் 11 மணி வரை; மாலே 3 முதல் 5 மணி வரை

| இடம் | தேதி | இடம் | தேதி |
|---|---|---|---|
| கரூர் | 1 காலே | விருதுநகர் | 9 காலே 8 to 9 |
| சேலம் | 2 காலே & மாலே | கோயில்பட்டி | 9 10-30to12; முற்பகல் |
| ஈரோடு | 3 காலே | தூத்துக்குடி | 9 மாலே |
| திருப்பூர் | 3 மாலே | திருநெல்வேலி | 10 காலே & மாலே 11 காலே |
| கோயமுத்தூர் | 4 காலே & மாலே | ஸ்ரீவைகுண்டம் | 11 மாலே |
| பாலக்காடு | 5 காலே | அம்பாசமுத்திரம் | 12 காலே |
| பொள்ளாச்சி | 5 2-30 to 3-30 மாலே | தென்காசி | 12 மாலே |
| உடுமலேப்பேட்டை | 5 4-30 to 5-30 மாலே | திருவனந்தபுரம் | 13 காலே & மாலே |
| பழனி | 5 6-30 to 7-30 மாலே | ராஜபாளேயம் | 14 காலே |
| திண்டுக்கல் | 6 காலே | சிவகங்கை | 14 மாலே |
| பெரியகுளம் | 6 மாலே | காரைக்குடி | 15 காலே & மாலே |
| மதுரை | 7 & 8 காலே & மாலே | தேவகோட்டை | 16 காலே |
| | | புதுக்கோட்டை | 16 மாலே |

ஜம்மி வெங்கடரமணய்யா & சன்ஸ்

சென்னை — திருச்சிராப்பள்ளி — கும்பகோணம்

---

# உத்திரவாதத்தின் மதிப்பு என்ன?



நீங்கள் பிலிப்ஸ் ரேடியோ வாங்கின நிமிஷம் முதல், எல்லா விதமான சேவை, சலுகைகளேயும், பிலிப்ஸ் வியாபாரியின் மூலம் அடைய உங்களுக்கு உரிமை உண்டு. தேசத்தின் எந்தப் பாகத்திலிருந்தாலும் உங்கள் ரேடியோவுக்கு ஒரு வருஷத்திற்கு இலவச சேவை தரப்படும். நாடு முழுவதும் நிரம்பியிருக்கும் பிலிப்ஸ் வியாபாரிகள் ஒவ்வொருவரும் ரேடியோவில் திறமை பெற்றவர்கள். நீங்கள் ஒரு பிலிப்ஸ் ரேடியோ வாங்குவதினல், அவர்களின் நிரந்தர சிநேகிதம் உங்களுக்குக் கிடைக்கிறது. பிலிப்ஸில் விற்பனேயும், சேவையும் ஒருங்கே கைக்கோர்த்தாற் போல் இணைக்கப்பட்டுள்ளதால், உங்களுடைய ரேடியோ பிரச்னை எதுவானுலும.........

... அதை உங்கள் பிலிப்ஸ் வியாபாரியிடம் ஒப்படைத்துவிடுங்கள்




பிலிப்ஸ் இந்தியா லிமிடெட்




அம்மா: டேய் அம்பி! தாத்தாவுக்கு ஒரு பெரிய முத்தம் கொடு, பார்க்கலாம்!

செய்யருங்கன்னு உங்கப்பா சொன்னதிலிருந்து என் மனம் என்ன பாடுபடுகிறது தெரியுமா? அதுவும் இந்தப் பத்துப் பதினைந்து நாட்களாக உன்னைப் பார்க்காமல் போகவே நான் என்னென்னவோ நினைத்து விட்டேன்!...''

சிங்காரி கண்ணீருக்கிடையே வேதனை கலந்த ஒரு புன்னகையுடன் அவனை நிமிர்ந்து பார்த்தாள். அவளுக்கு ஏதோ கேட்க வேண்டும் போல் இருந்தது. ஆனால் துணிவு வரவில்லை. கந்தசாமி மேலும் கூறினன்:

''நீயும் வரவில்லையா? 'ஏதடா மனிதன் ஆஸ்பத்திரியில் படுத்திருக்கிறனே' என்றுகூடக் கவலையில்லாமல் எங்க அக்காளும் மாமனும் இங்கேயே வந்து கல்யாண விஷயத்தைப் பேசி என்னைத் தொளேச்சு எடுத்தாங்க!''

மேலே என்ன கூறப் போகிறனே என்று படபடக்கும் நெஞ்சுடன் அவனைக் கூர்ந்து நோக்கினள் அவள்.

''கடைசியிலே, இதோ நீ வருகிற போது இங்கே உட்கார்ந்திருந்தான் பார், முருகேசன், அவனுக்கு அவளை முடித்து விடலாமென்று ஏற்பாடு பண்ணி விட்டேன்.''

அவள் நிம்மதியாகப் பெருமூச்சு விட்டாள். அவளது உள்ளத்திலிருந்து ஒரு பெருத்த சுமையை இறக்கி வைத்தது போல் இருந்தது.

''உன் விஷயம் எப்படி இருக்கிறது, சிங்காரி? முதலில் அதைச் சொல்லு! அப்பா என்ன சொன்னர்?'' என்று ஆவலோடு கேட்டான் அவன்.

சிங்காரி அவனிடம் எவ்வளவோ விஷயங்கள் பேச வேண்டும் என்றுதான் நினைத்துக் கொண்டு வந்தாள். தந்தைக்கு அடுத்தபடியாகத் தன் மீது அனுதாபமும் அன்பும் காட்டக் கூடியவன் அவன் ஒருவன்தான் என்று அவளது உள்ளம் பரிபூரணமாக நம்பியது. ஆனல் அவனைக் கண்டதும் வெட்கம் அவளது நாவுக்குத் தடை போட்டது. முதன் முதலில் டைமண்ட் பூங்காவில் அவனைச் சந்தித்த போது எவ்வளவு தாராளமாகப் பேசினள்? அந்தத் தைரியம் இப்போது எங்கே ஓடி மறைந்து விட்டது? அவள் சுருக்கமாக நிறுத்தி நிறுத்திக் கூறினள்:

''மருதம்மாளின் அண்ணன் மகன் தங்கவேலுவுக்கு ஏற்பாடு செய்து கொண்டிருந்தாங்க...'' என்று அவள் ஆரம்பித்ததுமே கந்தசாமியின் கண்களில் தீப்பொறி பறந்தது.

''அந்த அயோக்கியப் பயலுக்கா? ஒரு நாளும் நடக்காது!'' என்று உறுமினன் அவன்.

அக்கம் பக்கத்துப் படுக்கைகளிலிருந்த நோயாளிகள் அவனது இரைச்சலைக் கேட்டுத் தலைதூக்கிப் பார்த்தனர். சிங்காரி தணிவாகப் பேசினள்:

''இரைஞ்சு பேசாதிங்க ... அப்புறம் அப்பாவுக்குக் காய்ச்சல் வந்து நிலைமை மோசமாகப் போய் விடவே ஏற்பாடுகளைக் கொஞ்சம் தாமதப்படுத்தியிருக்காங்க. இந்த விஷயத்திலே அப்பாவுக்குத் துளிக்கூட விருப்பமில்லை...''

''அப்போ உனக்கு?...''

சிங்காரி அவன் முகத்தைத் தீனமாக ஏறிட்டுப் பார்த்தாள்.

''உங்கமனசை நான் புரிந்துகொள்ளவில்லை என்று சொன்னீங்களே, என் மனசை மாத்திரம் நீங்க புரிஞ்சுக்கிட்டு இருக்கீங்களா?''

அவளது வார்த்தைகளில் சிறிது பதற்றம் தொனித்தது கண்ட கந்தசாமி அன்பு கனியப் பேசினன்:

''சிங்காரி! உன் மனம் எனக்குத் தெரியாமல் இல்லை. இருந்தாலும் உன் வாயாலே ஏதாவது சொல்லுகிறயா என்கிற நப்பாசை எனக்கு இருக்கிறது சகஜம்தானே...!''

அவளது முகம் குப்பென்று சிவந்தது. அவள் தலை கவிழ்ந்தாள்.

''இதோ பார், அப்பாவுக்கு வீட்டை விட்டு நடந்துவர முடியுமா?''

சிங்காரி 'முடியும்' என்பதற்கு அடையாளமாகத் தலையை அசைத்தாள்.

''அப்படியானல் ஒன்று செய். நாலு நாட்கள் பொறுத்துத்தான் டாக்டர் என்னை 'டிஸ்சார்ஜ்' பண்ணுவேன் என்று சொல்கிறர். ஆனல் எனக்கு லீவு இன்னும் இரண்டு நாளைக்குத்தான் இருக்குது. என் உடம்பும் இப்போ குண

மாகிப் போச்சு. பேசாமல் எப்படியாவது டாக்டர்கிட்டே சொல்லி நாளைக்குக் காலையிலே இங்கிருந்து கிளம்பி விடுகிறேன். அப்பாவை டைமண்ட் பூங்காவுக்கு வந்து காத்திருக்கச் சொல்லு. இரண்டு பேருமாகப் பேசி ஏதாவது ஒரு முடிவு கட்டி விடுகிறோம்!'' என்றான் கந்தசாமி.

சிங்காரி புறப்படுகையில் அவன் மீண்டும் உறுதி கூறினான். ''சிங்காரி! கிழக்கே உதிக்கிற சூரியன் மேற்கே உதிச்சாலும் சரி, உன்னை அந்த முரடன் கையிலே ஒப்படைக்கிறதைப் பார்த்துக்கொண்டு நான் சும்மா இருக்க மாட்டேன்!''

சிங்காரியின் உள்ளம், அவனுக்கு எந்த விதத்தில் நன்றி கூறுவது என்று தெரியாமல் தவித்தது.

நடுக்கடலில் திசை தெரியாது சிக்கித் தவிக்கும் மரக்கலத்தைப் போல் குழம்பிக் கொண்டிருந்த அவளுக்கு, கந்தசாமி கலங்கரை விளக்கத்தைப் போல் காட்சி யளித்தான்.

## பன்னிரண்டாம் அத்தியாயம்

# மந்திராலோசனை

கண்ணம்மாள் தமது முதல்தாரத்தின் நகைகளை விற்று விட்டாள் என்று அறிந்தபோதே புலவருக்குச் சொல்லொணாத ஆத்திரமும் துயரமும் ஏற்பட்டன. தமது அருமை மகளின் கதி என்னவாகும் என்பதை நினைக்க நினைக்க அவரது உள்ளம் வேதனையால் துடித்துக் கொண்டிருந்தது. போதாக் குறைக்கு மருதம்மாளிடம் அவள் கூடிக் கூடிப் பேசுவதையும் தம் சம்மதத்தையோ, சிங்காரியின் சம்மதத்தையோ கேளாமல் கல்யாணத்தை முடிவு செய்ததையும் கண்டு அவர் பதைத்துப் போனார். அவரது தேக நிலையில் அபிவிருத்தி ஏற்பட்டு விட்டது என்பதைக் கண்ட பிறகு அவள் சும்மா இருக்க மாட்டாள். தனது முயற்சிகளையும் ஏற்பாடுகளையும் தொடர்ந்து நடத்தத் தயங்க மாட்டாள். உடனடியாக ஏதாவது செய்யாவிடில் அனர்த்தம் நேர்ந்துவிடும் என்று தோன்றியது.

அவளது அட்டகாசங்களுக்கு எப்படியாவது ஒரு முடிவு காண வேண்டும் என்று படுக்கையில் படுத்த வண்ணம் ஐந்தாறு தினங்களாக மண்டையைக் குழப்பிக் கொண்டு சிந்தித்துக் கொண்டேயிருந்தார். அவரது விரக்தியடைந்த உள்ளத்தில் பல பயங்கரமான எண்ணங்கள் உருப் பெறலாயின. 'இந்தப் பணம்தானே அவளுக்கு இத்தனை ஆணவத்தைக் கொடுக்கிறது! அதை அப்புறப்படுத்தி விட்டால்?... அப்போது அவளுடைய டம்பமும் அதிகாரமும் அடங்கி விடுமல்லவா?' என்று கூட எண்ணினர்.

மறுதினம் காலை எட்டு மணி இருக்கும். சூரியன் கீழ்வானத்தில் வெகுதூரம் முன்னேறி விட்டான். டைமண்ட் பூங்காவின் நடுவேயிருந்த சாலையில் ஓரிரு வழிப்போக்கர்களைத் தவிர வேறு சந்தடியில்லை. கூவம் நதிக்கரையை ஒட்டியிருந்த பூங்காவிலிருந்த சிமெண்ட் பெஞ்சுகள் காலியாகக் கிடந்தன. முத்துப் புலவர் ஏகாந்தமான ஒரு இடத்தில் உட்கார்ந்து தீவிரமாக யோசித்துக் கொண்டிருந்தார்.

சுமார் பதினைந்து நிமிஷங்களுக்குப் பின்னர் கந்தசாமி வருவது தெரிந்தது.

''உங்களுக்குக் காய்ச்சலாக இருந்ததாமே?'' என்று கேட்டான் அவன்.

''காய்ச்சலா!....உயிர் போயிருந்தால் ஒன்பது நாளாகி யிருக்கும். பிழைத்தது புனர்ஜன்மம்தான்; உனக்கு முழு விவரமும் தெரியுமா?'' என்று கேட்டு விட்டு, கண்ணம்மாளுக்கும் தமக்கும் நேர்ந்த சச்சரவையும், தாம் தைரியமாகச் சண்டை பிடித்த விவரங்களையும் கூறினர் புலவர்.

''சிங்காரி இத்தனை விவரமாகச் சொல்லவில்லைங்க. பாவம், வெட்கமா இருக்குமல்ல. அந்த அயோக்கியப் பயல் தங்கவேலு முதல் நம்பர் ரவுடியாச்சே!'' என்றான் கந்தசாமி.

புலவர் ஏதோ ரகசியம்பேசப்போவது போல் தணிவான குரலில் பேசினர்.

''கண்ணம்மாளின் தீர்மானம் எனக்கோ சிங்காரிக்கோ துளிக்கூடப் பிடிக்கவில்லை. ஆனால் உனக்கு எனது நிலைமை நன்றாகத் தெரியும். எதிர்த்துப் பேசிச் சண்டை பிடித்துக் கொண்டேயிருந்தால் சாகிறவரைக்கும் ஓயாத ரகளையாகி விடும். இப்போது சொல்லு! உனக்கு ஏதாவது யோசனை தோன்று 'கிறதா?'' என்றார் புலவர்.

''பேசாமல் சிங்காரியும் நீங்களும் தனியாகப் பிரிந்து வந்து விடுங்களேன். ஏன் இத்தனை கஷ்டம்? தனியாக வந்து விட்டால் அப்புறம் அவளை நல்ல இடமாகப் பார்த்துக் கல்யாணம் பண்ணி வைக்கலாம். இல்லையா?''

புலவர் தலையை அசைத்தார்.

''அது, நடக்காது! கந்தசாமி. எத்தனையோ தடவை நான் இதைப் பற்றி

யோசித்துப் பார்த்து விட்டேன். எங்கே போவது? எப்படிப் பிழைப்பது? என் பொருள் முழுதும் அவள் கையில் இருக்கிறது! வீட்டை அவள் பெயரில் வாங்கினேன். மூத்த தாரத்தின் நகைகளை எனக்குத் தெரியாமல் விற்றுப் பணமாக்கி வைத்துக் கொண்டிருக்கிறாள் அவள். 'நாங்கள் பிரிந்து போகிறோம், பணத்தைக் கொடு' என்றால் ஒரு பைசாகூடத் தரமாட்டாள். அவளையும் போகச் சொல்ல முடியாது. வழக்கு தொடர்ந்து ரசாபாசமாக்கவும்கூடாது. அப்படிச் செய்வது சாத்தியமுமல்ல...''

''இதோ பாருங்க. நான் சொல்கிறேன்னு வித்தியாசமாக நினைக்காதிங்க. உங்களுக்கு ஆட்சேபணை இல்லையானால், நீங்கள் பேசாமல் நம்ம வீட்டுக்கே வந்து இருக்கலாமுங்க!''

''இல்லை, கந்தசாமி! உன்னுடைய அன்பான உள்ளம் உன்னை இப்படிப் பேசச் சொல்லுகிறது. என்றாலும், பிறருக்குப் பாரமாக இருக்க என்னுடைய மனம் இசையாது.''

கந்தசாமிக்கு ஒன்றும் புரியவில்லை.

''அப்போ என்னதான் வழி?''

''கொஞ்சம் பொறு. நான் எல்லாவற்றையும் நாள் கணக்கில் யோசித்து ஒரு முடிவுக்கு வந்திருக்கிறேன். தெய்வந்தான் உன்னை எனக்கு நண்பனாக்கியது. உன்னைச் சந்தித்த அன்றே உனது தங்கமான குணம் எனக்குப் புரிந்து விட்டது. சிங்காரி தாயில்லாப் பெண். உன்னைப்போன்ற உத்தமனுக்கு அவளைக் கட்டிக் கொடுத்து விட்டால் அவளது எதிர்காலம் க்ஷேமமாக இருக்கும் என்று நான் நிர்ணயித்து விட்டேன், அப்பா. அவளுக்கும் உன்மீது வாஞ்சை!...''

கந்தசாமிக்குத் தன் காதுகளையே நம்ப முடியவில்லை. புலவர் மேலே கூறினார்:

''இதிலே விஷயம் என்னவென்றால் கண்ணம்மாள் பணப் பிசாசு. பெண்ணுக்குப் பரிசமாக யாராவது கணிசமான தொகை தருவதாக இருந்தால் உடனே அவள் சிங்காரியைத் தங்கவேலுவுக்குக் கொடுக்க வேண்டும் என்ற ஏற்பாட்டை மாற்றி விடுவாள்!''

''எவ்வளவு வேண்டியிருக்கும்?''

''ஆயிரம் இரண்டாயிரம்....''

கந்தசாமியின் உள்ளம் படுத்து விட்டது. ''அப்பாடி''.. என்று நீண்ட பெருமூச்சு விட்டான் அவன்.

''கவலைப்படாதே, தம்பி! அதற்கும் வழி கண்டு பிடித்திருக்கிறேன். நீ மட்டும் கொஞ்சம் உஷாராக இருந்து எனக்கு உதவி செய்தால்..''

''என்ன உதவி சொல்லுங்க! உங்களுக்காகவும், சிங்காரிக்காகவும் நான் என்ன வேண்டுமானாலும் செய்யத் தயாராக இருக்கிறேன்!''

''ஒன்றுமில்லை. கண்ணம்மாள் பணத்தில் கொஞ்சம் எடுத்து..''

''ஐயையோ! திருட்டா..?''

''யோசித்துப் பார்! கந்தசாமி, நகைகள் என்னுடைய முதல் தாரத்தினுடையவை. அதை விற்ற பணம் என்னுடையதா? கண்ணம்மாளுடையதா? நீ ஒன்றும் செய்ய வேண்டாம். எனக்குச் சொந்தமான அந்தப்பணத்தில் ஒரு பகுதியை நான் எடுத்தால் அது எப்படித் திருட்டாகும்? என் பணத்தைஉன்னிடம் எடுத்துக் கொடுக்க எனக்கு உரிமை இல்லையா? மேலும் அந்தப் பணத்தை நீயோ நானோ வைத்துக் கொள்ளப் போவதில்லை. சிங்காரிக்குப் பரிசப் பணமாக நீயே அதைக் கண்ணம்மாளிடம் சேர்ப்பித்து விடலாம்!''

கந்தசாமியின் மூளை குழம்பியது. ஒரு சமயம் பார்த்தால் புலவர் கூறுவது நியாயமாகத்தான் பட்டது. புலவர் அவனைத் திருடச் சொல்லவில்லை. அவர் ரகசியமாகக் கொடுக்கும் பணத்தை வேறு உருவத்தில் அவர்களிடமே திருப்பிக் கொடுக்கத்தான் சொல்லுகிறார். அப்போது இதில் தவறு என்ன? சிங்காரிக்காக இதைக்கூடச் செய்யக் கூடாதா என்று தோன்றியது. மறுகணம் 'இதனால் ஏதாவது எக்கச்சக்கமான நிலைமை ஏற்பட்டு விட்டால்...?' என்று நினைக்கையில் அவனுக்கு வயிற்றைக் கலக்கியது.

''கண்ணம்மாவுக்குத் தெரிந்தால்?''

''தெரிய வழி இல்லை, கந்தசாமி! ஐந்து ரூபாயும் பத்து ரூபாயும் கட்டுக் கட்டாக நிறைய வைத்திருக்கிறாள். தினம் தினம் அதை எண்ணியா பார்க்கிறாள்? அதில் ஒரு கட்டு இரண்டு கட்டு எடுத்தால் சந்தேகமே ஏற்படாது! நானும் எவ்வளவோ யோசித்துப் பார்த்தேன், அப்பா! என்னைப் பற்றிக் கவலை கிடையாது. சிங்காரியை அந்த மிருகத்திடமிருந்து காப்பாற்ற வேண்டுமானால் வேறு வழியே இல்லை!''

''எனக்கு இருபத்திநாலு மணி நேரம் 'டைம்' குடுங்க! கொஞ்சம் நிம்மதியா யோசிக்கணும்!'' என்றான் கந்தசாமி.

''நன்றாக யோசித்துப் பார், அப்பா; நாளை மாலை ஐந்து மணிக்கு இதே இடத்துக்கு வந்து உனது முடிவைச் சொன்னால் போதும்'' என்றார் முத்துப் பிள்ளை.

''இப்போ நீங்க சொன்னதெல்லாம் சிங்காரிக்குத் தெரியுமா?'' என்று கேட்டான் கந்தசாமி.

''சேச்சே! தெரியவே தெரியாது! இதையெல்லாமா அதனிடம் சொல்லுவாங்க!'' என்றார் புலவர். (தொடரும்)

Printed and Published by T. Sadasivam at the Kalki Press, Kilpauk, Madras-10
for the Proprietors Messrs Bharathan Publications Private Limited
Managing Editor: T. Sadasivam

பதின்மூன்றாம் அத்தியாயம்

## அடையாறு பங்களா

தம்பி பெரிய கண்டத்துக்குத் தப்பிப் பிழைத்து உயிரோடு ஆஸ்பத்திரியிலிருந்து வந்ததும் முத்தம்மாளுக்கு அவன் மீது அன்பும் அக்கறையும் அதிகமாகி விட்டன.

''முனியம்மா! அத்தானுக்குப் பல் துலக்கத் தண்ணி எடுத்து வை. 'நாஸ்தா'வும் காப்பியும் கொண்டு போய்க் கொடு! போ! நிற்காதே!'' என்று அவளை விரட்டி விரட்டி வேலை வாங்கினாள்.

''அதுதான் வெட்கப்படுதே அக்கா! நீதான் கொண்டு வந்து கொடுத்துடேன்!'' என்றான் கந்தசாமி.

''என்ன வெட்கமாம்! நாளைக்கு இந்த வீட்டிலே குடித்தனம் பண்ணப் போகிறவள்



# கான்ஸ்டபிள் கந்தசாமி




தானே!'' என்று அவன் எரிச்சலைக் கிளப்பினாள் முத்தம்மாள்! அவன் பல்லைக் கடித்துக் கொண்டு பொறுமையாக இருந்தான்.

முனியம்மாள் கிணற்றடிக்குத் தண்ணீர் இழுக்கப் போன சமயம் கந்தசாமி தன் அக்காளைக் கூப்பிட்டான்.

''அக்கா, இங்கே வா!''

தம்பி அதி அன்பாகத் தன்னைக் கூப்பிட்டதைக் கண்டு அகமகிழ்ந்து அவன் அருகில் சென்றாள் அவள்.

''இதோ பாரு! மாமாவும் முனியம்மாவும் வந்த அன்றைக்கே ஒரு ஜோஸ்யக்காரனைப் பார்த்தேன். எங்க மாமன் பெண்ணைக் கட்டிக்கப் போகிறேன், பேர் ராசி பார்த்துச் சொல்லுங்கன்னு கேட்டேன் அக்கா....''

''உம்..உம்..என்ன சொன்னாரு?'' என்று ஆவலோடு கேட்டாள் அக்காள்.

'' உனக்கும் அவளுக்கும் கொஞ்சம் கூடப் பொருந்தாது. கிரகம் சரியாக இல்லே. அவள் உன் வீட்டுக்குள்ளே காலே எடுத்து வைச்சால்கூட உன் உயிருக்கே ஆபத்து வரும்னு சொன்னாரு, அக்கா! இதை உங்கிட்ட சொல்லப் பயந்துக்கிட்டுச் சும்மா இருந்து விட்டேன்!'' என்று ஒரு பெரிய கல்லாகத் தூக்கிப் போட்டான்.

முத்தம்மாள் பிரமித்துப் போனாள். அவன் சொல்லுவதை நம்புவதா வேண்டாமா என்று திகைத்தாள். ஒருகால் உண்மையாகவே கிரகம் சரியில்லேயோ? முனியம்மா வந்த உடனேயே அவனுக்கு ஆபத்து வந்து விட்டதே! என்னென்னவோ கோட்டை கட்டிக் கொண்டிருந்த அவளுக்கு இது பிரச்னையாகப் போய் விட்டது.

'' சரிதான். யோசிக்கலாம், தம்பி!'' என்று பெருமூச்சுடன் கூறினாள் அவள்.

அன்றிரவு சாப்பாட்டுக்குப் பிறகு, கந்தசாமி தனது பழைய நண்பர்களைச் சந்திக்க நாயரின் டீக்கடைக்குச் சென்றான். சில காலமாகச் சந்திக்காத அவர்களிடம் தன் பெருமைகளைக் கூற வேண்டும் போலிருந்தது அவனுக்கு. மேலும் முத்துப்பிள்ளை கூறிய விஷயங்களையும் வீட்டில் உட்கார்ந்தபடி தீவிரமாகச் சிந்திக்க முடியவில்லை.

கடையில் அவனது சகாக்கள் உட்கார்ந்து அரட்டை யடித்துக் கொண்டிருந்தனர்.

'' என்ன சமராபுரி அண்ணே! சௌக்கியமா?'' என்றான் கந்தசாமி.

''அடேடே கந்தசாமியா? நான் பார்க்கவே இல்லேயப்பா! நீ போலீசிலே சேர்ந்த பிறகு நம்மையெல்லாம் எங்கே கவனிக்கறே!''

'' வாப்பா! கந்தசாமி! வா! வா!'' என்று ஏகமனதாக வரவேற்றனர் மற்ற மூன்று நண்பர்களும்.

'' என்ன அப்படிச் சலிச்சுக்கிறீங்க...! இதோ பார் நாயர்! அஞ்சு சிங்கிள் டீ போடு! 'கரம்'மா இருக்கணும்!... ஆமாம். இப்ப நீங்க என்ன பண்ணறீங்க!'' என்றான்.

மற்றமூவரையும்விடச் சமராபுரியிடத்தில் கந்தசாமிக்கு மிகுந்த மரியாதை இருந்தது. சமராபுரி ராணுவத்தில் உத்தியோகம் பார்த்து 'பென்ஷன் பெற்றவன். வயதில் முதிர்ந்தவன். தைரியசாலி. தான் ராணுவத்தில் செய்த அசகாய சூரச் செயல்களைப்பற்றியெல்லாம் கதை கதையாகச்





சொல்லுவான். சமராபுரி வந்துவிட்டானென்றால் கூடவே கதை மூட்டையும் வந்துவிட்டது என்று எதிர்பார்க்கலாம்.

சமராபுரி கூறினான்:

''இத்தனை நாளா 'அடையாத்'துலே ஒரு பங்களாவிலே உத்தியோகம் பார்த்துக் கொண்டிருந்தேன். போன வாரம் தான் அதை விட்டு விட்டேன்.''



இதற்குள் நாயர் ஐந்து கண்ணுடி டம்ளரில் தேநீரைக் கொண்டு வந்து வைத்தான். சமராபுரி டீயை ஆவலோடு உறிஞ்சிக் கொண்டே ஆரம்பித்தான்;

''நான் அந்தப் பங்களாவிலே இரவுக் காவல் காரன்! பங்களா சொந்தக்காரர் குடும்பத்தோடு பம்பாய்க்குப் போய் மூன்று மாதம் ஆகுது. நான் ராத்திரிவேளையிலே மாத்திரம் காவல் காத்தால் போதும். பகல் நேரத்துக்கு வேறே ஆள் இருக்குது. வேலை ஒண்ணும் கஷ்டமில்லை. மிலிட்டரியிலே பயப்படாமே 'ஸெண்டிரி' பார்த்தவனுக்கு இது ஒரு பிரமாதமில்லே. பாரு, அந்தப் பங்களாவுக்கு அடுத்த பங்களா ரொம்ப வருஷமா பூட்டிக்கிடக்கு!''

''ஏன் விட்டுட்டீங்க?''

''அது பெரிய கதை சுந்தசாமி.''

கந்தசாமி நாக்கைச் சப்புக் கொட்டிக் கொண்டான். ''உங்க வாயாலே கதை கேட்டு ரொம்ப நாளாச்சுங்க, சொல்லுங்க'' என்றுன்.

கந்தசாமிக்கு விஷயத்தில் சுவாரஸ்யம் தட்டத் தொடங்கியது. மற்றவர்களும் அதை ஆவலோடு கேட்டனர்.

''வருஷக் கணக்கா பூட்டிக் கிடந்தா பூதம் காத்துப் போகாதா?'' என்றான் மற்ற மூவரில் ஒருவனான முத்துசாமி.

''அதைத்தானே சொல்ல வந்தேன். ராத்திரி பன்னிரண்டு மணி ஆயிடுச்சுன்னா, அங்கே உலாத்துகிற பேய்க்கும் பிசாசுக்கும், கணக்கு வழக்கே இல்லே.''

கந்தசாமி சிரித்தான். மற்றவர்கள் அவனை ஆச்சரியத்தோடு நோக்கினர்.

''என்ன அண்ணே! மிலிட்டரியிலே இருந்துட்டு நீயா இப்படிப் பேய் பிசாசுன்னு பேசறே! சும்மா கம்பைச் சுழற்றி மண்டை மேலே ஒண்ணு வச்சா பிச்சுக்கிட்டு ஓடாதா! இதற்குப் பயந்து கொண்டா..!'' என்று கூறியபடியே கையிலிருந்த தடியைச் சுழற்றிக் காண்பித்தான் கந்தசாமி.

''நான்கூட அப்படித்தான் நினைச்சிருந்தேன் கந்தசாமி! உன்னைப் போல் பேய் பிசாசிலே நம்பிக்கை இல்லாமல் தான் இருந்தேன்! நேரே பார்த்த பிறகுதானே தெரியுது....''

கந்தசாமி மீண்டும் நகைத்தான்.

''இதோ பாருங்க, எங்கிட்ட அந்தப் பங்களாவைக் காட்டுங்க. இன்றைக்கு ராத்திரி முழுதும் அங்கேயே படுத்து நல்லாத் தூங்கி விட்டு வருகிறேன். என்ன பந்தயம் கட்டுகிறீங்க?'' என்று சவால் விட்டான் அவன்.

''கந்தசாமி! நீ அறியாதபிள்ளை! இன்னும் கல்யாணங்கூட ஆகல்லே! ஏன் வீணுக?....''

''சும்மாப் பேசாதீங்க! எனக்கு நீங்க அந்த வீட்டைக் காண்பித்துத்தான் ஆகணும்!'' என்று பிடிவாதம் பிடித்தான் கந்தசாமி.

**வா**ன வீதியில் சிதறிக் கிடந்த கருமேகக் குவியல்கள் குளிர்ந்த காற்றின் வேகத்தில் ஒன்று சேரத் தொடங்கின. கந்தசாமி தான் கொண்டு வந்திருந்த மேல் துண்டால் உடம்பைப் போர்த்திக் கொண்டு சமராபுரியைப் பின் தொடர்ந்தான். மற்ற நண்பர்களும் கூடவே வந்தனர். இரவு பதினொரு மணிக்கு அவர்கள் அந்தப் பங்களா வாசலையடைந்து விட்டனர்.

சமராபுரி தூரத்திலிருந்தபடியே, ''இதோ பார், இதுதான் அந்தப் பங்களா! இடிந்த சுவரும், செடியும், கொடியும், இருட்டும் பார்க்கிற போதே எப்படியிருக்குது பார். வீணுக அசட்டுக் காரியம் பண்ணாதே, பயந்து விடுவாய்'' என்று எச்சரித்தான்.

விசாலமான தோட்டத்தின் நடுவேயிருந்த அந்தப் பங்களாவின் துருப் பிடித்த இரும்புக் கதவும், இடிந்து போயிருந்த மதில்சுவர்களும், அது வெகு நாட்களாகவே மனித சஞ்சாரம் இல்லாதிருக்க வேண்டும் என்பதை உணர்த்தின. பங்களாவின் கட்டடம் கண்ணுக்குத் தெரியாதபடி அதைச் சுற்றிலும் அடர்ந்து வளர்ந்திருந்த உயரமான விருக்ஷங்கள், நாற்புறமும் சூழ்ந்திருந்த இருளை அதிகரித்துக் காட்டின.

மரங்களுக்கிடையே சுட்டிக் காட்டி, ''அதோ பார்!....அங்கே!..'' என்றான் முத்துசாமி, மெதுவான குரலில்.

''ஏதோ நடமாடுகிறது மாதிரி இல்லே!'' என்றான் மற்றொருவன்.

கந்தசாமிக்கும் உள்ளூறச் சிறிது சலனம் ஏற்பட்டதென்றாலும், அவன் வெளிக்குக் காண்பித்துக் கொள்ளாமல் அலட்சியமாகவே பேசினான்.

மற்றவர்கள் விடைபெற்றுக் கொண்டனர். சுமார் பத்து நிமிட நேரம், கந்தசாமி தனியே நின்றுகொண்டிருந்தான். நிலவு அடியோடு மூடப்பட்டு விட்டது. பளிச்சிட்ட கண்ணைப் பறிக்கும் அந்த மின்னலும், இடியின் உறுமலும் கனத்த மழைக்குக் கட்டியம் கூறின. ஒருபுறம் பயமாக இருந்த போதிலும், அந்தப் பங்களாவின் அமானுஷ்யமான தோற்றம், அவனது தீரச் செயல் புரியும் உணர்ச்சியைத் தூண்டிவிடத்தான் செய்தது.

**அ**வன், மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு கேட்டைத் திறவாமல் மதில் சுவரில் இடிந்திருந்த பாகத்தைச் சந்தடியின்றித் தாண்டிக் கொண்டு உள்ளே நுழைந்தான். எங்கே பார்த்தாலும் புதர்களும் செடி கொடிகளும் மண்டிக் கிடந்தன. தப்பித் தவறி ஏதாவது பாம்புப் புற்றில் காலை வைத்துவிடப் போகிறோமோ என்று பயந்தான் அவன். சுவர்க் கோழியின் ரீங்காரத்தையும் இடி முழக்கத்தையும் தவிர அந்த இடம் நிசப்தமாகவே இருந்தது.

அது இரண்டடுக்கு மாடிகளையுடைய கம்பீரமான கட்டடம். பங்களாவுக்குப் பின்னால் சிறிது தூரத்தில் இரண்டு சிறிய விடுதிகள் காணப்பட்டன. மோட்டார் ஷெட்டும் 'அவுட் ஹௌஸும்' போலும். கந்தசாமி அந்த விடுதியை நோக்கி நடந்தான்.

இந்தச் சமயத்தில் திடீரென்று பெரு மழை பிடித்துக் கொண்டது. அவன் அந்தப் பின்புற விடுதியின் வராந்தாவில் ஓரமாக ஒதுங்கி நின்றான். வராந்தா வெங்கும் ஒரே புழுதி மயமாக இருந்தது. கூரையிலிருந்து கொடிக் கயிறுகள்

அறுந்து பாம்புகள் போல் தொங்கிக் கொண்டிருந்தன. மழை நின்றதும் பங்களாவுக்குள் நுழைந்து பார்க்க வேண்டும்; ஏதாவது திறந்த ஜன்னல்கள் இருக்குமாவென்று யோசித்த வண்ணம் நின்று கொண்டிருந்தான்.

சுமார் பதினைந்து நிமிடங்கள் வரையில் மழை ஓயவில்லை. அசைவற்று ஆழ்ந்த யோசனையில் ஈடுபட்டிருந்த கண்களுக்குத் திடீரென்று தோட்டத்தின் வடக்கு மூலையில் ஏதோ வெளிச்சம் தோன்றி மறைந்தது போலிருந்தது. ஒருகால் மின்னலாயிருக்குமோ என்று எண்ணிக் கொண்டிருக்கையிலேயே அந்த வெளிச்சம் மீண்டும் தோன்றிக் கண நேரத்தில் மறைந்தது.

கந்தசாமி உற்றுக் கவனித்தான். திரும்பவும் அதே வெளிச்சம்! ஒவ்வொரு முறையும் அது ஒரு விநாடிக்கு மேல் நிலைக்கவில்லை. ஆனால் முதன் முறை வெகு தொலைவிலிருந்து காணப்பட்ட வெளிச்சம், மூன்றாவது முறை பங்களாவுக்குச் சமீபத்திலேயே தோன்றியது.

கந்தசாமியின் நெஞ்சு 'படக் படக்' என்று அடித்துக் கொண்டது. கடைசியில் சமராபுரி சொன்னதில் ஏதோ உண்மை இருக்கத்தான் செய்கிறது! இந்தப் பங்களாவில் ஏதோ பயங்கர மர்மம் அடங்கித்தான் இருக்கிறது. ஆனால் பேய்களாக இருக்க முடியுமா?

பளீரென்று வெட்டிய மின்னல் வெளிச்சத்தில் பங்களாவின் பின்புறத்தில் ஒரு கறுத்த உருவம் நிற்பதைக் கண்டான். ஒரு விநாடி நேரம் தாமதித்து விட்டு அவ் வுருவம் அவன் இருந்த தனி விடுதியை நோக்கி நகர்ந்து வரத் தொடங்கியது.

அவனது தைரியம் தளர்ந்தது. மார்பில் கையை வைத்து அழுத்திக்கொண்டான். மெதுவாக நகர்ந்து வராந்தாவின் மூலையில் போய்ச் சுவரோடு சுவராக நின்றவண்ணம் கவனித்தான்.

அந்த உருவம் இன்னும் அருகே நெருங்கி வந்து கொண்டிருந்தது. சிறிது நேரம் அவ் வராந்தாவின் எதிரே வந்து நின்றது. கந்தசாமி மூச்சைப் பிடித்துக் கொண்டு அசைவற்று நின்றான். கைகால்கள் ஒன்றுமே காணப்படாமல் ஒரே பூதாகாரமாக இருந்த அவ்வுருவம் மெதுவாக வராந்தாவுக்குள் நுழைந்து விட்டது. அவனது சப்த நாடியும் வெலவெலத்து விட்டது. கால்கள் உதறத் தொடங்கின. என்ன செய்வதென்று யோசிக்க நேரமில்லை. அடுத்த விநாடி மின்னல் வேகத்தில் அவன் தன் கைத் தடியைப் பலங்கொண்டமட்டும் சுழற்றி அந்த உருவத்தைத் தாக்கினான். ஒரு சிறிய முனகலுடன் அது தொப்பென்று தரையில் சாய்ந்தது!

கூரையிலிருந்து தொங்கிக் கொண்டிருந்த நீளமான கயிற்றை அறுத்து அவ்வுருவத்தைக் குண்டுக் கட்டாகக் கட்டி உருட்டினான். அதைக் கட்டும்போதே அவனுக்கு நிச்சயமாகி விட்டது; பேயுமில்லை பூதமுமில்லை — எவனோ ஒரு மனிதன்தான் என்று! தடவிப் பார்த்தான். உடம்பின் மீது மழைக் கோட்டு போன்ற எதையோ போர்த்தி யிருந்தான் அம்மனிதன்.

இப்போது அவனுக்கு வேறொரு கிலி பிடித்துக் கொண்டது. இவன் யார்? இந்த வேளையில் இவனுக்கு இந்த நிர்மானுஷ்யமான இடத்தில் என்ன வேலை? ஒருகால் யாராவது கொள்ளைக்காரனா? கொள்ளைக்காரனென்றால் இங்கு எதைக் கொள்ளையடிக்க வந்தான்? இவன் ஒருவன்தானா? அல்லது இவனுக்கு வேறு சகாக்களும் உண்டா? உண்டானால் அவர்கள் எங்கே? இவனைத் தேடிக் கொண்டு வரமாட்டார்களா? அப்போது அவனது கதி என்ன?

அவனது மூளை தீவிரமாக வேலை செய்தது. பக்கத்திலிருந்த மோட்டார் ஷெட்டின் கதவு திறந்து கிடந்ததைக் கவனித்தான். அவனுக்கு ஒரு யோசனை தோன்றியது. அந்த ஆசாமியின் காலைப் பிடித்துத் தரதரவென்று இழுத்துக் கொண்டு போய் அவனை ஷெட்டில் தள்ளி, கதவை இறுக மூடி விட்டான்..

## பதினொன்காம் அத்தியாயம்

# எதிர்பாராத சம்பவம்

'திக்திக்' கென்று அடித்துக் கொண்டிருந்த கந்தசாமியின் மனத்தில் ஒரு புறம் சந்தோஷமும் உண்டாயிற்று. அவன் முழுசாக ஒரு திருடனைப் பிடித்து விட்டான். ஹூம்! சாமானியத் திருடனா இவன்? பெரிய கொள்ளைக் காரனாகத்தானிருக்க வேண்டும்! இல்லாவிட்டால் இத்தனை பெரிய பங்களாவில் அவனுக்கு என்ன வேலை? உம், அடுத்தபடி அவன் செய்ய வேண்டிய வேலை என்ன? பங்களாவுக்குள் நுழைந்து பார்ப்பதா, வேண்டாமா? நுழைய வேண்டுமானால் எந்த வழியாக? சுமார் இரண்டு நிமிட நேரம் ஒன்றும்

தோன்றாமல் நின்றபின் மெதுவாகக் கட்டடத்தருகே சென்றான். கட்டடத்தின் பின்புறக் கதவு பூட்டப்பட்டிருந்தது. அருகிலிருந்த சன்னல்களும் தாளிடப்பட்டிருந்தன. சமீபத்தில் இருந்த விசாலமான ஆல விருட்சத்தின் கிளைகளிலொன்று கட்டடத்தின்மேன்மாடிப் பக்கமாக நீண்டு வளர்ந்திருந்தது.

அவனது மனத்தில் பளிச்சென்று ஒரு அற்புதமான யோசனை தோன்றியது. இந்தக் கட்டடத்தில் என்ன மர்மம் அடங்கியிருக்கிறது? எதற்காகக் கொள்ளைக்காரர்கள் இதைச் சுற்றி வட்டமிட வேண்டும் என்ற விவரங்களைக் கண்டு பிடித்து மறுநாளே இன்ஸ்பெக்டருக்குத் தகவல் கொடுத்து விடலாம். பிறகு அளகிரிசாமி நாயுடுவுக்கு அவன் எப்பேர்ப்பட்டவன் என்பது தெரியும்.

எவ்வளவு பெரிய கேஸ்! இத்தனை அபாயகரமான கேஸைத் தன்னந் தனியாகச் சமாளிக்கிறோம் என்பதை நினைக்க நினைக்க அவனது மனத்தில் உற்சாகம் ஏற்பட்டு உடல் பூரித்தது. மளமள வென்று ஆலமரத்தின் மீது ஏறி மாடிப் பக்கம் வளர்ந்திருந்த கிளையை அடைந்தான். அந்தக் கிளை, மொட்டை மாடிக்கு மேல் சுமார் பதினைந்து அடி உயரத்தில் இருந்தது. ஆனால் கிளையிலிருந்து குதிக்க வேண்டிய அவசியமேற்படவில்லை. கிளையிலிருந்து தொங்கிக் கொண்டிருந்த நீளமான விழுதைப் பற்றிக் கொண்டு இறங்கிச் சுலபமாக மாடியை அடைந்தான். ஒரு விநாடி சுற்று முற்றும் பார்த்த பிறகு சந்தடியின்றிப் படிகள் வழியாகக் கீழ்த்தளத்துக்கு இறங்கினான்.

முதல் மாடியில் ஒரு பெரிய ஹாலும் இரண்டு மூன்று அறைகளுமேயிருந்தன. எங்கே பார்த்தாலும் ஒரே புழுதியும் நாற்றமும் நிரம்பியிருந்தன. தலைக்கு மேல் துரிஞ்சில்கள் பறந்தன. வழி கூடத் தெரியாமல் கும்மிருட்டாக இருந்தது. மெதுவாகத் தடவிக் கொண்டே ஆராய்ந்து பார்த்தான். உதவிக்காக அவ்வப்போது தீக்குச்சிகளைக் கிழித்துக்கொண்டான். அறைகள் திறந்தே கிடந்தன. அவற்றில் ஒன்றிரண்டு அறைகளில் ஒடிந்தநாற்காலிகள், ஆணிகள், மரச் சட்டங்கள் இவற்றைத் தவிர வேறு பொருளொன்றுமில்லை.

அடுத்தபடியாக அதற்குக் கீழிருந்த தளத்துக்கு இறங்கி வந்தான். அதன் அமைப்பும் மேல்மாடியைப் போலவே இருந்தது. ஆனால் மற்ற அறைகளெல்லாம் திறந்து கிடக்க, வடபாகத்திலிருந்த அறை மாத்திரம் மூடப்பட்டிருந்தது. அந்த அறைக் கதவில் தொங்கிக் கொண்டிருந்த பூட்டைத் தொட்

டுப் பார்த்தான். பூட்டு ஒப்புக்காக மாட்டப்பட்டிருந்ததே ஒழிய, பூட்டப் படவில்லை. கந்தசாமி ஓசைப்படாமல் கதவைத் திறந்து கொண்டு உள்ளே சென்றான். காலில் ஏதோ தட்டுப்பட்டது. தீக்குச்சியின் வெளிச்சத்தில் அவ் வறையில் ஏழெட்டு பெரிய பெட்டிகள் வைக்கப்பட்டிருப்பதைக் கண்டான். பெட்டிகள் யாவும் பூட்டப்பட்டிருந்தன. ஒரு பெட்டியின் மேல் சுமார் ஆறங்குல நீளமுள்ள ஒரு பளபளப்பான குழாய் காணப்பட்டது. அதை மட்டும் கையில் எடுத்துக் கொண்டான்.

ஒரு பெட்டியைத் தூக்கிப் பார்த்தான். மிகுந்த பளுவாக இருந்தது. அவனுக்கு விஷயம் விளங்கி விட்டது. நிச்சயமாக அவற்றில் விலையுயர்ந்த பொருள்கள் இருக்க வேண்டும். இவற்றைக் கொள்ளையடிக்கவே திருடர்கள் வட்ட மிடுகிறார்கள். முட்டாள்கள்! இவ்வளவு சாமான்களை வைத்து விட்டு, அறையைப் பூட்டாமல் விட்டு விட்டுப் போனால் கொள்ளை போகாமல் இருக்குமா? ஹூம்! இந்தப் போலீஸ்தான் என்ன செய்கிறது!

போதுமான காற்றில்லாமல் அவனுக்கு வியர்த்துப் போய் மூச்சுத் திணறுவது போல் இருந்தது. மெதுவாகச் சுவரோரம் சென்று ஜன்னலைத் திறந்தான். குளிர்ந்த காற்று அவன் முகத்தில் வீசியது. மழை ஓய்ந்து விட்டது. ஆகாயத்தில் மேகங்கள் கலைந்து நிலா வெளிச்சம் தோன்றத் தொடங்கியிருந்தது. பங்களாவின் தென் பாகத்தில் தான் சமராபுரி வேலை பார்த்து வந்த பங்களா இருந்தது. வடபாகத்தில் விசாலமான மைதானம். அந்தப் பாகத்தில் பங்களாத் தோட்டத்துக்கு எல்லையாக இருந்த அடர்த்தியான புதர் மூடிய வேலி தென்பட்டது.

திடீரென்று எங்கிருந்தோ பேச்சுக் குரல் கேட்டது. கீழ்த்தளத்திலிருந்தா, எங்கிருந்து என்று நிச்சயிக்க முடியவில்லை. கந்தசாமி துணுக்குற்றான். வடபாகத்து வேலிப் பக்கத்திலிருந்து முதலில் கண்டது போன்ற வெளிச்சம் தோன்றி மறைந்தது. அது டார்ச் விளக்கின் வெளிச்சமாகத்தான் இருக்க வேண்டும் என்று அவன் இப்போது ஊகித்துக் கொண்டான். முதலில் வந்த ஆசாமியின் சகாவாகத்தான் இருக்க வேண்டும்! யோசிக்க நேரமில்லை. மட மடவென்று வந்த வழியே திரும்பித் தோட்டத்தில் இறங்கினான்.

மரத்தடியில் ஒதுங்கி நின்று உற்றுக் கவனித்தான். சுமார் ஏழெட்டு ஆசாமிகள் வேலியின் ஓரமாக மோட்டார் ஷெட் இருந்த திக்கை நோக்கி



வந்தவர் :—ஐயா என்ன பண்ணுரு?

வேலைக்காரன் :—ஐயா தமிழ் காத்து வாங்கின்டு இருக்காரு; அம்மா இங்கிலீஷ் காத்து வாங்கின்டு இருக்காங்க.

❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖

நகர்ந்து கொண்டிருந்தனர். அவர்களது கைகளில் ஏதோ நீண்ட ஆயுதங்கள் இருந்தன. தடிகளா, கத்திகளா என்று தெளிவாகத் தெரியவில்லை. அத்தனை பேரையும் அவனுல் எப்படித் தனியாகச் சமாளிக்க முடியும்? இல்லாவிடில் அவர்களைக் கொள்ளை யடிக்க விட்டு விட்டு அவன் ஓடி விடுவதா? அது முடியாத காரியம். எப்படியாவது சமாளித்துவிட வேண்டும் என்ற ஒரு அசட்டுத் தீர்மானம் அவனது மனத்தில் உருவாகி உறுதிப்பட்டது.

இதற்குள் அந்த ஆசாமிகள் மோட்டார் ஷெட்டை நெருங்கி விட்டனர். அவன் ஒளிந்திருந்த இடத்துக்கும் ஷெட்டுக்கும் சுமார் இருபது கஜதூரம்தான் இருக்கும். அவர்கள் ஏதோ ரகசியம் பேசிக் கொண்டனர். இடையிடையே ஷெட்டிலிருந்து முனகல் சத்தம் கேட்டுக் கொண்டிருந்தது. அவன் அடித்துப் போட்ட ஆசாமிதான் முனகுகிருன் என்று புரிந்து கொண்டான்.

வந்திருந்த ஆட்களில் ஒருவன் ஷெட்டின் கதவைக் கொஞ்சமாகத் திறந்து கொண்டு எட்டிப் பார்த்தான். பிறகு ஏதோ பேசிக்கொண்டு இருவர் உள்ளே நுழைந்தனர். சுமார் ஒரு நிமிட நேரத்துக்குப் பின் ஒருவன் மட்டும் வெளியே வந்து மற்றவர்களிடம் பேசினுன்.

உடனே மற்றவர்களும் தடதடவென ஷெட்டுக்குள் நுழைந்தனர். அவ்வளவுதான்! கந்தசாமி ஷெட்டை நோக்கி 'விர்'ரென்று பாய்ந்து சென்று அதன் கதவை இழுத்து மூடி வெளிப்புறம் தாளிட்டு விட்டான்.

சிறைப்பட்ட கொள்ளைக்காரர்கள் உள்ளே கதவைத் தடதட வென்று தட்டி ஆர்ப்பாட்டம் செய்தனர்.

''ஹூம்! ஒன்னும் நடக்காது. எங்கிட்டவா பலிக்கும்!'' என்று கர்ஜித்துக் கொண்டே கந்தசாமி பையில் கையை வைத்தான். மாடியில் கிடைத்த குழாய் அவன் கைக்கு வந்தது. அந்த விசித்திரமான பொருளை உற்று நோக்கினுன். ''என்னுது இது? பீகில் மாதிரியல்ல இருக்குது!'' என்று கூறிக் கொண்டே வாயில் வைத்து ஊதினுன். ஒரு அபூர்வத் தொனி கிளம்பியது. இன்னெரு முறை! சபாஷ்! பாண்டு வாத்தியம் கணக்கால்ல இருக்குது!''

கட்டடத்துக்குள் தடதட வென்று ஓடும் சத்தம் கேட்டது. கந்தசாமி ஆச்சரியம் அடைந்தான். அவனுக்குப் பயமாகப் போய் விட்டது! இது என்ன அவதி? அங்கே வேறு ஆசாமிகளா? ஒன்று போனுல் ஒன்ரு?

அவனது இருதயம் அதற்கு மேல் ஆபத்துக்களைச் சமாளிக்கும் சக்தியை இழந்தது. அப்போதுதான் அவனுக்கு எத்தகைய பயங்கரமான இடத்தில் சிக்கிக் கொண்டிருக்கிறேம் என்ற உண்மையான கிலி உதயமாகியது. ஆல மரத்தின் அருகில் போய் ஒடுங்கிக் கொண்டான்!

வாசற் பக்கத்திலிருந்து ஒரு கூக்குரல் கேட்டது. ஒருவன், ''ஐயையோ! செத்தேன்! செத்தேன்!'' என்று அலறினுன். பலரது காலடிச் சத்தம். அதைத் தொடர்ந்து ஒரு மோட்டார் கார் புறப்படும் ஓசை. கந்தசாமி அசையாமல் நின்றிருந்தான். அவனுக்கு எல்லாம் ஒரே புதிராக இருந்தது.

சுமார் பதினைந்து நிமிடங்கள் கழிந்தன. பங்களாவுக்கு முன்புறம் சந்தடி அடங்கி விட்டது. ஷெட்டுக்குள்ளிருந்தவர்கள் மாத்திரம் சற்றைக்கொரு தரம் கதவை இடித்துக் கொண்டிருந்தனர். தூரத்திலிருந்த மாதா கோயில் கடிகாரம் மூன்று முறை ஒலித்தது. கந்தசாமி சரசரவென்று வேலிப் பக்கம் நடந்து அதைத் தாண்டிக் கொண்டு குறுக்கு வழியாகச் சாலையை அடைந்தான். அதன் பின்னர் மூச்சு சரியாக வரத் தொடங்கியது.

அவன் வீட்டை யடைந்தபோது கிழக்கு வெளுக்கும் சமயமாகி விட்டது. அவன் கதவைத் தட்டுவதற்கும், முத்தம்மாள் வாசலைப் பெருக்க, துடைப்பத்தை எடுத்துக் கொண்டு வருவதற்கும் சரியாக இருந்தது. (தொடரும்)

# கான்ஸ்டபிள் கந்தசாமி

—கே. பட்டுசா

பதினைந்தாம் அத்தியாயம்

## அதிர்ச்சிக்குமேல் அதிர்ச்சி

அதிக நேரம் படுக்கையில் படுத்துத் தூங்கிக் கொண்டிருக்கக் கந்தசாமிக்கு நேரமில்லை. ஏழரை மணிக்கே எழுந்து அவசரம் அவசரமாகப் போலீஸ் உடைகளை உடுத்துக் கொண்டு போலீஸ் ஸ்டேஷனை நோக்கி விரைந்தான். அவனது மனத்தில் விதம் விதமான கனவுக் கோட்டைகள் உருவாகிக் கொண்டிருந்தன. இரவு நடந்த மாபெரும் சம்பவத்தைக் கூறி அடையாறு பங்களா ஷெட்டில் அவன் அடைத்து வைத்திருக்கும் கொள்ளைக்காரர்களையும் பிடித்துக் கொடுத்து விட்டால் அளகிரிசாமி நாயுடு அப்படியே அசந்து போய் விடுவார்! ஒருகால் ''உடனே ஏன் வந்து சொல்லவில்லை?'' என்று கேட்பாரோ? . . . கேட்டால், ''இப்போதுதான் நேராக வீட்டுக்கு வந்து உடுப்பை மாட்டிக் கொண்டு வருகிறேன்'' என்று சொல்லி வைத்தால் போயிற்று! இரவெல்லாம் இத்தனை கஷ்டப் பட்ட மனிதனுக்கு ஒரு அரை மணி நேரமாவது ஓய்வு வேண்டாமா என்ன?... இது என்ன வீண் கவலை!... இன்ஸ்

பெக்டர் இதையெல்லாம் கேட்டுக் கொண்டிருக்க மாட்டார்! அவரு டைய ஆயுளில் அவரே இவ்வளவு பெரிய கேஸைப் பிடித்திருக்கமாட்டார் என்பது நிச்சயம்! போலீஸ் ஸ்டேஷனில் இன்றைக்குச் சரியான பரபரப்பு ஏற் படப் போகிறது! கொள்ளைக் கூட்டம் பிடிபட்ட செய்தி, மாலைப் பத்திரிகை களில் வெளிவந்துவிடும்! அவனது பெயர் - ஏன் புகைப் படம் கூட - வெளியாகலாம்! கமிஷ னரிடமிருந்து பாராட்டு! அவனது தீரத்துக்கு ''ரிவார்டு'' நிச்சயம் கிடைத்து விடும்!

இவ்வாறு எண்ணிய போது அவனது மனத் திரையில் கமிஷனரிடம்



கைகுலுக்குவது போலும், இன்ஸ் பெக்டர் அளகிரி சாமி நாயுடுவும் ஏட்டு கோவிந்தப் பிள்ளையும் பொறு மையோடு அவனது முகத்தைப் பார்ப் பதுபோலவும் காட் சிகள் தோன்றின.

**அ**வன் ஸ்டே ஷனை அடைந்த சம யத்தில் அங்கு உண் மையிலேயே பர பரப்பாகத் தான் இருந்தது. கான்ஸ் டபிள்கள் கூடிக் கூடிரகசியம் பேசிக் கொண்டிருந்தனர்.

இந்தக கான்ஸ்டபிள்களே இப்படித் தான்! குடித்து விட்டுத் தெருவில் 'கலாட்டா' செய்கிற எவனையாவது பிடித்து வந்துவிட்டால் கூட, ஏதோ பெரிய மலையைப் புரட்டி விட்டது போல் நினைத்துப் பிரமாதமாக வீண் பெருமை யடித்துக்கொண்டு கூடிக் கூடிப் பேசுவார்கள்! அவன் செய்த மகத்தானகாரியத்தை அவர் களிடம் சொன்னால்?... சேச்சே!போயும்போயும்இத் தனை பெரிய விஷயத்தை இவர்களிடமா சொல்வது!

நேராக உள்ளே நுழைந் தான். ஆனால் இன்ஸ்பெக் டரின் ஆசனம் காலியாக இருந்தது. கோவிந்தப் பிள்ளையையும் காணவில்லை. அங்கிருந்தவர்களில் யாருமே அவனது வரவை லட்சியம் செய்ததாகத் தெரிய வில்லை! அற்பப் பயல்கள்! அவனது அசல் மதிப்பு அவர்களுக்கு எப்படிப் புரியப் போகிறது!

ஒரு பக்கத்தில் கான்ஸ்டபிள் முரு கேசன், உஸ்மான், பார்த்தசாரதி, வேலப்பன் ஆகியோர் கூட்டமாக நின் றிருந்தனர். முருகேசனைக் கண்டதும் அவனது குதூகலம் அதிகரித்தது. அவ

னைத் தனியாகக் கூப்பிட்டான். விஷயத்தை அவனிடம் கூறலாமா, அல்லது இன்ஸ்பெக்டரிடம் கூறிய பிறகு தானுகத் தெரியட்டும் என்றுவிட்டுவிடலாமா என்று யோசித்துக் கொண்டே, ''என்ன முருகேசா, எங்கே நம்ப இன்ஸ்பெக்டரை இன்னும் காணோம்?'' என்று கேட்டான்.



முருகேசன் ரகசியமாகக் கூறினன்:

''உனக்கு விஷயம் தெரியாதா? இன்ஸ்பெக்டரும் ஏட்டுப் பிள்ளையும் ஆஸ்பத்திரியிலே இருக்காங்க!''

''ஆஸ்பத்திரியிலா?...ஏன்?''

''ராத்திரி ஒரு கொள்ளைக் கூட்டத்தைப் பிடிக்கிறதற்காகப் போன இடத்திலே திருடர்கள் இன்ஸ்பெக்டரை அடிச்சு மூட்டையாகக் கட்டிப் போட்டுட்டாங்களாம். கோவிந்தப் பிள்ளைக்கும் சரி 'உடம்பு பிடித்து'விட்டாங்க!''

கந்தசாமிக்குத் தூக்கி வாரிப் போட்டது! மெதுவாக ''எந்த இடத்திலே?...'' என்று கேட்டான்.

''அடையாற்றிலே!'' என்றுன் முருகேசன்.

கந்தசாமியின் மூளை கிர்ரென்று சுழல ஆரம்பித்தது. மனத்தில் பயம் பிடித்தது; உடல் ஒரேயடியாக வியர்த்துக் கொட்டியது.

''ஆமாம்...அடிச்சவங்க கொள்ளைக்காரங்கதானு, வேறே யாராவதா?...''

''அட, கொள்ளைக்காரங்கதானப்பா! வேறே யார்!'' கந்தசாமி சற்று நிம்மதி அடைந்தான். ஆனல் பின்னர் முருகேசன் கூறியது அவன் திகிலைக் கிளறியது.

அடையாறு பங்களாவில் கொள்ளைக் கூட்டம் தங்கியிருப்பதாகத் தகவல் கிடைத்ததன் பேரில் இன்ஸ்பெக்டர் அளகிரிசாமி நாயுடு தம்முடன் ஒரு பத்துப் பேர்களை அழைத்துக் கொண்டு 'ரெய்ட்' பண்ணுவதற்காகப் போனர். கான்ஸ்டபிள்களை வேலி யோரமாக நிறுத்திவிட்டு, முதலில் அவர் மாத்திரம் பங்களா எல்லைக்குள் நுழைந்திருக்கிறர். இருளில் பதுங்கியிருந்த கொள்ளைக்காரன் ஒருவன் எதிர்பாராதவிதமாக அவரை மண்டைமேல் தாக்கியதும் அவர் மூர்ச்சித்து விழுந்து விட்டார். அவன் அவரைக் கட்டிப் போட்டு, ஷெட்டில் தள்ளி விட்டான். சிறிது நேரத்துக்குப் பிறகு அவரைத் தேடிக் கொண்டு போன மற்றக் கான்ஸ்டபிள்களையும் கொள்ளைக்காரர்கள் ஷெட்டில் அடைத்துப் பூட்டி விட்டனர்.

திருடர்கள் தப்பியோடுகையில் பங்களாவின் முன் புறத்

தில் காவலிருந்த ஏட்டுப் பிள்ளையை நையப் புடைத்து விட்டுப் போய் விட்டனர். அடிபட்ட கோவிந்தப் பிள்ளை எப்படியோ வந்து தகவல் கொடுத்த தன் பேரில் ஷெட்டில் சிறை வைக்கப் பட்டிருந்த இன்ஸ்பெக்டரும் போலீஸ் காரர்களும் மீட்கப்பட்டனர். கமிஷனர் இதைப் பற்றித் தீவிரமாக நடவடிக்கை எடுத்துக் கொண்டிருக்கிறார்.

கந்தசாமியின் பாடு வெலவெலத்து விட்டது. அவனது அடிவயிற்றில் நெருப்பை வாரிக் கொட்டியது போல் இருந்தது. கமிஷனரிடம் வெகுமதி கிடைக்கப் போகிறது என்று நினைத்த அவனுக்கு இப்போது, 'வெகுமதி வேண்டவே வேண்டாம், வீண் வம்பு வராமல் இருந்தால் போதும்' என்று தோன்றத் தொடங்கியது. பேச நா எழவில்லை. வார்த்தைகள் தொண்டையிலேயே சிக்கிக் கொண்டன. மிகுந்த பிரயாசையுடன், ''ஆமாம், திருடன்களைப் பற்றி அங்கே வேறு துப்பு கிடைச்சிருக்குதா?'' என்று கேட்டான்.

''ஒரு துப்பும் கிடைக்கவில்லை. தோட்டத்திலே ஒரே ஒரு ஊதுகுழல் மாத்திரம் கிடந்ததாம். அதை ஊதிக் காண்பித்துத்தான் கொள்ளைக்காரரில் ஒருவன், போலீஸ் வந்திருந்த விஷயத்தை மற்றவர்களுக்கு எச்சரிக்கை செய்தானும்!...''

அவன் மேலும் கூறினன்:

''பட்டணத்திலே பல இடங்களில் கொள்ளையடித்து லட்சக்கணக்கில் பெறுமானமுள்ள சொத்தை அங்கே பதுக்கி வைத்திருந்தார்களாம். ஆனல் திருடங்க போகிறபோது ஒரு துரும்புகூட விடாமல் எல்லாவற்றையும் லாரியிலே கொண்டு போயிட்டாங்களாம்!''

கந்தசாமியின் மனம் பீதியும், ஏமாற்றமும் விரக்தியும் ஒன்றுசேர்ந்த ஒருவித வேதனை உணர்ச்சியினல் துன்புறுத்தப் பட்டது. அவன் நினைத்தது என்ன? நடந்தது என்ன? அவன் பட்ட அத்தனை கஷ்டங்களும் காட்டில் காய்ந்த நிலவாக அல்லவா போய்விட்டன!....ராத்திரி யாராவது அவனுடைய முகத்தைப் பார்த்து விட்டிருந்தால் அவன் கதி! இது என்ன போதாத காலம்? போதாத காலமல்ல, நல்ல காலம்தான்! முதலிலேயே விஷயத்தை யாரிடமும் தம்பட்டம் அடித்து உளறி விடாமல் இருந்தோமே என்று எண்ணிப் பெருமூச்சுடன் திரும்பினன் அவன்.

* * *

**க**ந்தசாமிக்கு இருந்த குழப்பத்தில் மாலையில் முத்துப் பிள்ளையைச் சந்திக்க வருவதாகக் கூறியிருந்ததையே மறந்து விட்டான். ஸ்டேஷனிலும் புதிதாக வந்து உட்கார்ந்திருந்த இன்ஸ்பெக்டர் பூவராகம் எடுத்ததற்கெல்லாம் சிடுசிடு வென்று விழுந்து கொண்டிருந்தார். மணி ஐந்தடித்தபோதுதான் கந்தசாமிக்குச் சட்டென்று ஞாபகம் வந்தது.

உடனே ஏதோ சாக்குப் போக்குச் சொல்லிவிட்டு அவசரம் அவசரமாக டைமண்ட் பூங்காவை நோக்கி விரைவாக நடந்து சென்றன்.

ஆனல் புலவர் கூறிய விஷயங்களைப் பற்றி அதுவரையில் சிந்தித்துப் பார்க்கவே அவனுக்கு அவகாசம் கிடைக்கவில்லை. முதல்நாள் இரவு நடந்த அனர்த்தங்களை எண்ணிய போது புலவருடைய பேச்சைக் கேட்டால் புதுத் தொல்லை ஏதாவது முளைக்குமோ என்று அச்சமாக இருந்தது. ஆனலும் சிங்காரியை நினைத்தபோது, அதுவும் அவன் தக்க சமயத்தில் முயற்சி செய்யாவிடில் அவள் அந்த முரடன் தங்கவேலுவுக்குச் சொந்தமாகி விடுவாள் என்பதை எண்ணியதும் அவன் மனம் எந்த ஆபத்தையும் வரவேற்கத் தயாராகியது.

முத்துப் புலவர் நாலரை மணி முதலே பூங்காவில் காத்திருந்தார். கந்தசாமியைக் கண்டதும், ''என்ன யோசனை பண்ணினயா?'' என்றர்.

''வரவர என் உத்தியோக விஷயமாகப் பெரிய பெரிய தொல்லைகளெல்லாம் ஏற்படுதுங்க. இதனலே வேறே ஏதாச்சும் கஷ்டம் ஏற்படுமோ என்றுதான் அஞ்சுகிறேன்'' என்றன் கந்தசாமி.

''இது என்னப்பா, என்னைப்போல வயதானவர்கள் பயப்பட்டால் உன்னைப் போன்றவர்கள் தைரியம் சொல்ல வேண்டியதிருக்க நான உனக்குச் சொல்லுவது! எதற்கும் மனம் சலித்துப் போகக் கூடாது. அவனவன் கடவுள் விட்ட வழியாகட்டும் என்று தன் கடமையை முறைப்படி செய்து கொண்டே போக வேண்டும். முடிவைப் பற்றியோ பலனைப் பற்றியோ சிந்திக்கவே கூடாது என்று கீதையில் கூடச் சொல்லியிருக்கிறது'' என்று கீதோபதேசம் செய்தார் கிழவர்.

வெகுவாகச் சமாதானப் படுத்தியதன் பேரில் கந்தசாமி கிழவரின் ஏற்பாட்டுக்கு இசைந்தான்.

''சரியாக ராத்திரி ஒரு மணிக்கு நீ தோட்டத்தில் என் அறைப் பக்கமாக வா. ஜன்னல் வழியாக அதைக் கொடுத்து விடுகிறேன். பிறகு காலையில் எட்டு மணிக்கெல்லாம் இதே இடத்தில் நாம் சந்தித்து மேற்கொண்டு நடக்க வேண்டியவற்றைப் பற்றி ஆலோசிக்கலாம்'' என்றர் கிழவர்.

கந்தசாமி ஆகட்டும் என்று தலையை ஆட்டினான். ''மறக்காதே! ஒருமணி!'' என்று கூறி அவனிடம் விடைபெற்றுக் கொண்டார் முத்துப் புலவர்.

* * *

முத்துப் புலவர் தமது வீட்டை நெருங்கிய சமயத்தில் இருட்டத் தொடங்கி விட்டது. தோட்டத்துக் கதவைத் திறந்து கொண்டு நுழைந்த போது வீட்டின் இடது புறத்து மதில் சுவரின் இடது மூலையிலிருந்த அவரைப் பந்தலருகில் யாரோ நிற்பது போலிருந்தது. அவர் கண்களை இடுக்கிக் கொண்டு கவனித்தார். நிச்சயமாகக் கண்ணம்மாவோ சிங்காரியோ இல்லை. யாராக இருக்கலாம் என்று பார்ப்பதற்காக மெதுவாக அவ்விடத்தை நோக்கி அடி வைத்தார். அருகே சென்று பார்த்த போது எவரையும் காணவில்லை. வயதாகி விட்டதால் பார்வைக் கோளாறுதான் இருக்குமென்று எண்ணிக் கொண்டே புலவர் சந்தடியின்றித் தமது அறைக்குள் நுழைந்தார்.

## பதினாறும் அத்தியாயம்

# கொள்ளை போயிற்று

தன் மகளின் எதிர்காலத்தை உத்தேசித்துப் புலவர் சிறுபிள்ளைத்தனமான காரியத்தில் திடச் சித்தத்தோடு இறங்கியிருந்தார். ஆனால் சிங்காரியிடம் தமது ஏற்பாடுகளைப் பற்றி மூச்சுக்கூட விடவில்லை. கண்ணம்மாள் வீட்டிலில்லாத சமயம் பார்த்துச் சிங்காரியையும் ஏதோ வேலையாக வெளியில் அனுப்பி விட்டு, இருவரும் இல்லாத சமயத்தில் பூட்டுகளுக்கு மறு சாவி தயாரித்துத் தயாராக வைத்துக் கொண்டார்.

இரவு சுமார் ஒரு மணிக்கு இன்னும் பதினைந்து நிமிடங்கள் தானிருக்கும். கந்தசாமி மனத்தில் திகிலுடன் புலவரின் வீட்டை நோக்கி வந்து கொண்டிருந்தான். அதே நேரத்தில் புலவர் மெதுவாக எழுந்து தம் அறையை விட்டு வெளியே வந்தார்.

அவரது அறைக்கு எதிர்ப்புறத்து அறையில் சிங்காரி உறங்கிக்கொண்டிருந்தாள். கண்ணம்மாள் கூடத்தில் போட்டிருந்த கட்டிலில் படுத்துக் குறட்டை விட்டுத் தூங்கிக் கொண்டிருந்தாள். கிழவர் சந்தடியின்றி இருட்டில் தடவிக் கொண்டே கூடத்தைத் தாண்டினார். கண்ணம்மாள் விழித்துக் கொண்டு விடுவாளோ என்ற பயத்தில் அவரது மனம் 'திக் திக்' என்று அடித்துக் கொண்டது.

தைரியத்தை விடக் கூடாது என்று எவ்வளவுதான் முயன்றபோதிலும் கால்கள் வெடவெடவென்று நடுங்கத்தான் செய்தன. கூடத்தைத் தாண்டிப் பின்கட்டு இடைவழியில் நுழைந்தால் வலது பக்கத்திலிருந்த சிறிய அறையில் தான் பீரோ இருந்தது. கண்ணம்மாள் படுத்திருந்த இடத்தைத் தாண்டி நாலடி வைத்திருப்பார். திடீரென்று வழியில் போட்டிருந்த முக்காலிச் சனியன் புலவரின் காலில் இடறித் தடபுடவென்று உருண்டு விழுந்தது.

அவருக்கு உயிரே போய் விட்டது போலிருந்தது. 'சரிதான் போட்ட 'திட்டம்' பூராவும் தொலைந்தது! கண்ணம்மாளிடம் கையும் பிடியுமாக மாட்டிக் கொள்ளப் போகிறோம்' என்று நினைத்து மூச்சைப் பிடித்துக் கொண்டு சுவரோரமாகப் போடப்பட்டிருந்த பாத்திரச் சாமான் பெட்டிக்குப் பின்னால் ஒண்டிக் கொண்டு உட்கார்ந்தார்.

ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு என்று விநாடிகள் பறந்தன. ஆனால் கண்ணம்மாள் விழித்துக் கொள்ளாதது புலவருக்கு ஆச்சரியமாக இருந்தது. அவளது குறட்டை இன்னும் தெளிவாகக் கேட்டுக் கொண்டிருந்தது.

ஓரிரண்டு நிமிடங்களுக்குப் பின் மீண்டும் எழுந்தார். குறி வைத்த இடத்தை அடைந்ததும் அறைக் கதவின் பூட்டைத் திறப்பதற்காகத் தொட்டுப் பார்த்தார். ஆனால் கதவு பூட்டப்படாமல் இருந்தது அவருக்கே வியப்பாக இருந்தது. பிறகு நடந்தவை வெகு எளிதாக முடிந்து விட்டன. சந்தடியின்றித் தம்மிடமிருந்த சாவியால் பீரோவைத் திறந்து இரண்டே இரண்டு கட்டுகளை மட்டும் எடுத்துக் கொண்டு அடி மேல் அடி வைத்துத் தமது அறைக்கு வந்து சேர்ந்தபிறகு தான் அவருக்குச் சரியாக மூச்சு வந்தது.

கார்ப்பொரேஷன் கடிகாரத்தில் மணி 'டங்' என்று ஒன்று அடித்தது. கந்தசாமி காளிங்கராயன் தெருவை அடைந்து விட்டான். வீதியில் ஜன நடமாட்டமே இல்லை. வானத்துச் சந்திரன் மேகக் குவியல்களில் ஒளிந்து கொள்ளுவதும் வெளியே வருவதுமாகக் கண்ணு மூச்சி விளையாடிக் கொண்டிருந்தது.

புலவரின் வீட்டை நெருங்கியதும் அவனது வேகம் குறைந்தது. அதிஜாக்கிரதையாக நாற்புறமும் பார்த்துவிட்

டுத் தோட்டத்துக் கதவை மெதுவாகத் திறக்கப் போகும் சமயத்தில் வலப் பக்கத்துக் காம்பவுண்டு சுவர் அருகில் ஒரு மனித உருவம் பதுங்குவதைக் கண்டான் கந்தசாமி.

உள்ளத்தில் வியப்பும் பீதியும் ஒருங்கே எழுந்தன. 'ஒருகால் முத்துப் பிள்ளையாக இருக்குமோ? அவன் வரத் தாமதமாகிவிட்டதென்று தேடிப் பார்ப்பதற்காக வெளியே வந்தாரோ? . . . .' என்று நினைத்தான். ஆனால் அந்த உருவம் அவரைப் போல் குட்டையாக இல்லை.

அவன் யோசித்துக் கொண்டிருக்கையில் அம்மனிதன் 'சடக்' என்று சுவரை ஒரே தாண்டாகத் தாண்டிப் பக்கத்துச் சந்தில் குதித்தான்.

அவ்வளவுதான்; கந்தசாமிக்குச் சந்தேகம் தட்டி விட்டது. அதற்குமேல் அவனால் யோசித்துக் கொண்டு நிற்க இயலவில்லை. 'திபு திபு' வென்று காம்பவுண்டைச் சுற்றிக் கொண்டு ஓடிப் பக்கத்துச் சந்துக்குள் நுழைந்தான். ஆனால் அவன் எண்ணியபடி அங்கே யாரையும் காணவில்லை. அந்தச் சந்து நேராக ஒரு பர்லாங் தூரம் சென்ற பின் ஐயாப்பிள்ளை வீதியில் கலக்கிறது. இடையில் திருப்பங்கள் ஏதுமில்லை என்பதை அவன் அறிவான். ஆகையால் இதற்குள் ஆசாமி ஓடி மறைந்திருக்க முடியாது. இங்கேதான் எங்கேயாவது இருட்டில் பதுங்கிக் கொண்டிருப்பான் என்ற அநுமானத்துடன் வலப் பக்கத்திலுள்ள ஒரு பெரிய குப்பைத் தொட்டியின் அருகில் வந்தான். அதே கணம் அவனது இடது கண்ணின்மீது "திம்" என்று ஒரு பலமான குத்து விழுந்தது.

எதிரே மின்மினிப் பூச்சிகள் பறந்தன. விழியே போய் விட்டதோ என்று எண்ணும்படி கண்ணில் அசாத்தியமான வலி ஏற்பட்டது. கையினால் கண்ணைப் பொத்திய வண்ணம் அப்படியே தரையில் உட்கார்ந்து விட்டான்.

முத்துப் புலவர் அறைக் கதவை உட்புறம் தாளிட்டுக் கொண்டு ஜன்னல் அருகில் பதைபதைப்போடு இருட்டில் உட்கார்ந்திருந்தார். மணி ஒன்றடித்து விட்டது. கந்தசாமியைக் காணவில்லை. சிறுசிறு சத்தங்கள் கேட்கும்போதெல்லாம் அவன்தான் வந்து விட்டான் என்று எழுந்து எழுந்து உட்கார்ந்தார். நேரம் போய்க் கொண்டிருந்தது. முனிசிபல் கடிகாரம் ஒன்றரை, இரண்டு, மூன்று என்று ஒலித்துக் கொண்டே போயிற்று. அவன் வரவேயில்லை. புலவர் நம்பிக்கையை இழந்தார்.

கையில் வைத்திருந்த நோட்டுக் கட்டுகளை என்ன செய்வது என்று தெரியவில்லை. திருப்பிக் கொண்டு போய் வைக்க முயலுவது ஆபத்து. அறையினுள் வைத்திருப்பதற்கும் பந்தோபஸ்தான இடம் இல்லை.

கடைசியில் பளிச்சென்று ஒரு யோசனை தோன்றியது. எதற்கும் காலை எட்டு மணிக்குக் கந்தசாமி பூங்காவுக்கு வருவான், அப்போது கொண்டுபோய் அவனிடம் கொடுத்துவிட வேண்டியது என்ற தீர்மானத்துடன், கட்டுகள் இரண்டையும் தமது புஸ்தகக் குவியலுக்கு அடியில் சொருகி வைத்து விட்டுப் படுத்துக் கொண்டார்.

விடியற்காலையில் அவருக்கு ஆழ்ந்த உறக்கம் வந்தது. தூக்கத்தில் போலீஸ்காரர்கள் வருவது போலவும் அவருக்கு விலங்குகள் மாட்டி இழுத்துச் செல்வது போலவும் சிங்காரி "அப்பா! அப்பா!" என்று கதறுவது போலவும் என்னென்னவோ கனவுகள் தோன்றின.

தாளிடப்பட்டிருந்த கதவு 'தட தட' வென்று தட்டப்பட்டது. சிங்காரி வாஸ்தவமாகவே 'அப்பா, அப்பா' என்று கூப்பிட்டாள். புலவர் அலறிப் புடைத்துக் கொண்டு எழுந்து கதவைக் கொஞ்சமாகத் திறந்து இடுக்கு வழியாக, கனவில் கண்டபடி யாராவது போலீஸ்காரர்கள் வந்திருக்கிறார்களா என்று எட்டிப் பார்த்தார். கூடத்தில் கண்ணம்மாள் 'லபோ திபோ' என்று கத்திக் கொண்டிருந்தாள்.

"அப்பா! சின்னம்மாவுடைய பணமெல்லாம் கொள்ளை போயிடுச்சாம்!"

"கொக். . கொக். . . கொள்ளையா?" என்று குளறினார் புலவர்.

"ஆமாம், அப்பா! பீரோ அறையை ராத்திரி பூட்டி வைத்துவிட்டுப் படுத்துக் கொண்டாளாம். காலையில் பார்த்தால் பூட்டு அங்கே இல்லையாம்! உள்ளே பீரோவும் திறந்து கிடந்ததாம். அதில் வைத்திருந்த நோட்டுக் கட்டுகளைக் காணவில்லையாம்."

புலவருக்குக் குலை நடுக்கம் எடுத்தது.

"எல்லாக் கட்டையுமா காணவில்லை? அதெப்படி இருக்கும்?" என்றார் அவர். ஏனெனில் அவர் எடுத்தது இரண்டே இரண்டு கட்டுகள் தாமே!

"ஆமப்பா! ஒன்றுகூட இல்லையாம்!"

கண்ணம்மாள் வெறி பிடித்தவள் போல் அங்கே வந்தாள். உள்ளே வந்து தன் அறையைச் சோதனை போட்டு விடுவாளோ என்று அவருக்கு உள்ளூற நடுக்கம். வாசற்படியை மறித்து நின்றார்.

"எல்லாம் போயிடிச்சே! குடி முழுகிப் போச்சு! போங்க போங்க! சீக்கிரமாய்ப் போலீஸை அழைச்சுக்கிட்டு வாங்க!" என்றாள் அவள். **(தொடரும்)**

**Printed and Published by T. Sadasivam at the Kalki Press, Kilpauk, Madras-10 for the Proprietors Messrs Bharathan Publications Private Limited Managing Editor: T. Sadasivam.**



# கான்ஸ்டபிள் கந்தசாமி

### பதினேழாம் அத்தியாயம்

## புலவரின் யோசனை

'**போ**லீஸ்' என்றதும் முத்துப் புலவருக்குப் பகீரென்றது.

'' நல்லாத் தேடிப் பார் கண்ணம்மா! எல்லாம் அங்கேதான் இருக்கும். ஒரு கட்டுக்கூடவா இல்லாமற் போகும்?'' என்று மீண்டும் சந்தேகத்தோடு கேட்டார் அவர்.

''எல்லாம் வெறும் காகிதக் கட்டாக அல்லவா இருக்குது!'' என்று பிரலாபித்தாள் அவள்.

அவருக்குத் தூக்கிவாரிப் போட்டது!

'' காகிதக்கட்டா! நோட்டுக் கட்டு இல்லையா?'' என்று அதிர்ச்சியோடு வினவினார் புலவர். சாதாரண சமயமானால் கண்ணம்மாள் தன் புருஷனிடம் கெஞ்சவே மாட்டாள். ஆனால் நிலைமை அவளைச் சதி செய்து விட்டது.

'' கேள்வி கேட்டுக்கிட்டுச் சும்மா நிற்காதிங்க, ஓடுங்க.''

''ஒருகால் உன்னிடம் பணத்தைக் கொடுத்தவர்கள் முதலிலேயே காகிதக் கட்டைத்தான் கொடுத்து ஏமாற்றி விட்டார்களோ என்னவோ! ஆண் பிள்ளைத் துணை யில்லாமல் செய்யும் காரியமெல்லாம் இப்படித்தான்! இவ்வளவு பணம் ஏது என்று இதுவரையில் என்னிடம் ஒரு வார்த்தை சொன்னாயா?'' என்று சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு அவளைக் குத்திக் காட்டினார் முத்துப் புலவர்.

'' ஐயோ! உங்களுக்குப்புண்ணியமாப் போகுது. சீக்கிரம் போலீஸைக் கூட்டி வாங்க. நேத்துக் கூட எடுத்துப் பார்த்தேன். நோட்டுக் கட்டெல்லாம் சரியாக இருந்தது...!''

'போலீஸைக் கூப்பிட்டு வந்தால் அனர்த்தம் நேர்ந்து விடும். தமது அறையைச்



ஏ.கே.பட்டுசாமி

சோதனை போடுவார்கள். தம்மைப் பின்னிப் பின்னிக் கேள்விகள் கேட்பார்கள். வீண் தொல்லையில் முடியுமே!..'என்று விழித்தார் புலவர்.

''போலீஸ் எதுக்குக் கண்ணம்மா! நாமே யோசனை பண்ணி நடந்ததைக் கண்டுபிடிக்கலாம்.''

கண்ணம்மாளுக்கு எரிச்சல் தாங்கவில்லை. ''சுத்தத் தொடை நடுங்கி ஆசாமி!'' என்று அவள் சீறியதும் புலவருடைய பயம் அதிகரித்தது. இதே சமயம் அவரது மூளையில் ஒரு அற்புதமான யோசனை உதித்தது!

''யாரைப் பயங்காளி என்று சொல்லுகிறுய்! சட்டையை மாட்டிக்கிட்டு இதோ போய்க் கூட்டி வருகிறேன் பார்! பெண் பிள்ளைகளா போலீஸுக்குப் போவாங்க!'' என்று கூறிவிட்டு அறைக்குள் சென்று கதவைத் தாளிட்டுக் கொண்டு மெதுவாக ராத்திரி வைத்த இரண்டு கட்டுகளையும் எடுத்துப் பார்த்தார். அவரது உள்ளம் துணுக்குற்றது! இரண்டும் வெறும் காகிதக் கட்டுகள். ரூபாய் நோட்டு அளவுக்கு ஒழுங்காக வெட்டிக் கட்டப்பட்டிருந்தன.

''உள்ளே கதவைச் சாத்திப் போட்டுக்கிட்டு என்ன பண்ணறீங்க!'' என்று துரிதப்படுத்தினுள் கண்ணம்மாள்.

''துணி மாத்திக் கட்டிக் கொண்டிருக்கிறேன்'' என்று கூறிவிட்டு இரண்டு கட்டுகளையும் மடியில் வைத்து இறுக்கிக் கட்டிக் கொண்டு மேலே சட்டையை மாட்டிக் கொண்டார். கையில் பிரம்புத் தடியுடன் கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்தார்.

''சும்மா கூச்சல் போடாமே உட்கார்ந்திரு. நான் போய்ப் போலீஸைக் கூட்டிக் கொண்டு வருகிறேன். ஏதோ செலவுக்கு ஒரு இரண்டு ரூபாய் கொடு'' என்று சிறிது அதிகாரத்துடன் கேட்டார் அவர். கண்ணம்மாள் துளிக் கூட ஆட்சேபிக்காமல் இரண்டு ரூபாயை





எடுத்துக் கொடுத்தாள். அவர் புறப்பட்டு விட்டார்.

வீட்டை விட்டுக் கிளம்பியவர் போலீஸ் ஸ்டேஷனுக்குப் போகாமல் நேராக டைமண்ட் பூங்காவை நோக்கித்தான் நடந்து சென்றார்.

* * *

இரவு அம் மர்ம மனிதனால் தாக்கப்பட்ட கந்தசாமி அப்போது புலவரைப் போய்ப் பார்ப்பது உசிதமல்ல என்று எண்ணினான். அங்கு ஏதோ தவறு நேர்ந்திருக்க வேண்டும் என்று அநுமானித்தான் அவன். கண்ணின் மீது விழுந்த அடி வேறு 'ஜிவ் ஜிவ்' என்று வலித்துக் கண்ணிலிருந்து நீர் பெருகிக் கொண்டிருந்தது. 'நடுநிசியில் அங்கு வந்த மனிதன் யார்? தோட்டத்தில் எதற்காகப் பதுங்கிக் கொண்டிருந்தான்?' என்று பற்பல கேள்விகள் மனத்தைக் குழப்பின. பேசாமல் அவன் வீடு திரும்பி விட்டான்.

மறு தினம் கந்தசாமிக்கு இரவு ''டியூட்டி'' தான். ஆகவே காலையில் குறிப்பிட்ட நேரத்துக்குப் பூங்காவில் காத்துக்கொண்டிருந்தான். கையில் தடியுடன் வேகமாக வந்த முத்துப் புலவர் ''என்ன கந்தசாமி ராத்திரி வரவே இல்லையே?'' என்றுகேட்டார்.

''வந்தேன்! ஆனல்....''

''வந்தாயா?....''

''ஆமாம்! உங்கள் வீட்டண்டை வந்தவுடன் ஒரு பெரிய விஷயம் நடந்து போச்சு!'' என்றான்.

புலவர் ஆச்சரியமடைந்தார். ''பெரிய விஷயமா?.. அதே மாதிரி, வீட்டுக்குள்ளேயும் ஏதோ பிரமாதமாக நடந்து விட்டதாகத் தோன்றுகிறது!'' என்று, இரவு தான் செய்த துணிகரச் செயல்களையும் காலையில்ஏற்பட்டஅனர்த்தத்தையும் விவரமாகக் கூறினார். இரண்டு காகிதக் கட்டுகளையும் வாங்கி ஆராய்ந்து பார்த்து விட்டுச் சுக்கல் சுக்கலாக அவற்றைக் கிழித்துப் போட்டான் கந்தசாமி.

''அந்த அம்மா பீரோவுக்குள்ளே வைச்சிருந்தது உண்மையிலே நோட்டுக் கட்டுதானு அல்லது....''

''சந்தேகமின்றி நோட்டுக் கட்டுகள் தான்! நான் கூட இதே கேள்வியை அவளிடம் கேட்டேன்!''

கந்தசாமி தீவிரமாக யோசித்தான். இரவு அவ் வீட்டருகில் தான் கண்ட மனிதனுக்கும் இந்தக் காகிதக்கட்டுக்கும் முடிச்சுப்போட முயன்றது அவன் மனம்.

விஷயத்தைப் போலீஸில் புகார் செய்தால் வீட்டிலுள்ள ஒவ்வொரு வரையும் விசாரிப்பார்கள். அவர்களது மிரட்டலுக்குப் பயந்து புலவர் எதை யாவது உளறிக் கொட்டி விடுவார். அவர் எடுத்தது கந்தல் காகிதமானுலும் அவர் தப்பித் தவறி எதையாவது உளறினுரென்ருல் அவனையும் சேர்த்துச் சரியாகப் பிடித்து விடும்.

''இதைப் போலீஸில் 'ரிப்போர்ட்டு' பண்ணினுல் உங்களுக்கே ஆபத்தாக முடிந்து விடுமே!''

''அதனுல்தான் உன்னிடம் வந்தேன், கந்தசாமி! எனக்கு ஒரு யோசனை தோணுது. நான் வீட்டுக்குப் போய், போலீஸிலே சொல்லி விட்டதாகவும், போலீஸ்காரர்கள் விசாரணைக்கு வருவார்கள் என்றும் சொல்லிவைக்கிறேன். அதற்குள்ளாக நீ உன் உடுப்பை மாட்டிக் கொண்டு வந்து புலன் விசாரணை செய்வது போல் போக்குக் காட்டு. ஒருகால் அதிருஷ்டவசமாக உன்னுல் ஏதேனும் கண்டுபிடிக்க முடிந்துவிட்டதென்ருல் கண்ணம்மாளுக்கும் உன்மீது அளவற்ற மதிப்பு ஏற்பட்டுவிடும். பிறகு சிங்காரியைப் பற்றிய பிரச்னையும் தீர்ந்து விடலாம். எது எப்படியானுலும், இப்போது பணம் பறி போய் விட்ட நிலையில் கண்ணம்மாள் சிங்காரியின் கல்யாண விஷயத்தைப் பற்றி மேற்கொண்டு எந்தவிதமான நடவடிக்கையும் எடுத்துக் கொள்ளவே மாட்டாள் என்பது மட்டும் நிச்சயம்!'' என்ருர் முத்துப் புலவர்.

''சபாஷ்! அருமையான யோசனை! நீங்க வீட்டுக்குப் போங்க! இதோ நான் அஞ்சே நிமிஷத்திலே அங்கே வருகிறேன். ஆனுல் என்னை முன்பின் தெரிஞ்சதாகவே நீங்க காண்பிச்சுக்கக் கூடாது'' என்ருன் கந்தசாமி.

புலவர் தலையை ஆட்டிக் கொண்டே தம் வீட்டை நோக்கி நடக்கலானுர்.

## பதினெட்டாம் அத்தியாயம்

# கந்தசாமி தர்பார்

சுமார் ஒன்பது மணிக்குப் புலவரின் வீட்டுக் கூடம் போலீஸ் வீரன் கந்தசாமியின் தர்பார் மண்டபமாகக் காட்சி அளிக்கத் தொடங்கியது.

அட்டகாசமாக வந்த கந்தசாமி முதலில் தோட்டம், வீடு, அறைகள், கூடம் இவற்றின் நீள அகலங்களை நுட்பமாக நோட்டம் பார்த்துத் தனது குறிப்புப் புத்தகத்தில் எழுதிக் கொண்டான். அவன் தோட்டத்துக்கும் உள்ளுக்குமாக நடக்கும்போதெல்லாம் கண்ணம்மாள் அவன் பின்னுலேயே ஓடினுள். அவளது கண்களுக்கு அவன் கலி தீர்க்க வந்த கண்கண்ட தெய்வமாகத் தோன்றினுன். சிங்காரியைச் சீக்கிரமாகக் காப்பி போடும்படி ரகசிய உத்தரவு போட்டாள் கண்ணம்மாள்.

சிங்காரியும் மனத்துக்குள் சிரித்துக் கொண்டே அடுக்களைக்கு ஓடினுள்.

வீட்டின் ஒவ்வொரு பாகத்தையும், பீரோ உள்பட அங்குள்ள ஒவ்வொரு பொருளையும் ஆராய்ந்தபிறகு கூடத்தி லுள்ள நாற்காலியில் 'உஸ்'ஸென்று ஒரு நீண்ட பெருமூச்சுடன் உட்கார்ந்து கொண்டான் கந்தசாமி.

சிங்காரி கொண்டு வந்த காப்பிப் பாத்திரத்தைக் கண்ணம்மாள் பிடுங்கி அவனிடம் பணிவாக நீட்டிய வண்ணம், ''இந்தாங்க, பாவம் உங்களுக்கு எவ்வளவோ சிரமம்! இதைக் குடிச்சுட்டு மேலே ஆகவேண்டியதைப் பார்க்கலாம்'' என்ருள்.

''சூச் சூச் சூச்சூ! இதுக்கு என்ன அவசரம்! இது போல் கேஸிலே இறங்கி விட்டால் அதைக் கண்டு பிடிக்கிற வரைக்கும் எனக்குச் சாப்பாடு, தூக்கம் ஒன்றிலுமே மனசு செல்லாது! கெடக்கட்டும்...கொண்டாங்க!'' என்று காப்பியை வாங்கிக் குடித்து விட்டுக் கண்ணம்மாளை மடக்கி மடக்கி ஆயிரம் கேள்விகள் கேட்டான் அவன். அவள் பொறுமையோடு சொல்லி வந்த பதில்களை அவன் தனது குறிப்புப் புத்தகத்தில் விடாமல் கிறுக்கிக் கொண்டேயிருந்தான்.

''பீரோவில் எவ்வளவு பணம் இருந்தது?''

''ஏழாயிரத்து ஐந்நூறு.''

''யாருடைய பணம்?''

''என்னுடையதுதானுங்க!''

''உங்களுக்கு எப்படிக் கிடைச்சுது?''

''அதெல்லாம் எதுக்குங்க!....''

''ஏன் ஏதுன்னு குறுக்கே பேசினல் எனக்குக் கோபம் வரும்! பேசாமல் சொல்லிக்கிட்டே வாங்க!''

''அது வந்து அவருடைய முதல் தாரத்து நகைகளை வித்து....''

''யார் விற்றது?''

''நான்தான்!''

''விற்றதுக்கு யார் சாட்சி?''

''கூட மருதம்மா வந்தாங்க!''

''அது யாரு மருதம்மா?''

''என் சிநேகிதிங்க!''

''விற்றது உங்களுடைய புருஷனுக்குத் தெரியுமா?''

''தெரியும்!''

புலவர் குறுக்கே பாய்ந்தார்:

''எனக்குத் தெரியவே தெரியாது. என்னைக் கேட்காமலேயே விற்று விட்டிருக்கிறள், ஐயா இவள்!''

மேலும் சில கேள்விகளைக் கேட்ட பிறகு திடீரென்று அவன், ''காலையில் எழுந்திருக்கையில் வீட்டுக் கதவு ஏதேனும் திறந்திருந்ததா?'' என்ருன்.

''கொல்லைப் பக்கத்துக் கதவு திறந்து கிடந்தது!'' என்ருள் கண்ணம்மாள்.

''உங்கள் வீட்டுக்கு அன்னிய ஆண் பிள்ளைகள் யாராவது வருவதுண்டா?''

''இல்லைங்க!''

புலவர் சும்மா இருக்கவில்லை. மீண்டும் குறுக்கிட்டார்:

''கண்ணம்மா, அன்றைக்கு அந்த மருதம்மாளுக்குச் சொந்தக்காரன் தங்கவேலு வந்தானே!''

''தங்கவேலுவா! ஓஹோ.........'' என்ருன் கந்தசாமி.

அவனது மூளை கிறு கிறு வென்று வேலை செய்யத் தொடங்கியது.

''இல்லைங்க, இரண்டே இரண்டு தடவைதான் வந்ததுங்க அந்தப் புள்ளை!'' என்ருள் கண்ணம்மாள்.

கந்தசாமி அவளை அளவுகடந்த கோபத்துடன் பார்த்தான்.

''இதுக்கு இருபது தடவை வரணுமா? அவன், வீட்டையெல்லாம் நல்லா பார்த்தானல்லவா?''

''அது பார்க்கலைங்க. நானேதான் அழைச்சுக்கிட்டுப் போய்ச் சுத்திக் காண்பிச்சேன்!''

''பீரோவில் பணம் இருப்பது அவனுக்குத் தெரியுமா?''

''அது நல்ல புள்ளைங்க.''

''சரி, நேத்து சாயந்திரம் அவன் இங்கே வந்திருந்தானு?''

''இல்லை!''

முத்துப் பிள்ளைக்குச் சடக்கென்று ஒரு விஷயம் நினைவுக்கு வந்தது.

''போலீஸ்கார ஐயா! நேற்று இருட்டுற சமயத்தில் அந்த அவரைப் பந்தல் பக்கமாக யாரோ நின்றது போல் எனக்குத் தெரிந்தது.''

கந்தசாமி அதே சமயத்தில், முன் இரவு காம்பவுண்டுச் சுவர் ஓரமாகப் பதுங்கியிருந்து அவன் கண்ணைப் பதம் பார்த்த உருவத்தையும் தங்கவேலுவின் தோற்றத்தையும் ஒப்பிட்டுப் பார்த்துக் கொண்டான்.

''உங்க பணம் திரும்பி வரணும் என்ற ஆசை இருந்தால் நான் சொல்கிறபடி செய்யணும்! அப்படி உண்டானல்தான் இந்தக் கேஸிலே நான் முழு மூச்சாக இறங்குவேன்'' என்ருன்.

''ஐயோ, நீ என்ன சொன்னலும் கேட்கிறேன் தம்பி!''

''நான் இங்கேவந்து விசாரணை பண்ணினதாக யாருக்கும் தெரியக் கூடாது. வேறே போலீஸ்காரங்க திரும்பவும் வந்து விசாரித்தால் அவங்ககிட்டகூட மூச்சுவிடக் கூடாது. ஏனென்ருல் உங்களுக்காக நான் தனிப்பட்ட முறையிலே வேலை செய்யப் போகிறேன்!''

''சரிதான், தம்பி!''

''ரெண்டாவதாக இந்தத் தங்கவேலு என்கிறவன், பனை மரம் மாதிரி உயரமா, கறுப்பா ரத்தக் கண்ணும் கிருதாக் கிராப்புமா இருப்பானே அவன்தானே?''

''அவனேதான் தம்பி!''

''ஹூம்! அந்தப் பயல் ஒண்ணும் நம்பர் கேடி! அவனை நான் ரொம்ப நாளாகக் குறி வைச்சுக்கிட்டே வரேன், அவனும் தப்பிச்சுக்கிட்டே வரான்!''

''அப்படியா?'' என்று மூக்கின் மேல் விரலை வைத்தாள் கண்ணம்மாள்.

''ஆமாம். போலீஸ் வந்து விசாரித்தால் அவன் மேலேதான் சந்தேகம் என்று அழுத்தம் திருத்தமாகச் சொல்லணும்! சிறிதும் தயங்கக்கூடாது!''

கண்ணம்மாள் ஆட்சேபிக்க வில்லை. பிறகு தகுந்த எச்சரிக்கைகள் செய்து விட்டு விடை பெற்றுக்கொண்டு அங்கிருந்து புறப்பட்டான் கந்தசாமி.

போகும்போது ''நீங்க மாத்திரம் என் கூட வாங்க!'' என்று புலவரைக் கூடவே அழைத்துக் கொண்டுபோனுன்.

கந்தசாமிக்குத் தங்கவேலுவின்மீது பலத்த சந்தேகம் ஏற்பட்டது. ஒரு ஆசாமியை அனுப்பி ஜாடையாக விசாரிக்கச் செய்ததில் தங்கவேலு வீட்டில் இல்லை யென்றும் எங்கேயோ வெளியூருக்குப் போய் விட்டதாகவும், எந்த ஊருக்குப் போனுன், எப்போது திரும்புவான் என்ற விவரங்கள் தெரியாதென்றும் தகவல்கள் கிடைத்தன. அவனது சந்தேகம் ஊர்ஜிதமாகியது. அவனுக்குச் சந்தோஷம் தாங்கக்கூடவில்லை.

'அந்தப் பயல்தான் இதைச் செய்தான் என்பதில் சந்தேகமில்லே. கண்ணம்மாளிடம் பணம் இருக்கும் விஷயத்தைத் தன் அத்தை மருதம்மாள் மூலமாகத் தெரிந்து கொண்டிருப்பான். சிங்காரியை விவாகம் செய்து கொண்டு கண்ணம்மாளே ஏமாற்றிப் பணத்தைப் பிடுங்கி விடலாமென்று முதலில் எண்ணியிருப்பான். புலவரும் சிங்காரியும் காரியத்தைக் கெடுத்து ஆட்சேபணைகளைக் கிளப்பவே விவாகம் நடப்பது சந்தேகமாகி விட்டது. ஆனல் அவனுக்குப் பணத்தை விட்டு வைக்க மனமில்லே. திருடத் துணிந்து விட்டான்!

'வீட்டின் அமைப்பையும் பீரோ வைக்கப்பட்டிருக்கும் இடத்தையும் தெரிந்து கொண்டான். அவ் வீட்டில் அதிக ஜன சந்தடி இல்லாமற் போகவே அவனே யாரும் சரியாகக் கவனிக்கவில்லே. இருட்டின உடனேயே வீட்டுக்குள் நுழைந்து யார் கண்ணிலும் படாமல் ஒளிந்து கொண்டிருப்பான். பாதி ராத்திரியில் எல்லோரும் உறங்கிய பிறகு மெதுவாகப் பீரோவைத் திறந்து பணத்தை எடுத்துக் கொண்டு காகிதக் கட்டுகளே வைத்து விட்டான். பின் பக்கத்துக் கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்து தோட்டத்துச் சுவரைத் தாண்டிக் குதித்தான்' என்று முடிவு கட்டியது கந்தசாமியின் மூளே.

சந்தேகத்துக்கிடமின்றி முந்திய இரவு தன்னைத் தாக்கியது தங்கவேலுதான் என்று ஊகித்துக் கொண்டான் அவன். ஓடுகிற சமயத்தில் அவன் கவனித்து விடவேதான் தங்கவேலு ஊரைவிட்டே கிளம்பி விட்டான். இல்லாவிடில் இன்னும் கொஞ்சம் சாவகாசமாகத்தான் புறப்பட்டிருப்பான்.

மளமள வென்று வழக்கைத் தங்கவேலுவுக்கு எதிராக மேற்கண்டவாறு ஜோடித்துப் புலவரிடம் கூறிக் கொண்டே போனுன் அவன்.

''இதோ பாருங்க, அவன் கொள்ளேயடிச்சுக்கிட்டுப் போன பிறகு வெத்துக் காகிதங்களே எடுத்து வந்துட்டீங்க!'' என்று கூறிச் சிரித்தான் கந்தசாமி.

''ஆமாம் தம்பி, ஒரே ஒரு சந்தேகம்; காகிதக் கட்டுகளே எதற்காகப் பீரோவில் வைத்தான் அவன்?''

கந்தசாமி இதற்கு விளக்கம் கூறினுன். ''நல்லா ஞாபகப் படுத்திப் பாருங்க. அடிக்கடி பீரோவைத் திறந்தால் யாராவது பணம் இருக்கிறதைப் பார்த்துவிடப் போறுங்களேன்னு கண்ணம்மா எப்போதாவது ஒரு கண்ணோட்டம் பார்த்துவிட்டுச் சடக்குன்னு மூடிவிடுவாங்கன்னு நீங்களே சொல்லியிருக்கீங்க. இந்த ரகசியத்தை மருதம்மா மூலமாகத் தங்கவேலுவும் தெரிஞ்சுக்கிட்டிருப்பான். ஆகையால் பதிலுக்குக் காகிதக் கட்டுகளே வைச்சுவிட்டால் அதை நோட்டுக் கட்டுகள் என்று நினைச்சுக் கொஞ்சநாள் வரையில் சரியாகக் கவனிக்காமல் அசட்டையாக இருப்பாங்க. இவனும் உங்கள் வீட்டுக்கு வருகிறதை நிறுத்திக் கொள்ளுவான். சில நாட்கள் கடந்து விட்டால் பிறகு திருட்டு என்றைக்கு நடந்தது. எப்படி நடந்தது என்று தெரிந்து கொள்ள முடியாமலே போய் விடும். காகிதக் கட்டுகளே வைக்கவில்லேன்னு காலி பீரோவை உடனே பார்த்து விடுவாங்க. சமீபத்திலே வந்து போன இவன்மேலே சந்தேகம் ஏற்பட்டு விடலாம். அதனுல்தான் இதைப் போலச் செய்திருக்கிருன்....ஆனல் ஒண்ணு! இவ்வளவு முன்ஜாக்கிரதையாக வேலே செய்தவன், பீரோவை அசட்டையாகத் தொறந்து போட்டுட்டுப் போனதுதான் எனக்கு ஆச்சரியமாக இருக்குது!''

புலவர் ரகசியமாகக் கூறினுர்:

''அது என் தப்பு!....நான் போனபோது பீரோ பூட்டித்தான் இருந்தது. நான்தான்....''

கந்தசாமி சிரித்தான். 'அதை மட்டும் நீங்க ஞாபகமா பூட்டி விட்டு வந்திருந்தீங்க என்றுல் கண்ணம்மாவுக்கு இப்போதைக்குச் சந்தேகமே ஏற்பட்டிருக்காது! விஷயமும் இப்போது வெளியாகி யிருக்காது!''

முடிவாகக் கந்தசாமி முத்துப் புலவரிடம் மேலே நடக்க வேண்டியவற்றையெல்லாம் கூறினுன்.

''எல்லாம் நன்மைக்குத்தான் நடந்துதுங்க. இனிமேல் நம்ப எதிரிங்க தங்கவேலுவும் மருதம்மாவும் தொலேஞ்ச மாதிரிதான். கண்ணம்மாளும் வழிக்கு வந்துடுவாங்க! மற்றதெல்லாம் அப்புறம் சுலபமுங்க! முதலிலே நீங்க போய் உண்மையாகவே போலீஸிலே 'ரிப்போர்ட்' கொடுங்க!''

''புகாரா? புகார் எழுதி வைத்தால் ஆபத்தாக முடியும் என்று சொன்னுயே தம்பி!''

''அப்போது இருந்த நிலேயில் சொன்னேன்! ரிப்போர்ட் கொடுத்தால்தான் ஆசாமியைப் பிடிச்சதும் சொத்து உங்க கைக்கு வந்து சேரும். தங்கவேலுமேல் தான் சந்தேகம் என்று மறக்காமல் சொல்லுங்க! மேல்கொண்டு நான் கவனிச்சுக்கிறேன்!'' என்று புகார் செய்யவேண்டிய முறை, போலீஸாரின் கேள்விகளுக்குப் பதில் சொல்லவேண்டிய வழிகள் ஆகியவற்றை விவரமாகச் சொல்லிக் கொடுத்து அவரை அனுப்பி வைத்தான் கந்தசாமி. (தொடரும்)

**Printed and Published by T. Sadasivam at the Kalki Press, Kilpauk, Madras-10 for the Proprietors Messrs Bharathan Publications Private Limited**
**Managing Editor: T. Sadasivam**

பத்தொன்பதாம் அத்தியாயம்

## சினிமாவுககுப் புறப்பாடு!

மூத்தம்மாளுக்குத் தன் தம்பி போலீஸ் உத்தியோகத்தில் இருப்பதில் எவ்வளவோ பெருமை தான். கந்தசாமியும் தினந்தோறும் அவளிடம் ''இந்தத் திருடனைப் பிடித்தேன். அந்தக் கேடியை லாக்கப்பில் தள்ளினேன். ஊரே அசந்து போச்சு;

# கான்ஸ்டபிள் கந்தசாமி



ஏ.கே.பட்டுசாமி

பட்டணமே அதிர்ந்து போச்சு!'' என்று எதையாவது அளந்து கொண்டே இருந்தான். இப்படி ஊர் பூராவையும் கலக்கும் சூரத் தம்பி பக்கத்து வீட்டு மருதம்மாளின் கொட்டத்தை அடக்குவதற்கு ஒரு வழியும் பண்ணவில்லையே என்று வெகுவாகக் குறைப்பட்டுக் கொண்டிருந்தாள் அவள். அந்தப் பேட்டை முழுவதும் போலீஸ்காரன் வீடு என்று

பயபக்தியுடன் அஞ்சலி செலுத்திக் கொண்டிருக்க, இந்த ராங்கிக்காரி மாத்திரம் துளிக்கூட மரியாதையின்றி, அவளைக் கண்டாலே ஏளனமாகச் சிரித்துக் கொண்டிருந்ததைக் கண்டு அவளது மனம் புண்பட்டுக்கொண்டிருந்தது. தம்பியும், ''சும்மா இரு, அக்கா! 'பிளான்' போட்டுக்கிட்டே இருக்கிறேன்!'' என்று வெகு நாட்களாகச் சமாதானப் படுத்திக்கொண்டே வந்தான். அன்று காலையில் முத்தம்மாள் தெரு வாசலில் தண்ணீர் தெளித்துப் பெருக்கி லட்சணமாகக் கோலம்போட்டு விட்டு உள்ளே நுழைந்தாளோ இல்லையோ, மருதம்மாள் ஒரு முறம் குப்பையைக் கொண்டு வந்து அவள் போட்டிருந்த கோலத்தின் மேல் கொட்டிவிட்டாள். கந்தசாமி அப்பொழுது வீட்டில் இல்லை. வெளியே போயிருந்தான்.

''ஏய்! நானும் பார்த்துக்கிட்டே வர்றேன். ஏது வர வர உன் திமிர் ஏறிக்கிட்டே போகுது? குப்பையை எடுத்து வந்து கோலத்து மேலே கொட்டுகிறயே!'' என்று யுத்தத்தை ஆரம்பித்து வைத்தாள் முத்தம்மாள்.

''என்ன! 'ஏய் ஏய்' என்று மாடா ஓட்டுறே! நான் குப்பை கொட்டுகிற இடத்திலே கோலம் போட்டு வைச்சுட்டு என்னமோ குதிக்கிறயே!'' என்று எதிர் பாணம் தொடுத்தாள் மருதம்.

சுமார் அரைமணி நேரம் வரையில் மின்னலும் இடியும் மழையும்போல் யுத்தம் முழங்கி ஓய்ந்தது. மருதம்மாவின் மகனுக்கு இதெல்லாம் வேடிக்கையாக இருந்தது. அவர்களது யுத்தத்தை அவன் வெகுவாக ரசித்தான்.

கந்தசாமி வீட்டுக்கு வந்ததும் வராததுமாக முத்தம்மாள் விஷயத்தை அவனிடம் கூறி முறையிட்டாள்.

அவன் தணிவான குரலில் கூறினான்:

''கப் சிப் என்று இரு அக்கா! என் 'பிளான்' வேலை செய்ய ஆரம்பித்து விட்டது. வலையை வீசி விட்டேன். சுண்டி இழுக்கவேண்டியதுதான் பாக்கி! தங்கவேலுவும் அவங்க அத்தையும் நம்ப பிடியிலே வசமா மாட்டிக்கிட்டாங்க!''

''ஆமாம், இதை நீயும் எத்தனையோ நாளா சொல்லிக்கிட்டே இருக்கே!'' என்று அலுத்துக்கொண்டாள் அவள்.

''இதுதான் உனக்கு அவசரப் புத்தி என்கிறது! செய்கிறதை வழியாகச் செய்யணும்! பார்த்துக்கிட்டே இரு!

இன்னும் இருபத்திநாலு மணி நேரத்திலே அந்த மருதம்மா உன் காலிலே வந்து விழாதபோனல், நான் என் மீசையை எடுத்து விடுகிறேன்!'' என்று சபதம் செய்தான் கந்தசாமி. முத்தம்மாள் அந்த வீரனின் கர்ஜனையைக் கேட்டு மலைத்துப் போனுள்.

மறுதினம் ஸ்டேஷனுக்குப் போன கந்தசாமிக்கு எத்தனையோ முக்கியமான அலுவல்கள் இருந்தன. முத்துப் பிள்ளை சரிவரப் புகார் கொடுத்தாரா, மேற்கொண்டு என்ன நடவடிக்கை எடுத்துக் கொண்டார்கள் என்றெல்லாம் விசாரித்துத் தெரிந்து கொண்டு வந்தான். புலவருக்கு அவன் சொல்லிக் கொடுத்த பாடம் வீண் போகவில்லை என்று தெரிந்தது. இன்ஸ்பெக்டரும் ஸ்டேஷன் ரைட்டரும் கான்ஸ்டபிள் வேலப்பனுடன் அவருடைய வீட்டுக்குச் சென்

முத்தம்மாள் கூறினுள்: ''நம்ப முருகேசன் வந்திச்சு, தம்பி! சினிமாவுக்கு இரண்டு பேருக்கு ஒரு பாஸ் கொடுத்துட்டுப் போயிருக்குது. ராத்திரி ஆட்டத்துக்கு முனியம்மாளை அழைச்சுக்கிட்டுப் போய் வந்துடு!''

''சரிதான்! முருகேசன் வந்தானு!''

''பாவம், நல்ல பிள்ளை! நீ இல்லாத சமயத்தில் வந்து உன் உடம்பைப்பற்றி விசாரிச்சுட்டுப் போகுது!''

''நியாயம்தானே, என் உடம்பை விசாரிக்கணுமானுல் ஸ்டேஷனிலே கேட்காமல் நான் இல்லாதபோது இங்கே வர்றதுதான் சரி! அப்படி வந்தபோது சினிமாவுக்குப் பாஸ் வேணுமென்று கேட்டீங்களாக்கும்!''

''நான் கேட்கவில்லை'' என்று சொன்னுள் முனியம்மாள்.

''சரிதான் தெரியுதே! ஏன் எங்கப்பா குதிருக்குள்ளே இல்லேங்கறே! அவ



ஞர்கள் என்றும் கண்ணம்மாளும் தங்கவேலுவின் மீது சந்தேகம் என்று விஷயத்துக்குக் கண் மூக்கெல்லாம் ஒட்ட வைத்துச் சொல்லியிருக்கிருள் என்றும் வேலப்பன் மூலமாகத் தெரிந்து கொண்டான் கந்தசாமி.

மாலையில் அவன் வீடு திரும்பியபோது முனியம்மாள் அவனைப் பார்த்துப் புன்முறுவல் பூத்தாள். அவனைக் கண்டாலே புலியைக் கண்டதுபோல் பதுங்கும் முனியம்மாள் அன்று அவனைப் பார்த்து விட்டதும் புன்னகை புரிந்ததைக் கண்டு கந்தசாமி அதிசயித்தான்.

னையே வந்து உன்னை இட்டுக்கிட்டுப் போகச் சொல்லக் கூடாது?''

''நல்லாச் சொன்னே! ஒரு வயதுப் பொண்ணை ஊரான் கூடவா அனுப்புவாங்க?'' என்ருள் முத்தம்மாள்.

''அவன் கூட அனுப்பினுல் என்ன? அவன் நல்ல பிள்ளையாச்சே அக்கா!...

இல்லேன்னு நீயே அவளை அழைச்சுக் கிட்டுப் போ!'' என்றான்.

''எனக்கு உடம்பு சரியாக இல்லே, கந்தசாமி. நான் சொல்கிறதைக் கேளு. முனியம்மாவும் சீக்கிரத்தில் ஊருக்குப் போகப் போவுது......''

''ஊருக்கா?'' என்று ஆச்சரியத்தோடு கேட்டான் அவன்.

''ஆமாம், மாமாவுக்கு நான் கடுதாசு எழுதியிருக்கிறேன். கல்யாண விஷயத்தைத் தை பொறந்ததும் யோசித்துக் கொள்ளலாம்னு......''

''அப்படியானால் முனியம்மாளைச் சினிமாவுக்கு மாத்திரமில்லே, ஊருக்குக் கூட நானே அழைச்சுக்கிட்டுப் போறேன்! ஐயோ பாவம், ஊருக்குப் போயிடப் போவுது; அதற்குத்தான் நம்மை விட்டால் யார் இருக்காங்க!'' என்றான் கந்தசாமி.

''ஆமாம் தம்பி, நல்ல யோசனைதான். நாலைந்துநாட்கள் லீவு எடுத்துக்கிட்டு அழைச்சுப்போனால் மாமாவுக்கும் சந்தோஷமாக இருக்கும்'' என்று ஆமோதித்தாள் முத்தம்மாள்.

* * *

அத்தானோடு சினிமாவுக்குப் போகிறோம் என்ற சந்தோஷத்தில் முனியம்மாள் தலைகால் புரியாமல் சதிர் நடை போட்டுக்கொண்டு நடந்தாள். போகும் வழியெல்லாம் கந்தசாமி சும்மா இல்லே. முருகேசன் விஷயமாக அவளது வாயைக் கிளறிக்கொண்டே சென்றான்.

''முருகேசனும் நானும் எவ்வளவு சிநேகம் என்று தெரிஞ்சா நீ என்னிடம் விஷயத்தை இப்படி ஒளிக்க மாட்டே! அவன் எந்த விஷயமானாலும் என்கிட்ட சொல்லாமல் இருக்கமாட்டான். நீயும் அவனும் பேசிக்கிட்டது முழுதும் எனக்குத் தெரியும்!......''

முனியம்மாள்வெட்கத்தினால் தலையை ஒரேயடியாகக் குனிந்து கொண்டாள்.

''பயப்படாதே, முனியம்மா! எனக்கு இந்த விஷயத்திலே ரொம்பத் திருப்தி. முருகேசன் தங்கமானவன். மாமாவிடம் நானே சொல்லுகிறேன். அவர் உன்னைக் கேட்டால் மீன மேஷம் பார்க்காமல் 'முருகேசனைத்தான் கட்டிக்குவேன்' என்று சொல்லிவிடு.'' கந்தசாமி அவளது முகத்தைப் பார்த்தான்.

அவளும் அரை நம்பிக்கையோடு அவனை ஓரக்கண்ணால் பார்த்தாள்.

''அட மெய்யாகத்தான் சொல்கிறேன், முனியம்மா! நீ தைரியமாக மனசில் இருக்கிறதைச் சொன்னால்தான் காரியம் நடக்கும்! புரியுதா?'' என்று நயமாகக் கேட்டான் அவன்.

குனிந்த தலையை மெதுவாக ஆட்டிச் சம்மதம் தெரிவித்தாள் அவள். ''அப்பாடி! ஒரு தொல்லை தீர்ந்தது!'' என்று நினைத்தான் கந்தசாமி.

## இருபதாம் அத்தியாயம்

# மறக்கமுடியாத இரவு

படக் காட்சி இரவு சுமார் ஒரு மணிக்கு முடிந்தது. கந்தசாமி பெண்களுடைய 'கேட்டு'ப் பக்கம் காத்திருந்து முனியம்மாளை அழைத்துக் கொண்டு புறப்பட்டான். அந்த நேரத்தில் வீடு திரும்புவதற்குப் பஸ்ஸை எதிர்பார்க்க முடியாது. வீதியோரத்திலிருந்த ஒரே ஒரு ரிக்ஷா வண்டியைத் தவிர வேறு சாதனங்களெதுவும் காணப்படவில்லே. அவனுக்கு அவளோடு சேர்ந்தாற்போல் ரிக்ஷாவில் உட்கார விருப்பமில்லே. எனினும் அவளை மாத்திரம் ஏறிக் கொள்ளச் சொல்லி, தான் கூடவே நடந்து செல்லலாம் என்று உத்தேசித்தான். ஆனால் நாட்டுப்புறத்து முனியம்மாள் ரிக்ஷா வண்டியில் ஏறக் கூச்சப்பட்டாள். எனவே கால் நடையாகவே இருவரும் புறப்பட்டனர்.

பனி கொட்டிக் கொண்டிருந்தது. தெருக்களில் ஜன நடமாட்டமே யில்லே. நகரம் முழுவதுமே மோனத்தில் ஆழ்ந்து கிடந்த அந்த நேரத்தில் கந்தசாமியின் செருப்புச் சத்தம் 'கர்முர்' என்று கேட்டது. குறுகிய சந்துகளின் வழியாக அவன் விரைப்பாக நடந்தான். சங்கோசம் காரணமாக அவனுக்குச் சற்றுப் பின்னால் வந்து கொண்டிருந்த முனியம்மாள் அவனுடைய நடையின் வேகத்தைப் பின்பற்ற முடியாமல் ஓட்டமும் நடையுமாகத் திணறிக் கொண்டே வந்தாள்.

மெதுவாக முனியம்மாளை ஊரில் கொண்டு போய்த் தள்ளி விட்டால், பிறகு முத்தம்மாளையும் 'தாஜா' செய்து விடலாம் என்று சிந்தித்துக் கொண்டே நடந்த கந்தசாமி, சிறிது தூரத்தில் காலடிச் சத்தத்தைக் கேட்டுத் திடுக்கிட்டான். அவனது போலீஸ் மூளையில் ஏதோ சந்தேகம் தோன்றியது. அந்தச் சந்தின் மறுகோடியில் ஒரு உயரமான மனித உருவம் சுவரோரமாகப் பதுங்கி நின்றதைக் கண்டான். அந்தச் சிறு சந்தில் விளக்குகள் ஒன்றுகூட இல்லா

மையால் தெளிவாகப் பார்க்க முடிய வில்லை. எனினும் பதுங்கிய ஆசாமி கையில் மூட்டை போன்ற ஏதோ ஒன்றை வைத்திருந்தான் என்பதை மட்டும் காண முடிந்தது. கந்தசாமி சுரு சுருப்புடன் சிறிது வேகமாகவே நடக்க ஆரம்பித்தான்.

அந்த ஆசாமி பின்னேக்கி நகர ஆரம்பித்தான். அவனது உயரத்தைப் பார்த்தபொழுது ஒருகால் தங்க வேலுவோ என்ற சந்தேகம் மனத்திலே தோன்றியது.

''ஏய்! நில்லு!'' என்று ஒரு அதட்டல் போட்டான் கந்தசாமி.

அவ்வளவுதான்; அந்த மூட்டைக்கார ஆசாமி பக்கத்துச் சந்தில் திரும்பி ஓட ஆரம்பித்தான். அடுத்த நொடியில் கந்தசாமி வேட்டை நாய்போல் ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து அவனைத் துரத் திக்கொண்டு ஓடினன். ''அத்தான், அத்தான்!'' என்று முனியம்மாள் கொடுத்த அபயக் குரல் அவனது காது களில் விழவேயில்லை.

முன்னல் ஓடிய ஆசாமி, எதிரில் குறுக் கிட்ட சந்துகளிலும் பொந்துகளிலும் புகுந்து புகுந்து விரைவாக ஓடினன். கந்தசாமியினல் செருப்பைப் போட்டுக் கொண்டு அவனைத் துரத்த முடியவில்லை. அதை உதறி எறிந்துவிட்டு இரைக்க இரைக்கச் சளைக்காமல் ஓடினன்.

சுமார் பதினைந்து நிமிடங்களுக்குமேல் ஓடியாகிவிட்டது. மூட்டைக்காரனும் ஓட்டப் பந்தய நிபுணனைப்போல் வெகு வேகமாக ஓடினன். எத்தனை தெருக்கள்! எத்தனை சந்துகள்! அவன் ஓட ஓடக் கந்தசாமியின் ஆத்திரம் அதிகரித்தது. 'இன்று விடுவதில்லை. எப்படியாவது பிடித்துவிட்டு மறுவேலை!' என்ற திட நிச்சயத்துடன் திணறிக்கொண்டே ஆக் ரோஷத்துடன் கத்திய வண்ணம் மூச் சைப் பிடித்துக் கொண்டு துரத்தினன்.

எவ்வளவு நேரம்தான் ஓட முடியும்? கடைசியில் எதிரியின் வேகம்தணிந்தது. அவனது கால்கள் தள்ளாடத் தொடங் கின. கந்தசாமி அவனை நெருங்கி விட்டான். அவனுக்கும் அந்த ஆசா மிக்கும் இடையே ஏழெட்டு அடி இடை வெளிதான் இருந்தது. இன்னும் ஒரே நிமிடத்தில் கந்தசாமி அவனை ஒரே அமுக்காக அமுக்கி விட்டிருப்பான்! ஆனல் அதற்குள் சற்றும் எதிர்பாராத ஒரு சம்பவம் நடந்து விட்டது!

'டமா'ரென்று ஒரு வெடிச் சத்தம். அவன் முகத்தில் சில்லென்று தண்ணீரை வாரி அறைந்தது போன்ற ஒரு உணர்ச்சி ஏற்பட்டது. காலின் கீழ் கண்ணுடிப் பாளங்களின் கலகலத்த ஓசை! சாராய நாற்றம் 'குப்'பென்று மூக்கைத் துளைத் தது. என்ன நடந்தது என்று புரிந்து கொள்ள மாட்டாமல் தடுமாறி நின்ருன் கந்தசாமி. எதிரி ஓட்டமாக ஓடி மாய மாய் மறைந்து விட்டான்.

கந்தசாமி முகத்தைத் துடைத்துக் கொண்டான். சிறிது சிறிதாக அவ னுக்கு விஷயம் புலப்படத் தொடங்கி யது. அந்த ஆசாமி ஒரு பெரிய கண்ணுடி ஜாடி நிறையக் கள்ளச்சாராயம் எடுத் துச் சென்று கொண்டிருந்தான். ஜாடி துணியினல் சுற்றப்பட்டிருக்கவே ஏதோ மூட்டைபோல் இருந்தது. மேலும் ஓட முடியாமற் போனவுடன் தான் பிடிபடாமல் இருப்பதற்காக அந்த ஜாடியை அவனது காலின் மேல் போட்டு உடைத்து விட்டுத் தப்பி ஓடி விட்டான்.

அவனது முகம், கைகால்கள், ஆடை ஆகிய எல்லாம் ஒரே சாராய மயம்! என்ன துடைத்தும் நாற்றம் போகவே இல்லை! வேட்டியின் முன்பாகம் வேறு, சாராயத்தில் தோய்த்தெடுத்தது போல நனைந்து, உடம்பின் மேல் பட்டதும் அருவருப்பைக் கொடுத்தது. விதியை நொந்துகொண்டே, வந்த வழியே திரும்பினன் பழனிச்சாமிக்குப் பாலபி ஷேகம் என்ருல், அவனுக்குச் சாராய அபிஷேகமா!

அப்போதுதான் அவனுக்கு முனியம் மாளைப் பற்றிய நினைவு வந்தது. அவன் இருந்த இடத்துக்கும், முனியம்மாளை விட்டு வந்த இடத்துக்கும் சுமார் இரண்டு மூன்று மைல் தூரமாவது இருக் கும். 'ஐயையோ! நாட்டுப் புறத்துப் பெண், பட்டணத்துக்குப் புதிது. வீட் டுக்குப் போக வழி தெரியாது. சந்தியில் விட்டு விட்டோமே! என்ன கதியா னளோ! என்ன முட்டாள்தனம்! முத் தம்மாளுக்கு என்ன பதில் சொல்வது!'

அவனுக்கு வயிற்றைக் கலக்கியது!

அந்தக் கள்ளச் சாராயக்காரனை வாய்க்கு வந்தபடி சரமாரியாகத் திட் டிக் கொண்டே வேகமாக நடக்கை யில் திடீரென்று பின்னலிருந்து யாரோ அவனது முதுகின் மேல் கையை அழுத்தியது போலிருந்தது!

''என்ன அப்பேன்! தண்ணீர் ரொம்ப ஜாஸ்தியா?''

கந்தசாமி தன் கழுத்தின் மீது வைக் கப்பட்ட கையை ஒரு உதறல் உதறி விட்டுத் திரும்பிப் பார்த்தான். பின்னல் நின்று கொண்டிருந்த ஆசாமி சடக் கென்று அவனது கையைக் கெட்டி யாகப் பிடித்துக் கொண்டான்.

''ஓடப் பார்க்காதே, அப்பேன்! ஒண் ணும் நடக்காது! மெதுவா எங்கூடவே

வா! குடி வெறியிலே ஆடிக் கீழே விழுந்துடப் போறே!''

கந்தசாமிக்குக் கோபம் பொத்துக் கொண்டு வந்தது.

''டேய்! யாரு நீ? யாரைப் பார்த்துக் குடிகாரன்னு உளர்றே?''

அந்தத் தடியன் ஏளனமாகச் சிரித்துக் கொண்டே பேசினான்:

''கோவிச்சுக்காதீங்க ஸார்! நீங்க குடிச்சிங்கன்னு நான் சொன்னது தப்புத் தானுங்க! லேசா ஒரு நாலு திரான் 'டானிக்' சாப்பிட்டுச் சொர்க்கத்துக்கு வழி தேடிக்கிட்டிருக்கீங்க. வாங்க என் கூடவே, வழி காட்டுகிறேன்! சுகமாய்க் கொட்டடியிலே படுத்துத் தூங்கலாம். ஏன் இந்த நடுத்தெருவிலே கிடந்து சங்கடப் படுகிறீங்க!'' என்று அவனது கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு போனான் அந்த ஆசாமி.

கந்தசாமியின் கோபம் எல்லையை மீறியது. ''ஏய், நான் யார் தெரியுமா?'' என்று கர்ஜித்தான் அவன்.

''நல்லாச் சொன்னீங்க! ஏன் தெரியாமலா! நீங்க இந்தப் பட்டணத்து ராசாவில்லே! அட, சட்! சும்மா நட அப்டேன் ஸ்டேஷனுக்கு!''

கந்தசாமிக்குத் தனது நிலைமை அப்போதுதான் விளங்கியது. அவனைப் பிடித்தவனும் ஒரு போலீஸ்காரன் தான்! அவன் மீது வீசிக் கொண்டிருந்த சாராய நாற்றமும் அவன் சஞ்சரித்துக் கொண்டிருந்த இடமும் வேளையும் அப்படிப் பட்டவை! இதுவே அவனது மந்தாரப்பேட்டையாக இருந்தால் இத்தகைய அனர்த்தம் நடக்கக் காரணமில்லை! அங்கே யாரும் அவனைச் சந்தேகிக்க மாட்டார்கள். ஆனால் இந்த முகமறியாத இடத்தில்?...

''இதோ பாரப்பா, நானும் உன்னைப் போல ஒரு போலீஸ்காரன்தான்!...''

''ஆஹா, தெரியாதா பின்னே! நீ போலீஸ்காரனாகவும் இருப்பே, டிப்டி கமிஷனராகவும் இருப்பே!......முதல்லே மரியாதையா நடக்கிறயா, 'கல்தா'க் குடுத்து தள்ளிக்கிட்டுப் போகணுமா?... சனியன்! உன் நாற்றம் கொடலைப் புடுங்குது! இந்த மதுவிலக்குக் காலத்திலே உனக்கு எங்கே கிடைச்சுது இந்தச் சரக்கு?'' என்று கேட்டான்.

இதுவே வேறு சந்தர்ப்பமானால் கந்தசாமி அந்தக் கேவலமான பேச்சுக்களைச் சகித்துக்கொண்டு சும்மா இருப்பானா? கால வித்தியாசம்!

''இதோ பாராப்பா, ஒரு கேஸ் பிடிக்கப்போனேன். போன இடத்திலே ஒரு ஆசாமி இப்படி யெல்லாம்......''

''கேஸ் பிடிக்கிற மூஞ்சியைப் பாரு! சும்மா வா ராஜா!''

என்ன சொல்லியும் அந்த முரடன் கேட்பவனாக இல்லை. பலவந்தமாக இழுத்துக் கொண்டே போனான். சற்று நயமாகப் பேசிப் பார்க்கலாமா?

''ஸார்! என் மாமன் மகளைத் தனியாக விட்டுட்டு வந்துட்டேன் ஸார்! அது ஊருக்குப் புதுசுங்க!......''

மற்றவன் சிரித்தான். 'சரிதான், மனிதன் சரியான குடிவெறியில் சம்பந்தா சம்பந்தமில்லாமல் உளறுகிறான்' என்று நினைத்து விட்டான் அவன்.

''ஓ! மாமன் மகளைத் தேடிக்கிட்டுத்தான் 'அட்ரஸ்' தெரியாமல் சுத்திக்கிட்டிருந்தீங்களா...வாங்க இன்ஸ்பெக்டர் கிட்டச் சொல்லிக் கண்ணாலம் கட்டி வைக்கச் சொல்கிறேன்!''

கந்தசாமியின் பேச்சு ஒன்றும் பலிக்கவில்லை. அவன் உண்மைகளைச் சொல்லச் சொல்ல எதிராளிக்கு அவை விபரீதமான அபிப்பிராயத்தையே கொடுத்தன. மேற்கொண்டு ஏதாவது தகராறு வைத்துக் கொண்டால் 'போலீஸ் மரியாதை' நடந்து விடும் போலிருந்தது. விஷயத்தை அவ்வளவு தூரத்துக்கு முற்றவிட்டு, தன் பொன்னான உடம்பைப் புண்ணாக்கிக் கொள்ளாமல், தலையெழுத்தை நொந்தவண்ணம் அவனோடு சாயபுரம் ஸ்டேஷனை அடைந்தான்.

அந்த நேரத்தில் அந்த ஸ்டேஷன் தூங்கி வழிந்து கொண்டிருந்தது. இன்ஸ்பெக்டர் ஸ்டேஷனில் இல்லை. ஹெட் கான்ஸ்டபிளும் அப்போதுதான் வீட்டுக்குப் போனார் என்று தெரிந்தது. இரண்டொருவர் அரைத் தூக்கத்தில் இருந்தனர். தடியன் ஒருவன், ''களுதையை உள்ளே கொண்டு போய்த் தள்ளி வைப்பா! காலையிலே பார்த்துக்கலாம்!'' என்றான்.

கந்தசாமி கெஞ்சினான், கூத்தாடினான், பல்லைக் காட்டினான். ''ஐயோ! நானும் ஒரு போலீஸ்காரனாயிற்றே!'' என்று பரிதாபமாக மன்றாடினான். அவனது முறையீட்டைக் கேட்பார் இல்லை. கான்ஸ்டபிள் தடியைச் சுழற்றிக் காண்பித்தான். பாவம், சர்க்கஸ்காரனின் சாட்டையைக் கண்டு கூண்டுக்குள் ஒடுங்கும் சிங்கத்தைப் போல 'லாக்கப்' அறைக்குள் ஒடுங்கினான் கந்தசாமி. எல்லோரையும் 'ரிமாண்டில்' வைக்கப் பிறந்த போலீஸ் வீரன், தானே அதனுள் அடைபட்டான்!

அது கந்தசாமியின் வாழ்க்கையில் மறக்க முடியாத ஓர் இரவு. **(தொடரும்)**

**Printed and Published by T. Sadasivam at the Kalki Press, Kilpauk, Madras-10 for the Proprietors Messrs Bharathan Publications Private Limited Managing Editor: T. Sadasivam.**




இருபத்தோராம் அத்தியாயம்

## முருகேசன் செய்த உதவி

இரவு முழுவதும் கந்தசாமிக்குத் தூக்கம் பிடிக்கவில்லை. தூக்கம் எப்படி வரும்? மனம் 'திக்திக்'கென்று அடித்துக் கொண்டது. முனியம்மாளை நினைக்கையில் வயிறு பகீரென்றது. அந்தத் தரித்திரம் பிடித்த பெண் வீட்டுக்கு வந்த நாள் முதல் அவனுடைய துரதிர்ஷ்டங்கள் அதிகரித்து விட்டன. போயும் போயும் அவளைச் சினிமாவுக்கு அழைத்துப் போனது முட்டாள் தனம்!... உம், அதை நினைத்து வருந்தி என்ன பயன்? அவள் என்ன ஆகியிருப்பாள்? வழியை விசாரித்துக் கொண்டு வீட்டுக்குப் போயிருப்பாளா, அல்லது யார் கையிலாவது சிக்கிக் கொண்டிருப்பாளா? பொல்லாத பட்டணம் ஆயிற்றே இது.

காலை சுமார் ஏழரை மணிக்கெல்லாம் ஸ்டேஷன் முன்புறத்து ஹால் கலகலப்படையத் தொடங்கியது. இரவு 'டியூடி'க்காரர்களை விடுவிக்கப் பகல் 'டியூடி' ஆசாமிகள் ஒவ்வொருவராக வந்து கொண்டிருந்தனர்.

''ஏய், த்ரீ நாட் ஒன்! நாலாவது நம்பர் அறையிலே இருக்கிற களுதையை இப்படி இளுத்துக்கிட்டு வா!'' என்று தமது பரிபாஷையில் உத்தர விட்டார் ஹெட்கான்ஸ்டபிள்.

இந்தக் குரலைக் கந்தசாமி இதற்கு முன் எங்கே கேட்டிருக்கிறான்? தாழ்வாரத்தில் பூட்ஸ் சத்தம் கேட்டது. கந்தசாமி எழுந்து நின்றான்.

ஒரு போலீஸ் வீரன் அவனது அறையின் கம்பிக் கதவைத் திறந்து அவனை இழுத்துக்கொண்டு போய் ரைட்டரின் முன்பாக நிறுத்தினான். கந்தசாமியின் கண்கள் ஆச்சரியத்தினால் மலர்ந்தன. அவனது மனத்தில் சந்தோஷம் கரை புரண்டு ஓடியது.

''ராமசாமி அண்ணே?...''

''யாரு?......கந்தசாமி?... நீயா?...நீ எப்படி இங்கே வந்து மாட்டிக்கிட்டே?''

கந்தசாமி அழமாட்டாக் குறையாக முன்னிரவு நடந்த சம்பவங்களை அவனிடம் விவரமாகக் கூறி எப்படியாவது தான் லாக்கப்பில் அடைபட்டிருந்த விஷயம் வெளிக்கு வராமல் தனது மானத்தைக் காப்பாற்றும்படி கெஞ்சினான். ராமசாமிக்கு அவனது கதையைக் கேட்க ஒருபுறம் இரக்கமாக இருந்த போதிலும் மற்றொருபுறம் சிரிப்பும் வந்தது.



''கந்தசாமி! இது என்ன முட்டாள்தனம்? நீயோ டியூடியிலேயும் இல்லை. உனது பேட்டையிலேயும் இல்லை. அப்படியிருக்க ஏன் இந்த மாதிரி முட்டாள் தனம் பண்ணணும்?...உம்!... சேச்சேச்சே! நீ கிட்ட வருகிற போதே நாற்றமா யிருக்கு.''

''முட்டாள்தனம்தான், அண்ணே! போதாத வேளை!.........எனக்கு இந்த உத்தியோகத்து மேலேயே வெறுத்துப் போச்சு! நாளைக்கே ராஜிநாமா செய்து விட நிச்சயம் பண்ணிட்டேனுங்க!''

''சரி, சரி! பிறகு பேசிக் கொள்ள லாம். இப்போது இன்ஸ்பெக்டர் வர நேரமாச்சு! அதற்கு முந்தி போய்ச் சேர்!'' என்றான் ராமசாமி.

கந்தசாமி தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு வெளியே வந்தான். ராமசாமியும் பரிவோடு சிறிது தூரம் அவன் கூடவே நடந்து வந்தான்.



''அண்ணே! தயவுபண்ணி இந்த வெட்கக் கேட்டை வெளியே யாரிடமும் சொல்லிப் பிடாதீங்க!''

''அதெல்லாம் பயப்படாதே, கந்தசாமி! இனிமேலாவது ஜாக்கிரதையாக நடந்துக்கோ! அநாவசியமாக வேலையை விட வேண்டாம். கொஞ்சம் உஷாராயிருந்து பல்லைக் கடித்துக் கொண்டு ஒரு வருஷம் சமாளிச்சுட்டா அப்புறம் நீயே நாலு பேருக்கு வாத்தியாராயிடுவே'' என்று புத்திமதி சொல்லியனுப்பினான் அவர்.

* * *

**அ**வன் வீடு வந்து சேர்ந்த போது மணி சுமார் ஒன்பது இருக்கும். வெய்யில் நன்றாக ஏறிவிட்டது. முதலில் குளித்து விட்டுத்தான் முனியம்மாளைத் தேடுவதற்குப் போக வேண்டும். முத்தம்மாள் கேட்டால் ''இரவு வெகு நேரமாகி விட்டது. முனியம்மாளை வழியில் முருகேசன் வீட்டில் விட்டிருக்கிறேன். முருகேசனின் தாயார் அவளைச் சாயந்திரம் தான் அனுப்புவேன் என்றாள்!'' என்று ஏதாவது புளுக வேண்டும் என்றதீர்மானத்துடன் உள்ளே நுழைந்தான் அவன்.



முற்றத்திலே அவன் கண்ட காட்சி அவனைத் திகைக்க வைத்தது. அவனால் தனது கண்களையே நம்ப முடியவில்லை. அங்கு முனியம்மாள் தலை குனிந்த வண்ணம் துணிகளுக்குச் சோப்புப் போட்டுக் கொண்டிருந்தாள். கந்தசாமியைக் கண்டதும் ஒருமுறை அவனை நிமிர்ந்து பார்த்துப் புன்னகை செய்து விட்டு மீண்டும் தலையைக் குனிந்து கொண்டாள்.

கந்தசாமி நேராகக் கிணற்றடிக்குச் சென்று தனது ஆடைகளைக் கழற்றி நனைத்துப் போட்டு விட்டு ஸ்நானம் செய்தான். அவனுக்கு ஒரே அதிர்ச்சியாக இருந்தது. முனியம்மாள் எப்படி வந்து சேர்ந்தாள்? முத்தம்மாளிடம் என்னவெல்லாம் சொல்லிவிட்டாளோ? மேற்கொண்டு என்ன ரகளை நடக்கப் போகிறதோ? என்றெல்லாம் சிந்தித்துக் கொண்டே சட்டையை மாட்டிக் கொண்டான். ஆனால் முத்தம்மாளோ, முனியம்மாளோ ஒன்றுமே நடவாதது போல் சாதாரணமாக இருந்ததைக் காண அவனுக்கு ஆச்சரியமாயிருந்தது.

''முனியம்மா, அத்தானுக்குப் பலகாரம் கொண்டு போய்க் கொடு'' என்றாள் அவனது அருமை அக்கா.

அவர்களாக ஒன்றும் கேட்காத வரையில் அனாவசியமாக விஷயங்களைக் கிளறிக் கேட்டு வீண் வம்பை வரவழைத்துக் கொள்ள அவன் விரும்பவில்லை. 'சரி, தொலைகிறது. எப்படியோ வந்து சேர்ந்து விட்டாள்! எப்படி என்பது மெதுவாகத் தெரியட்டும். இப்போது பேசாமல் வெளியே போய் விட வேண்டும்' என்று தீர்மானித்துக் கொண்டே முனியம்மாள் கொண்டு வந்த பலகாரத்தைத் தின்றுவிட்டு அவசரம் அவசரமாக வெளியே கிளம்பினான்.

தெருக்கோடியில் முருகேசன் நின்று கொண்டிருந்தான்.

"வாப்பா, கந்தசாமி! சரியான ஆண்பிள்ளையப்பா நீ!"

கந்தசாமி ஒரு விஷயமும் புரியாமல் திகைத்து நின்முன்.

"ராத்திரி அந்தப் பெண்ணை அப்படியா தன்னந்தனியாக விட்டுவிட்டு ஓடுவாங்க?" என்முன் முருகேசன். கந்தசாமிக்கு ஒரே குழப்பம். ஒன்று போனுல் ஒன்று; ஆச்சரியத்துக்கு மேல் ஆச்சரியமாக அல்லவா இருக்கிறது!

"உனக்கு எப்படித் தெரியும்?" என்று கேட்டான் கந்தசாமி. முருகேசன் கூறிய விவரங்கள் அவனது வியப்பை அதிகரிக்கச் செய்தன.

புதிய இன்ஸ்பெக்டர் பூவராகத்தின் மைத்துனர் விட்டில் அன்று ஏதோ விசேஷம். அவர் முருகேசனையும் வேலப்பனையும் அங்கு உதவிக்கு அனுப்பியிருந்தார். வேலப்பன் இரவு பத்து மணிக்கெல்லாம் நழுவி விட்டான். முருகேசன் மாத்திரம் கடைசி வரையில் இருந்து தன்னுடைய சாப்பாட்டையும் முடித்துக் கொண்டு புறப்பட்டான். அப்போது இரவு மணி சுமார் பன்னிரண்டரை இருக்கும்.



வழியில் ஒரு வெற்றிலைப் பாக்குக் கடைக் காரனிடம் பேசிக் கொண்டிருந்து விட்டு மெதுவாக நடந்து பெரிய ரஸ்தாவுக்கு வந்த போது மாதாகோவில் கடிகாரத்தில் மணி ஒன்று அடித்தது. குறுக்குச் சந்தில் வீட்டை நோக்கி நடந்தான். திடீரென்று யாரோ தேம்பித் தேம்பி அழுவது போலிருந்தது. அவன் திடுக்கிட்டு நின்முன். சந்து முனையில் ஒரு பெண் நின்று கொண்டு சுற்றும் முற்றும் பார்த்து, "அத்தான்! அத்தான்!" என்று பரிதாபமாகக் கூப்பிட்டுக் கொண்டிருந்ததைக் கேட்டு அவனது மனம் கரைந்து விட்டது. அருகில் சென்று பார்த்தால் முனியம்மாள் நின்றுகொண்டிருப்பது தெரிந்தது.

"கடவுள்தான் என்னை அந்த நேரத்தில் அங்கே கொண்டுபோய்ச் சேர்த்





தார். நான்மட்டும் போகலேன்னு அதன் கதி என்ன ஆகியிருக்குமோ! சேச்சே! நீ பண்ணின கூத்தைச் சொல்லி அது அழுதபோது என் மனசு கெட்டே போச்சு. தங்கமான பொண்ணு! அதைச் சந்தியிலே தவிக்க விட்டுட்டு அப்படி யாரைத் துரத்திக்கிட்டுப் போனே!'' என்று முடித்தான் முருகேசன்.

''அது ஒரு மதுவிலக்கு கேஸப்பா!''

''நல்ல கேசு! வீட்டிலே பெண் பிள்ளைகளை அழைச்சுப் போகிறப்பவா இந்த ஏழைவை யெல்லாம் தலையிலே போட்டுக் கொள்ளுவாங்க! என்ன ஆச்சு உன் கேஸ்! அதையாவது பிடிச்சியா அல்லது...''

''ஹூம்! பிடிக்காமல் விடுவேனு! களுதையைப் பிடித்துச் சாயபுரம் ஸ்டேஷனிலே ஒப்புக் குடுத்துட்டு வந்தேன்... ஆமா, இந்த முனியம்மா என்ன பச்சைக் குழந்தையா! ஆளைப் பிடிச் சுட்டு வர்றேன், ஒரு அஞ்சு நிமிஷம் நில்லுடீன்னு சொன்னு நிற்க வேண்டியதுதானே?...அதுக்குப் போய் அழுவானேன். கேடு...''

''நல்ல கதையா இருக்குதே!...பாதி ராத்திரியிலே தன்னந்தனியா ஒரு பெண் பிள்ளையை நடுச்சந்தியிலே...''

''அட நீ ஒண்ணு! சும்மா நடுச்சந்தி, நடுச் சந்திங்கறயே! மேல் நாட்டிலே போய்ப் பாரு, ஒவ்வொரு பெண்பிள்ளையும் எவ்வளவு தைரியசாலியாக...''

''இப்ப நீ மேல் நாட்டிலே இருக்கிறப் போலே எண்ணமோ!''

தன்மீது தவறு என்று காண்பித்துக் கொள்ளக் கூடாது என்ற எண்ணத்துடன் கந்தசாமி ஒப்புக்குச் சமாதானம் கூறினனேயொழிய உள்ளூற அவனது தவறு அவனை உறுத்திக் கொண்டுதான் இருந்தது. ஒருகால் இவனும் முனியம்மாளும் சேர்ந்து முத்தம்மாளிடம் குட்டை உடைத்து விட்டிருப்பார்களோ, என்னவோ!

''ஆமாம்! அப்புறம் என்ன ஆச்சு! முனியம்மாளிடம் பேச்சுக் குடுத்தாயா? நான் உன்னைப்பற்றி அவளிடம் பலமாகச் சிபார்சு செய்திருக்கேனப்பா!''

முருகேசன் சிரித்துக் கொண்டே கூறினன்: ''சொல்லிச்சு! அதைச் சொன்ன பிறகுதான் எனக்கு உன்மேலே வந்த ஆத்திரம் தணிஞ்சுது!''

''அப்புறம் என்ன பண்ணினீங்க!''

''என்ன பண்ணுவாங்க, நேராகக் கொண்டுபோய் உங்க வீட்டிலே...''

''அட, அதைக் கேட்கவில்லையப்பா! எங்க அக்கா ஏதாச்சும் கேட்டிருப்பாங்களே! அதைச் சொல்லு!''

''பயப்படாதே, கந்தசாமி! அதெல்லாம் சரிப்படுத்தி விட்டேன். 'கந்தசாமியை வழியில் பார்த்தேன். அவசரமா ஒரு கேஸ் விஷயமாகப் போயிருக்கிறன். முனியம்மாளை அழைச்சுக்கிட்டுப் போய் வீட்டிலே விட்டு விடு என்று என்னிடம் கேட்டுக் கொண்டான்!' என்று ஒரு போடு போட்டு வைச்சேன்!''

''சபாஷ்! நீ பலே சாமர்த்தியக்காரன், முருகேசா! நீ செய்த உதவியை மறக்கவே மாட்டேன். அந்த முனியம்மாளைக் கல்யாணம் பண்ணிக்கிட்டு நீ மகராசனுக இருக்கணும். இன்னும் இரண்டு நாளில் ஊருக்குப் போகிறேன். அப்போ மாமாவிடம் நானே உன்னைப் பற்றிச் சொல்லுகிறேன்!'' என்று அவனை வாயார வாழ்த்தி விடை பெற்றுக் கொண்டான் கந்தசாமி.

## இருபத்திரண்டாம் அத்தியாயம்

# சிங்காரக் கன்னி சேர்வாள்

**ப**னம்பழப்பட்டில் ஓரிரண்டு தினங்கள் வரை தங்கி மாமன் தருமலிங்கத்திடம் பேச்சுக் கொடுத்து முனியம்மா பிரச்னைக்கு ஒரு முடிவு காண வேண்டும். அதன் பிறகு இந்தத் தங்கவேலுப் பயலை எப்படியாவது தேடிக் கண்டு பிடிக்க முயற்சி செய்ய வேண்டும். இவ் விஷயத்தில் ராமசாமி அண்ணனும், முருகேசனும் தனக்கு உதவி செய்யக் கூடும். அநேகமாக அவன் இந்தச் சென்னைப் பட்டணத்திலேயேதான் எங்கேயாவது சுற்றிக் கொண்டிருப்பான். கடவுள் அருளால் கண்ணம்மாளின் பணம் மட்டும் திரும்பக் கிடைத்து விட்டதென்றல் சிங்காரியை அவள் தனக்குக் கொடுக்கத் துளிக்கூட ஆட்சேபணை சொல்ல மாட்டாள். இப்போதே அவளுக்குத் தன்னிடம் அளவற்ற மதிப்பு ஏற்பட்டு விட்டது......

நேராக முத்துப்பிள்ளையின் வீட்டுக்குச் சென்றன். அவன் போன சமயத்தில் வீட்டு வராந்தாவில் புலவர், கண்ணம்மாள், சிங்காரி ஆகிய மூவருமே நின்று கொண்டிருந்தனர். குருவி சோதிடக்காரர் ஒருவர் ஒரு அட்டையைப் பார்த்து ஏதோ படித்து ஆருடம் சொல்லிக் கொண்டிருந்தார்.

அவனைக் கண்டதும் கண்ணம்மாள், ''ஒதுங்குங்க! போலீஸ் கந்தசாமி வருது!'' என்று அவனை வரவேற்றாள்.

''வாங்க, வாங்க சரியான நேரத்துக்கு வந்தீங்க, இப்பத்தான் களவு போனதைப் பற்றி ஜோஸ்யம் கேட்டுக்கிட்டிருக்கிறோம். இழந்து போன பொருள் கூடிய சீக்கிரம் கிடைச்சுடும் என்கிறார் ஜோஸியர். அதுவும் ஒரு நண்பரின் உதவியால்தான் கிடைக்கும் என்று ஆரூடம் சொல்லுது'' என்றாள்.

நெற்றியில் பட்டை பட்டையான விபூதியுடனும் அகலமான குங்குமப் பொட்டுடனும் காட்சியளித்த அந்த வயோதிக சோதிடக்காரர், கந்தசாமியைப் பார்த்ததும் மரியாதையாக எழுந்து நின்று சலாம் போட்டார்.

அவரது குருவிக் கூண்டில் பச்சையும் மஞ்சளுமாக அவன் அதுவரையில் பார்த்திராத அபூர்வ ஜாதிக் குருவிகள் இரண்டு இருந்தன.

''இது என்ன ஜோஸ்யமுங்க?'' என்று கேட்டான் கந்தசாமி.

''பச்சோந்தி முனிவர் பஞ்சபட்சி சாஸ்திரமப்பா! புலிப்பாணி ஜோஸியம், கைரேகை சாஸ்திரம் எல்லாம் கூடத் தெரியும். எதோ உன் கையை நீட்டு, பார்க்கலாம்!'' என்றார்.

கந்தசாமி கையை நீட்டினான். ஜோஸ்யர் அதைத் திருப்பித் திருப்பிப் பார்த்தார். ''இது ஆளப் பிறந்த கை! மக்களை அடக்கப் பொறந்த கை!'' என்றார்.

''நல்லாப் பார்த்துச் சொல்லுங்க, கஷ்ட காலம் எப்போ தொலைந்து போகும் என்று!''

ஜோஸ்யர் ஒரு பலகையை எடுத்துக் கோடுகள் கிழித்து ஒருவருக்கும் புரியாத லிபியில் என்னென்னவோ எழுதினார்.

''உனக்கு இப்போது கொஞ்சம் போதாத காலம்!''

''ஆமா! காரியம் எதுவும்......''

''ஆமாம் ...... எதுவும் திருப்தியாக நிறைவேறுது! மனத்திலே கூடக் கவலை இருக்கணுமே!''

''கொஞ்சமா நஞ்சமா? எவ்வளவோ கவலைங்க!''

''இரு இரு!...ஏதாவது குறை......''

''நல்லாச் சொன்னீங்க! பெரிய குறை ஒண்ணு இருக்குதுங்க!'' என்று கூறிச் கொண்டே சிங்காரி இருந்த பக்கம் திரும்பினான்.

''அப்படியானால் இரு. அதுக்குப் பட்சி சாஸ்திரத்திலேதான் பதில் கிடைக்கும்'' என்று குருவிக் கூண்டைத் திறந்தார். அதிலிருந்து பச்சைக் குருவி தத்தித் தத்திக் கொண்டு வெளியே வந்து, எதிரே வரிசையாக வைக்கப்பட்டிருந்த அட்டைகளில் ஒன்றை அலகினால் கொத்தி இழுத்தது. ஜோஸ்யக்காரர் அந்த அட்டையைக் கையில் எடுத்தார். அதில் ஏதோ சோதிடப் புத்தகத்திலிருந்து ஒருபக்கம் ஒட்டப்பட்டிருந்தது.

''சபாஷ்! எண்பத்தி எட்டாம் நம்பர் பாடம் வந்திருக்குது. படிக்கிறேன் சரியாக இருக்குதா பார்த்துக் கொள்ளுங்கோ!

''என்பத்து எட்டென்ப தீரெட்டாகும்,
என்னமெலாம் ஈடேறும் இனிதாகத்தான்,
கன்பத்தும் கரமெட்டும் கொண்டாளந்தக்
காளியவள் கருணையினல் கவலைநீங்கும்
வெண்கொற்றக் குடையுடையவேந்தர் தம்மின்
வெகுமானம் பெற்றிடுவாய் வெற்றிகிட்டும்,
கண்பெற்ற மனிதரெலாம் கண்டே மெச்சக்
களிப்புண்டாம் சிங்காரக் கன்னி சேர்வாள்!''

கந்தசாமி ஒரு துள்ளுத் துள்ளினான்.

''என்ன என்ன!...''

''உனக்குப் பெரிய அதிர்ஷ்டம் வரப் போகுது. அரசாங்க வெகுமானம் கிடைக்கும். அழகானமனைவிவருவாள்!''

''கடைசி வரியிலே என்னவோ சொன்னீங்களே, அதை ஒரு தடவை திரும்பச் சொல்லுங்களேன்!''

''களிப்புண்டாம். சிங்காரக் கன்னி சேர்வாள்!'' என்றார் ஜோஸ்யர்.

சிங்காரி லஜ்ஜையுடன் கதவு இடுக்கில் ஒளிந்து கொண்டாள். கந்தசாமி கண்ணம்மாளின் முகத்தை உற்றுப் பார்த்தான்.

''ஹூம்! அப்படித்தான் போட்டிருக்குதோ என்னவோ!...முதலிலே ஜோஸ்யக்காரரு சொன்னமாதிரி என் பணம் கிடைச்சுப் போச்சுன்னு உடனே இதையும் அவர் வாக்குப்பிரகாரமே நடத்திவிடலாம்!'' என்றாள் அவள்.

கந்தசாமி முழுசாக ஒரு ரூபாயை ஜோஸ்யக்காரர் கையில் மகிழ்ச்சியோடு கொடுத்து அனுப்பினான்.

**சோ**திடர் போன பிறகு கண்ணம்மாள் கந்தசாமியிடம் இன்ஸ்பெக்டர் வந்து விசாரித்ததைப் பற்றியும் அவருக்குத் தாங்கள் கூறிய விவரங்களையும் விஸ்தரித்துக் கூறினாள். கந்தசாமி கவனமாகக் கேட்டுக் கொண்டிருந்துவிட்டு, ''அதெல்லாம் நான் இன்ஸ்பெக்டரின் 'ரிகார்டை'ப் பார்த்து முன்னமேயே தெரிந்து கொண்டேன். நீங்க ஒண்ணுக்கும் கவலைப்பட வேண்டாம். இந்த விஷயமாக எனக்கு ஒரு முக்கியமான தடையம் கிடைத்திருக்குது. அது சம்பந்தமாக நாளைக்கோ, மறுநாளோ நான் வெளியூருக்குப் போவேன். மறுபடியும் வருவதற்கு நாலு நாட்கள் ஆகும். யாரிடமும் சொல்ல வேண்டாம்'' என்று ஆறுதல் கூறிவிட்டு அங்கிருந்து புறப்பட்டான். (தொடரும்)

**Printed and Published by T. Sadasivam at the Kalki Press, Kilpauk, Madras-10 for the Proprietors Messrs Bharathan Publications Private Limited**
**Managing Editor: T. Sadasivam**

# கான்ஸ்டபிள் கந்தசாமி

## இருபத்திமூன்றாம் அத்தியாயம்

### பனம்பழப்பட்டி

முனியம்மாளை ஊருக்கு அனுப்புவதறகாகத் தின்பண்டங்கள் தயாரிப்பதில் ஈடுபட்டிருந்த முத்தம்மாள் பக்கத்து வீட்டில் ஏதோ பலமான பேச்சு கேட்கவே கை வேலையை அப்படியே விட்டு விட்டுக் கூடத்துக்கு வந்தாள். தெருப் பக்கத்திலிருந்து ஓடி வந்த முனியம்மாளின் முகத்தில் மகிழ்ச்சி தாண்டவமாடிக் கொண்டிருந்தது.

''பக்கத்து வீட்டிலே போலீஸ்காரங்க வந்திருக்காங்க! மருதம்மாளை மிரட்டி மிரட்டி என்னென்னவோ கேள்வி கேட்கிறாங்க. அந்தம்மா முழிக்குதே பார்க்கணும்!'' என்றாள்.

முத்தம்மாளின் வயிற்றில் பாலை வார்த்தது போலிருந்தது. தன் தம்பியின் திட்டம் வேலை செய்கிறது போலும் என்று நினைத்து அவளது உள்ளம் குளிர்ந்தது.

''இன்ஸ்பெக்டரோடு அவங்களும் வந்திருக்காங்க!''

''எவங்க! உன்னுடைய அத்தானைப்பற்றித்தானே சொல்கிறாய்?''

''இல்லை! இங்கே அத்தானைத் தேடிக்கிட்டு வருவாரே!''

''முருகேசனைச் சொல்கிறாயா?''

''ஆமாம்! அவருதான்!''



மருதம்மாளின் வீடு முழுதும் சோதனை போடப்பட்டது. இன்ஸ்பெக்டர் பூவராகம் கண்களை உருட்டி உருட்டிக் கேள்விகள் கேட்ட போது அவள் பாடு வியர்த்து விருவிருத்துப் போய் விட்டது.

''தங்கவேலு எனக்கு அண்ணன் மகன் இல்லைங்க! எங்க அண்ணாருக்குத் தெரிஞ்சவங்க மகன். அண்ணார் இறந்து ரொம்பக் காலமாச்சு! தங்கவேலு எங்கே இருக்கிறான், என்ன பண்ணுகிறான் என்று எனக்குச் சத்தியமாகத் தெரியாதுங்க. எப்போதாவது வந்தால் ஏழெட்டு நாட்கள் 'அத்தை! அத்தை!' என்று உறவு கொண்டாடிக்கிட்டுத் தண்டச் சோறு தின்னுட்டுத் திரும்பிப் போவானுங்க.

''இந்தத் தடவை அவன் வெளியேபோய் இரண்டு நாளாச்சு. திரும்பி வரவில்லை. என் உண்டிப் பெட்டியிலே போட்டிருந்த



ஏ. கே. பட்டுசாமி

இருபத்தேழு ரூபாயைக் கூடக் காணே லுங்க!'' என்று பிரலாபித்தாள்.

''உண்மையைச் சொல்லுகிறுயா, பிடிச்சு 'லாக்கப்'பிலே தள்ளி உதைக்க வேணுமா?'' என்று பயமுறுத்தினர் இன்ஸ்பெக்டர் பூவராகம்.

''எனக்குச் சத்தியமாகத் தெரியா துங்க! நான் எந்தத் தட்புத்தண்டாவுக் கும் போகவே மாட்டேன். என் வேலை உண்டு, நான் உண்டு; நம்ப பக்கத்து வீட்டுப் போலீஸ்காரர் இருக்கிருரே, அவங்க வீட்டிலே வேணுமானுலும் என் னைப பற்றிக் கேட்டுப் பாருங்க!''

பூவராகம், முருகேசனைப் பார்த்தார்.

''பக்கத்து வீட்டிலே இருப்பது நம்ப கந்தசாமி ஸார்!'' என்ருன் முருகேசன்.

''இதோ பார் மருதம்மா! உனக்கு இருபத்தி நாலு மணி நேரம் அவகாசம் கொடுக்கிறேன். அதற்குள்ளே உண்மையை நீ சொல்லி விடு! இல்லையென்ருல் அப்புறம் நடப்பதை அனுபவிக்க வேண்டியதுதான்! நீ எங்கேயும் ஓடிவிட முடியாது! உன்னைப் போலீஸ்காரர்கள் கண்காணித்துக் கொண்டே இருப்பார்கள்!'' என்று எச்சரித்துவிட்டு அங்கிருந்து புறப்பட்டார் இன்ஸ்பெக்டர்.

போலீஸ்காரர்கள் போனதுமே மருதம்மாள் தலைவிரிகோலமாக முத்தம்மாளின் வீட்டுக்கு ஓடி வந்தாள்.

''அக்கா ஆ!...... நீதான் என்னைக் காப்பாத்தணும், அக்கா ஆ!'' என்று ஒரேயடியாகக் கதறிக் கொண்டே அவளது காலடியில் விழுந்தாள்.

முத்தம்மாளுக்கு மருதத்திடம் எவ்வளவோ வஞ்சம்தான். அவளது கர்வத்தை அடக்க வேண்டுமென்று அது வரையில் அவள் துடித்துக் கொண்டு தான் இருந்தாள். ஆனுல் இப்போது அதே மருதம்மாள், நிலைகுலைந்து கர்வமடங்கி ஆணவம் ஒடுங்கி, பரிதாபமாகக் கதறிச் 'சரணுகதி' என்று அவளது காலில் விழுந்ததும் அவளது மனம் மெழுகுபோல் உருகி விட்டது. 'அக்கா!' என்று அவள் அழைத்தது ஒன்றே அவளது உள்ளத்தில் சகோதர உணர்ச்சியைத் தூண்டி விட்டது. தரையில் வேரோடு



பிடுங்கி எறியப்பட்ட செடி போலச் சாய்ந்து கிடந்த அவளைத் தன் இரு கரங்களாலும் அப்படியே தூக்கித் தனது மார்போடு தழுவிக் கொண்டாள்.

''மருதம், அழுவாதே!...... நான் இருக்கிறவரைக்கும் நீ எதற்கும் பயப் படவேணும். தப்பி வரட்டும், அதுங் கிட்ட சொல்லி......'' என்று அவளைத் தேற்றிக் கொண்டிருக்கையிலேயே கந்தசாமி வாசற்படியில் வந்து நின்ருன்.

ஜன்ம விரோதிகள் இருவரும் ஆலிங் கனத்திலிருந்ததைக் கண்டு இது கனவா

நனவா என்று புரியாமல் விழித்தான் கந்தசாமி. மருதம்மாள் தன் தோழியின் பிடியிலிருந்து விலகித் தலை குனிந்து நின்றாள். முத்தம்மாள் ''தம்பி! நம்ப மருதம்மா வந்து......'' என்று இழுத்தாள்.

''இப்பத்தான் இன்ஸ்பெக்டரைப் பார்த்தேன். எனக்கு எல்லாச் சமாசாரமும் தெரியும். ஆனால் உனக்கு இப்பவே சொல்லி விட்டேன். அக்கா! என் உத்தியோக விஷயத்திலே மாத்திரம் நீ தலையைக் கொடுக்காதே! ஆமாம், நான் ரொம்பக் கண்டிப்புக்காரன்!''

''சே, பாவம்! கண்ணீர்விட்டு அழுவுதுடா தம்பி!''

''என்ன அக்கா நீ! நான் இங்கு வந்த அன்றைக்கு அந்தத் திருட்டுப் பயலும் இந்த அம்மாளுமா சேர்ந்துக்கிட்டு என்ன குதிகுதிச்சாங்க!''

மருதம்மாள் அவனைத் தீனமாக ஏறிட்டுப் பார்த்தாள்.

''நான் சொன்னதையெல்லாம் மறந்து என்னை மன்னிச்சுடு, தம்பி! எப்படியாவது பெரிய மனசு பண்ணி...''

''ஆமாம், இப்பத்தான் பெரிய மனசு, சின்ன மனசு எல்லாம் தெரியுது! காரியம் ஆகணும்னா காலைப் பிடிக்க வருவீங்க! இல்லேன்னா மென்னியைப் பிடிச்சு நெவீங்க...சேச்சேச்சே! பொழுது விடிஞ்சால், பொழுது போனால் எத்தனை எத்தனை சிபாரிசு, தாட்சிண்யம்!'' என்று அலுத்துக் கொண்டான் அவன்.

முத்தம்மாள் மருதத்திடம் ''நான் கவனித்துக் கொள்கிறேன், பயப்படாமல் போ!'' என்று ஜாடை காட்டி நம்பிக்கையூட்டி அனுப்பினாள்.

அவள் போனபிறகு கந்தசாமி தன் அக்காளை நோக்கிப் பெருமையோடு, ''என்ன அக்கா, இப்ப என்ன சொல்றே! நம்ம திட்டம் எப்படி வேலை செய்யுது பார்த்தியா?'' என்று கேட்டான்.

முத்தம்மாள் இரண்டு கைகளாலும் கந்தசாமியின் கன்னங்களை அன்போடு தொட்டுத் திருஷ்டி கழித்தாள்.



பனம்பழப்பட்டி ஒரு சின்னஞ்சிறிய கிராமம். மொத்தம் சுமார் நாற்பது ஐம்பது கூரை வீடுகளும் முப்பது நாற்பது குடிசைகளும்தான் இருந்தன. எத்தனையோ கிராமங்கள் காலவேகத்தில் புது மெருகு பெற்றுவிட்டபோதிலும், பனம்பழப்பட்டி இருபது முப்பது ஆண்டுகளுக்கு முன்னால் எப்படி இருந்ததோ, அந்த நிலையை விட்டு ஒரு அங்குலம்கூட அசையாமல் இருந்தது. திண்ணைப் பள்ளி, படிப்பு வாசனையும் நாகரிகமுமற்ற மனிதர்கள், புழுதி நிறைந்த குண்டும் குழியுமான வீதி, ஜீர்ணோத்தாரணம் செய்வாரின்றி ஜீரணமாகிக் கொண்டே வந்த சிவன்கோயில் ஆகிய இவற்றில் எவ்வித அபிவிருத்தியும் ஏற்படவில்லை. அதற்கு நேர்மாறாக நாளுக்கு நாள் அவற்றின் நிலைமை மோசமாகிக் கொண்டே வந்தது. கிராமத்திலிருந்தவர்களில் பலர், பல காரணங்களினால் நகரங்களில் சென்று குடியேறி விட்டதால் அவர்களது வீடுகள் கவனிப்பாரின்றிச் சிதிலமாகிக் கொண்டே வந்து, காலக்கிரமத்தில் வீதியில் இடையிடையே குட்டிச் சுவர்களும் பாழ்மனைகளும் காட்சியளிக்கத் தொடங்கின.

ஊருக்குச் சுமார் மூன்று கல் தூரத்தில் பஸ்கள் ஓடும் பெரிய ராஜபாட்டை இருந்தது. பஸ்ஸிலிருந்து வழியில் இறங்கி வயல்வெளிகளைக் கடந்து வந்தால் கிராமத்தையடையலாம்.

கந்தசாமி பனம்பழப்பட்டிக்குப் புறப்பட்டபோது மறக்காமல் தனது போலீஸ் உடையை மூட்டையாகக் கட்டி எடுத்துக் கொண்டுதான் வந்தான். பஸ்ஸை விட்டு இறங்கிக் கிராமத்தில் புகுந்ததும், போலீஸ் உடையை எடுத்து மாட்டிக்

கொண்டான். 'ஆள் பாதி ஆடம்பரம் பாதி' என்பதைப் போல் ஆடம்பரம் இருந்தால்தான் இந்தக் கிராமவாசிகள் ஆளை மதிப்பார்கள் என்று அபிப்பிராயப்பட்டான் அவன்.

அவன் எண்ணியது சரியாகத்தான் இருந்தது. அந்தப் பட்டிக்காட்டு மக்களுக்கு, பட்டணத்து 'தாணுக்காரஜவா'னைப் பார்த்ததும் ஏற்பட்ட ஆச்சரியத்துக்கு அளவில்லை. அவனது உடையையும் ராஜநடையையும் கண்டு அவர்கள் மலைத்து நின்றனர்.

அவன் வீதியில் நுழையும் போதே கோவிலருகில் கில்லி விளையாடிக் கொண்டிருந்த சிறுவர்கள் தங்கள் விளையாட்டை மறந்து, காட்சிச்சாலைக்குப் புதிதாக வந்துள்ள ஒரு விசித்திர மிருகத்தைப் பார்ப்பது போல் திறந்த வாயை மூடாமல் அவனைப் பயத்தோடு வேடிக்கை பார்த்துக் கொண்டே பின்னல் வந்ததைக் கண்டு அவனுக்குப் பரம திருப்தியாக இருந்தது. கழுத்தில் கலப்பையை மாட்டிக் கொண்டு வயலுக்குச் செல்லும் குடியானவனைப் பார்த்து அவன், தனக்கே உரித்தான தோரணையில் ''ஏய்!'' என்று சும்மா கூப்பிட்டால் கூட அவன் அஞ்சி நின்று விழித்ததைக் காண அவனது புஜங்கள் பூரித்துப் போயின.

ஸ்திரீகள் அவனைச் சுட்டிக் காட்டிக் கசமுச வென்று காதோடு ரகசியம் பேசிக் கொண்டனர். எல்லாம் இந்த உடுப்பு பண்ணுகிற வேலை! அந்தக் கிராமம் முழுவதுமே அவனை ஒரு ஏக சக்ராதிபதியாக நினைத்துக் கொண்டு, ஒரு பயங் கலந்த மரியாதையை யல்லவா செலுத்தியது!......

இந்தச் சர்க்காரும்தான் என்னென்னவோ பண்ணுகிறது! இதைப்போன்ற கிராமத்தில் ஒரு சிறிய போலீஸ் ஸ்டேஷனை ஏற்படுத்தி அதை அவனிடம் ஒப்படைத்து விட்டால் எவ்வளவு நன்றாக இருக்கும்?

**மா**லை மூன்று மணியிருக்கும். வீதித் திண்ணையில் தருமலிங்கம் தமது நண்பர்களோடு உட்கார்ந்து சீட்டாடிக்கொண்டிருந்தார். கந்தசாமிக்குப் பொழுது போகவில்லை. அவனோடு பேச அவனுக்குச் சமதையானவர்கள் யாருமே கிடைக்கவில்லை.

''மாமா, இந்த ஊரிலே போலீஸ் ஸ்டேஷன் ஏன வைக்கவில்லை?''

சீட்டுத் துருப்பை எடுத்து ஓங்கி டைமண்ட் ஜாக்கியின் மண்டையில் அடித்துக் கொண்டே, ''இது கிராம மாச்சே தம்பி!'' என்று பதில் கூறினார்.

''எங்க ஊருக்கு எதுக்கு போலீஸ் ஸ்டேஷன்!'' என்றார், 'ஆஸை'ப் போட்டு மேல் வெட்டு வெட்டலாமா வேண்டாமா என்று யோசித்துக் கொண்டிருந்த மற்றொருவர்.

''சட்! சுத்தப் பட்டிக்காடு! ஊருக்கு லட்சணமா ஒரு கொலையா, களவா, பிக்பாக்கெட்டா, சண்டையா ஒண்ணு கிடையாது இங்கே!......''

திண்ணையில் உட்கார்ந்திருந்தவர்கள் அவனை ஒருவிதமாகப் பார்த்தார்கள். அவனது முகத்தைப் பார்த்துக் கொண்டே 'கிளாவரு'க்குப் பதில் 'இஸ்பேட்'டைத் தவறாக இறக்கிவிட்டார் ஒருவர்.

அவ்வளவுதான்! அவருக்குப் பக்கத்தில் இருந்தவர், ''தப்பாட்டம்! தப்பாட்டம்! கையிலே 'கிளாவர்' வைச்சுண்டே 'இஸ்பேட்'டை இறக்கறுன்!'' என்று குடியே முழுகி விட்டது போல் வீதியே அதிரும்படி கத்தினார்.

''நீ ஏனய்யா! என் சீட்டைப் பார்க்கறே!''

''உன் சீட்டு மூஞ்சியை யாரையா பார்த்தது?''

கலவரம் வலுத்துக் கொண்டு போவதைப் பார்த்துக் கொண்டு கந்தசாமியால் மேலும் சும்மா உட்கார்ந்திருக்க முடியவில்லை.

''ஹூம்! நிறுத்துங்கய்யா! உங்க சண்டையை! இந்த ஊருக்குப் போலீஸ் ஸ்டேஷன் ஏன் வேணுமின்னு கேட்டீங்களே! இப்பத் தெரியுதா? காசு வைச்சுச் சீட்டாடுகிறதே சட்டப்படி பெரிய தப்பு! அதுவும் இதுபோலச் சண்டை வேறே போட்டீங்கன்னு சொல்லவே வேணும். நீங்க மெட்ராஸிலே இதுபோலப் பண்ணி யிருந்தீங்கன்னு 786வது 'செக்ஷன்' கீழே உங்களை 'அரஸ்டு' பண்ணி 'லாக்கப்புலே' தள்ளி யிருப்பேன்!'' என்று வீர முழக்கம் செய்தான் அவன்.

திண்ணையில் நிசப்தம் நிலவியது. 'செக்ஷன்' 'அரஸ்டு' 'லாக்கப்' என்ற வார்த்தைகளைக் கேட்டு அவர்கள் ஸ்தம்பித்துப் போயினர்.

''தம்பி! மொதல்லே அந்த உடுப்பைக் கழட்டி வைச்சுட்டு வா!'' என்றார் மாமன் தருமலிங்கம்.

''ஏன் மாமா?''

''சும்மாத்தான் சொல்றேன்! அழுக்காப் போயிடும் பாரு!''

''இல்லே மாமா! நான் இந்த வயக்காட்டு வரையிலே போய்க் கிணற்றிலே இறங்கிக் குளிச்சுட்டு வரலாம்னு பார்க்




# சிக்கனமான, சிறந்த சமையல் சாதனம்...

ஹோட்டல்கள், ஹாஸ்டல்கள் போனற விடுதி ஸ்தாபனங்க ளுககு "காமதேனு" இரு முறை சுத்திகரிககப்பட்ட தாவர எண்ணெ அவசியம். சாஸ்திரீய முறையில கைபடா மல் தயாரிககப்பட்டது. இல்லங்களுககும் இனறி யமையாதது.

37 பவுண்டு (மொத்தம்) டின்களிலும் 10 பவுண்டு (ஙிகரம்) டின்களிலும் கிடைக்கும்.



## காமதேனு

### இருமுறை சுத்தீகரிக்கப்பட்ட தாவர எண்ணெ

தயாரிப்பு:

**மேட்டூர் கெமிகல் & இண்டஸ்ட்ரியல் கார்ப்பொரேஷன் லிட்.**

மேட்டூர் அணை R. S. — சேலம் ஜில்லா

மானேஜிங் ஏஜெண்ட்ஸ்:

சேஷசாயி பிரதர்ஸ் பிரைவேட் லிமிடெட்

MC-439

கிறேன்!'' என்று விஷயத்தைப் புரிந்து கொண்டவன்போல் எழுந்து நடக்க ஆரம்பித்தான் கந்தசாமி.

''இந்த உடுப்போடவா போகிறே! வேஷ்டி கட்டிக்கிட்டுப் போப்பா!''

''பரவாயில்லே மாமா!'' என்று புறப் பட்டான் அவன்.

வெகு தூரத்துக்கு வெகு தூரம் பச்சைப் பசும் வயல்கள் பரந்து கிடந் தன. இடை இடையே சின்னஞ் சிறு வாய்க்கால்களில் தண்ணீர் சலசல வென்று ஓடிக் கொண்டிருந்தது. கந்த சாமி சிந்தனையில் ஆழ்ந்தவண்ணம் வரப்புகளின் மீது நடந்து சென்றான்.

வந்த முதல் நாளே முனியம்மாளின் விஷயமாக எழுந்த கேள்விக்கு மாமா தருமலிங்கத்திடம் பக்குவமாகப் பதில் சொல்லி விட்டான்.

''சின்ன வயசிலிருந்தே முனியம்மா வைத் தங்கச்சிமாதிரி நினேச்சுக்கிட்டிருக் கேன் மாமா!......ஆனால் நீங்க அவள் கல்யாணத்தைப் பற்றிக் கவலைப்படவே வேண்டாம்! அக்கா அவளுக்கு நல்ல இடமாகப் பார்த்து வச்சிருக்குது! அந்த ஆசாமியும் எங்ககூடப் போலீஸிலே வேலை பார்க்கிறவன்தான். யோக்கிய மானவன்! முனியம்மாவுக்கும் சம்மதம் தான்! தை பொறந்ததும் முடிச்சுட லாம்!'' என்று அவன் கூறிய பிறகு தருமலிங்கம் வாயைத் திறக்கவே இல்லை. முத்தம்மாள் பார்த்து வைத் திருந்தால் சரிதான் என்று பேசாமல் இருந்து விட்டார்.

மறுநாள் ஊருக்குத் திரும்பிவிட வேண்டும்; போனதும் தங்கவேலு விஷயமாகக் கவனம் செலுத்த வேண் டும்; அவனைப் பற்றி ஏதாவது கண்டு பிடித்தால்தான் ஜோஸ்யர் சொன்னது போல் 'சிங்காரக் கன்னி சேர்வாள்!' என்று நினைத்தது அவன் மனம்.

எதிரே ஒரு பெரிய துரவு தென் பட்டது. எட்டிப் பார்த்தான். அகல மான படிகள். பளிங்கு போன்ற தெளி வான தண்ணீர். சுகமாக இறங்கிக் குளிக்க விழைந்தது அவன் மனம்.

உடையைக் களைந்து எங்கே வைக்க லாம் என்று சுற்றுமுற்றும் பார்த்தான். சிறிது தூரத்தில் கிணற்றங் கரையின் எதிர்ச் சரகில் தரையில் கிடந்த ஒரு பொருள் அவனது கவனத்தைக் கவர்ந் தது. பார்வைக்குப் பொம்மைபோல இருந்தது. அருகில் சென்று பார்த்தான். அவனது மனம் துணுக்குற்றது. அங்கே கிடந்தது ஒரு குழந்தையின் சவம்!

## இருபத்திநான்காம் அத்தியாயம்

# போலிச் சாமியார்!

கந்தசாமியின் மூளை சரசரவென்று வேலை செய்தது! இதை வைத்துக் கொண்டு இந்தப் பட்டிக்காட்டை ஒரு கலக்குக் கலக்கினால் என்ன? பட்ட ணத்து ஜவானின் சாமர்த்தியத்தைக் காண்பிக்க இதைவிட அரிய சந்தர்ப்பம் எங்கே கிடைக்கப் போகிறது! இன்னும் கொஞ்சம் தீவிரமாக யோசித்தால் ஒரு கொலைக்கேஸையே ஜோடித்து ஏழெட்டு பேரையாவது 'தோடா' போட்டு இழுத்துக் கொண்டு போகலாம். நினைத் ததை உடனே காரியத்தில் நிறைவேற்றி விட எண்ணினான் கந்தசாமி.

கேஸை எப்படித் துவக்குவது என்று யோசித்தான். இதுபோன்ற துர்மரண விஷயங்களில் போலீஸ்காரனுடைய முதல் வேலை 'பிரேதம் அங்கு எப்படி வந்தது? அதன் சொந்தக்காரர்கள் யார்? எப்படி இறந்தது? கொலையா தற்கொலையா?' என்பது போன்ற விஷயங்களைத் தீவிரமாகப் புலன் விசா ரணை செய்வதுதான்.

சுற்றுமுற்றும் பார்வையால் துழாவி னான். கூப்பிடு தூரத்தில் ஒரு கிராம வாசி தலையில் முண்டாசுடன் வயலில் வேலை செய்து கொண்டிருந்தான்.

''ஏய், இங்கே வா!''

கிராமத்தான் அஞ்சியவண்ணம் கையிலிருந்த மண்வெட்டியைக் கீழே போட்டு விட்டு அவன் அருகே வந்து கைகட்டி நின்றான்.

''இதோ பார், இந்தப் பிரேதம் இங்கே எப்படி வந்தது?''

குடியானவன் பயந்து போனான். ''எனக்குத் தெரியாதுங்க!......''

''ஏய், யார் கிட்ட அளக்கிறே! சென்னைப் பட்டணத்திலே பெரிய பெரிய கொலைகாரனுங்களை யெல்லாம் அப்படியே தூக்கி 'லபக்'குன்னு விழுங்கி யிருக்கிறேன்! நீ எனக்குச் சுண்டைக் காய்க்குச் சமானம்!......''

வரப்பின் மூலையிலிருந்த எல்லைக் கல்லின் மீது கம்பீரமாக உட்கார்ந்தான் கந்தசாமி. எப்போதும் தயாராக வைத் திருந்த குறிப்புப் புத்தகத்தையும் பென் ஸிலையும் கையில் எடுத்தான்.

''இதோ பார், நான் கேட்கிற கேள்வி களுக்கெல்லாம் ஒழுங்காப் பதில் சொல்

விக்கிட்டே வரணும்! இல்லேன்னு உன்னைப் பிடிச்சுது சனி!''

குடியானவன் மெதுவாக நகர்ந்தான். கந்தசாமி சடக்கென்று எழுந்து அவனைப் பிடித்தான்.

''ஓடவா பார்க்கிறே! அந்தப் 'பாச்சா' தான் என்கிட்டே பலிக்காது. புடிச்சு 'லாக்கப்'பிலே தள்ளிவிடுவேன்!'' என்று கந்தசாமி மிரட்டியதும் அவன் மனத்தில் விதியைச் சபித்துக் கொண்டு நின்றான்.

''உம் 'சத்தியமாகச் சொல்றேன்'னு சொல்லு!''

''சத்தியமாய்ச் சொல்றேனுங்க!''

''உன் பெயர் என்ன?''

''சொடலைமுத்து, ஐயா!''

''உன் தகப்பனர் பெயர்?''

''மருதமுத்துங்க!''

கந்தசாமி மளமளவென்று எழுதிக் கொண்டே வந்தான்.

''எந்த ஊர்?''

''இந்த ஊர்தானுங்க!''

''சூ! 'இந்த ஊரு'ன்னு ஒரு ஊர் இருக்குதா? ஊர் பேரைச் சொல்லு!''

''பனம்பழப்பட்டி!......ஏனுங்க இது எல்லாம்? எதுக்குக் கேக்கறீங்க?''

''உஸ்!......குறுக்கே பேசாதே!...... என்ன வயசு?''

''முப்பதுங்க!''

''யார் வயசைச் சொல்றே?''

''என் வயசுதானுங்க!''

''நான்ஸென்ஸ்! கேட்பதற்குப் பதில் சொல்லு! நான் இந்தக் குழந்தையின் வயசு என்னான்னு கேட்டேன்?''

''எனக்கு எப்படித் தெரியுமுங்க?''

''உனக்குத் தெரியாட்டி எனக்கா தெரியும் பின்னே!......இந்தக் கொலைக் கேஸை விசாரிக்கத்தானே நான் பட்டணத்திலிருந்து வந்திருக்கிறேன்!...''

கிராமவாசி திருதிருவென்று விழித்துக் கொண்டே,''ஐயா, என்னை உட்டுடுங்க, ஐயா! உங்களுக்குப் புண்ணியமாகப் போகட்டும்! கோடிவீட்டு குமாரசாமிப் பிள்ளை வீட்டிலே போன வாரம் பிறந்த கொழந்தை இரண்டு நாளைக்கு முன்னே இறந்து போச்சுங்க! ஒருகால் அதுவாகத்தான் இருக்குமய்யா இது! என்னை எதுக்காக......''

''சபாஷ்! அப்படி வா வழிக்கு!...... குமாரசாமிப் பிள்ளை குழந்தையா இது? முதல்லே கேட்டால் ஒண்ணுமே தெரியாதுன்னு சொன்னயே? என்னைக் கூட உங்க ஊர் தலையாரிப் பயல்ன்னு நினைச்சயா? மேலே சொல்லு! ஆணு அல்லது பொண்ணு?''

''பொண்ணுங்க!''

''கல்யாணமாயிடுச்சா?''

''ஆயிடுச்சுங்க. ரெண்டு கொளந்தை கூட இருக்குது!''

''யாருக்கு?''

''எனக்குத்தான்!''

''அட உன்னை யாரையா கேட்டது! இந்தப் பொண்ணுக்குக் கல்யாணம் ஆயிடுச்சா?......ஆயிடுச்சுன்னு புருஷன் அல்லது மனைவியின் பேர் என்ன?...... இதோ பாரு, இதெல்லாம் பட்டணத்துப் போலீஸ் மரண விசாரணை 'பாரத்'திலே முக்கியமான 'ஷரத்'துக்கள்... ஜல்தியா சொல்லு! நேரமாகுது!''

''எனக்கு வேலை இருக்குதய்யா!...''

''அதெல்லாம் நடக்காது! சொல்லிவிட்டு வேலையைப் பார்க்கப் போ!''

''இது சின்னச் சிசுவாச்சுங்களே! இதுக்குப் போய்க் கண்ணாலமாச்சான்னு என்னைக் கேக்கறீங்களே!''

''டேய்! துளிக் கூடப் பயமில்லாமல் எனக்கேயா கேள்வி போடறே! கல்யாணம் ஆகலேன்னு இல்லேன்னு சொல்லிட்டுப் போ? உம், ஆச்சா இல்லையா?''

''இல்லைங்க!''

''சரி. இந்தப் பெண்ணை யார் கொலை பண்ணினது?''

கிராமவாசியால் அதற்குமேல் தாங்க முடியவில்லை. மெதுவாக அவன் பிடியிலிருந்து தப்பி ஓடத் தலைப்பட்டான். கந்தசாமி ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து அவனைப் பிடித்துக் கொண்டான். அந்தத் துரதிருஷ்டசாலி "ஐயோ ஐயோ!" என்று அலறினன்.

இந்தச் சமயத்தில், நீண்ட காவி அங்கி யணிந்த சாமியார் ஒருவர் வரப்பின்மேல் நடந்து வந்து கொண்டிருந்தார். அவரைக் கண்டதுமே சொடலை முத்து கெஞ்சத் தொடங்கினன்.

"சாமி, சாமி! காப்பாத்துங்க!"

அபயக்குரலைக் கேட்ட சாமியார் அருகில் வந்தார். கந்தசாமியும் தனது பிடியைச் சிறிது தளர்த்தினன். கந்தசாமியின் பரம்பரைக்கே சிவனடியார்களிடம் ஒரு தனி விசுவாசமுண்டு. அவரைக் கண்டதும் "சாமி வணக்கமுங்க!" என்று ஒரு கும்பிடு போட்டான்.



சொடலைமுத்து அவரிடம் தன் குறையைச் சொல்லி முறையிட்டான். விஷயங்களை யறிந்ததும் சாமியார் புன்முறுவலுடன் பேசினர்:

"அவர்களெல்லாம் அரசாங்கத்து அதிகாரிகளப்பா!......அவர்களிடம் மரியாதையாக நடந்து கொள்ளவேணும்!" என்று அவர் தன் பக்கம் பேசியதைக் கேட்டுக்கந்தசாமியின் உச்சிகுளிர்ந்தது.

அவர் கந்தசாமியைப் பார்த்துச் சாந்தமாக, "உன் பெயர் என்னப்பா?" என்று கேட்டார்.

"கந்தசாமிங்க!"

"ஆஹா! அந்த மகாதேவனின் திருக்குமாரன் சாட்சாத் கந்தபெருமானைப் போலவே வீரனுக இருக்கிறய்! சென்னைப் பட்டணமோ?"

"ஆமாமுங்க!"

"இதோ பாரப்பா கந்தசாமி! இதோ அருகாமையிலே இருப்பது சுடுகாடு. அங்கிருந்து இந்தச் சிசுவைக் கழுகோ, நரியோ இங்கே கொண்டு வந்து எறிந்திருக்கலாம். போனல் போகிறது. இந்தப் பயலை மன்னித்து விட்டு விடு!"

சாமியாரின் கீச்சுக் குரலிலிருந்த இனிமையும் அதில் தொனித்த சாந்தமும் கந்தசாமியை வெகுவாகக் கவர்ந்தன. அவனுல் அவரது வார்த்தையைத் தட்ட முடியவில்லை. அரை மனத்துடன் சொடலைமுத்துவை விட்டு விட்டான். சொடலைமுத்து திரும்பிக்கூடப் பார்க்கவில்லை. ஒரே ஓட்டமாக அங்கிருந்து ஓட ஆரம்பித்தான்.

குடியானவன் சென்ற பின்னர் சாமியார் கந்தசாமியுடன் வெகு நேரம் அவனது தொழிலைப் பற்றிக் கேட்டுக் கொண்டிருந்தார். கந்தசாமியும், தன் வீர சரித்திரம் முழுதும் தான் பிறந்தது முதல் அப்போது அங்கே வந்தது வரையில் அவரிடம் ஒப்புவித்தான்.

"ஓ! ஸ்நானம் செய்ய வந்தாயா, முருகா...நானும் அதற்குத்தான் வந்தேன். முதலில் நீ இறங்கி ஸ்நானத்தை முடித்துக் கொண்டு வா. பிறகு நான் குளிக்கிறேன்" என்ருர்.

கந்தசாமி போலீஸ் ஆடைகளைக் களைந்து கிணற்றங் கரையின் மீது வைத்து விட்டு, அரையில் உள் கால் சட்டையுடன் கிணற்றில் இறங்கினன். சாமியார் கரையில் முருக ஜபம் செய்து கொண்டிருந்தார்.

பட்டணத்தில் இருப்பவர்களுக்கு இது போல் ஆனந்தமாகக் குளிப்பதற்கு எங்கே வாய்ப்பு கிடைக்கிறது! கந்தசாமிக்கு அந்த விசாலமான கிணற்றில் ஸ்நானம் செய்வதில் ஒரு புது உற்சாகம் ஏற்பட்டது. இடதுசாரி வலதுசாரி பாக நீச்சலடித்து முழுகி முழுகி எழுந்தான். தண்ணீரை விட்டு எழுந்து வரவே அவனுக்கு மனமில்லை. ஆனுல் கரையில் சாமியார் காத்திருக்கிருரே!

"சாமி உங்களுக்குக் குளிக்க நேரமாச்சுங்களா?"

பதில் இல்லை.

சரிதான் தியானத்தில் ஆழ்ந்திருக்கிருரோ! அல்லது எங்கேயாவது வரப்புப் பக்கம் போயிருக்கிருரோ என்று நிம்மதியுடன் மீண்டும் தண்ணீரில் முழுகினன் கந்தசாமி.

சுமார் பத்து நிமிடங்கள் கழித்து மீண்டும் "சாமி!" என்ருன்.

பதிலே இல்லை.

அவன் கரையேறி வந்தான். கிணற்றங்கரையில் சாமியாரைக் காணவில்லை. பனியனை எடுத்து உடம்பைத் துடைத்துக் கொள்ளலாம் என்று உடைகள் வைத்த இடத்தைப் பார்த்தான். அவனுக்குப் பகீரென்றது! அவனது போலீஸ் உடை அங்கே இல்லை! அதற்குப் பதில் சாமியாரின் காஷாயம் அவனைப் பார்த்துச் சிரித்தது! (தொடரும்)

Printed and Published by T. Sadasivam at the Kalki Press, Kilpauk, Madras-10 for the Proprietors Messrs Bharathan Publications Private Limited
Managing Editor: T. Sadasivam

சொல்லுவது? உண்மை தெரிந்தால் எவ்வளவு அவமானம்? அந்தக் கிராமத்து மக்கள் என்ன நினைப்பார்கள்?

நேராக வடக்கு நோக்கி நடந்தால் சுமார் பத்து மைல் தூரத்தில் ரயில்வே ஸ்டேஷன் இருக்கிறது. கால் நடையாக அப்போது புறப்பட்டாலும் ஒன்பது மணிக்கு முன்னால் ஸ்டேஷனை அடைய முடியாது. ஆனால் அங்கிருந்து சென்னைக்குத் திரும்புவதென்றால் டிக்கட்டுக்குப் பணமல்லவா வேண்டும்! ஒருகால் அந்தப் போலிச் சாமியார் சட்டைப் பையில் ஏதாவது காசு வைத்திருப்பானா?

மரத்தின் கீழ் உட்கார்ந்து அந்தக் காவித் துணி மூட்டையை உதறினான். அதிலிருந்து ஒரு பொய்த் தாடி கீழே விழுந்தது. சட்டைப் பையைத் துழாவினான். சில்லறை கொஞ்சம் இருந்தது.

இடுப்பில் இருந்த துணியைத் தவிர வேறு ஆடை எதுவும் இல்லாதிருக்கவே கந்தசாமிக்குக் குளிர ஆரம்பித்தது. கந்தசாமியின் மூளை சிறிது சிறிதாகவேலை செய்ய ஆரம்பித்தது. மார்பில் ஆடையே இல்லாமல் இருப்பதற்கு இந்தக் காவி அங்கியை அணிந்து கொண்டால் குளிராவது இராதல்லவா!

உடனே அதை உதறி மாட்டிக் கொண்டு அதுவரை இடுப்பில் கட்டி இருந்த அங்கவஸ்திரத்தைக் குளிருக்கு அடக்கமாக இருக்கும்படி மேலே போர்த்திக் கொண்டான். காவி வஸ்திரத்தை மாத்திரம் போட்டுக் கொண்டு வெறும் மீசையோடு இருந்தால் பொருத்தமாக இல்லைபோல் தோன்றியது. அந்தத் தாடியையும் எடுத்து ஒட்ட வைத்துக் கொண்டான். மறு நிமிஷம் கந்தசாமி கந்த சாமியாராகி விட்டான்! முத்தம்மாளே அப்போது அவனைப் பார்த்தால்கூட அடையாளம் கண்டு பிடிக்க முடியாது. இவ்வாறு நினைத்தபோது அவனுக்குச் சிரிப்பு வந்தது.

மேலே நடக்க வேண்டியது என்ன? அந்தத் திருட்டுப் பயல் இந்த முந்திரித் தோப்புக்குள்தான் போயிருக்க வேண்டும். ஆனால் இந்தத் தோப்பினுள் எவ்வளவு நேரம்தான் ஒளிந்து கொண்டிருக்க முடியும்? இன்னும் சிறிது நேரம் காத்திருந்து பார்த்தால் எப்படியும் வெளியில் வந்துதானே ஆக வேண்டும்? இவ்வாறு எண்ணிய வண்ணம் ஒரு பெரிய மரத்தின் அடியில் சிறிது ஒதுப்புறமாக உட்கார்ந்து தோப்புப் பக்கம் கண் கொட்டாமல் உற்றுப் பார்த்துக் கொண்டே யிருந்தான்.

**சூ**ரியன் மறைந்து வெகு நேரமாகி விட்டது. மாலை வெளிச்சம் சிறிது சிறிதாக மங்கி இருட்டத் தொடங்கியது. கந்தசாமியின் ஆவல் அதிகரித்தது. இருட்டிய பிறகு வெளியே வரலாம் என்றுதான் பதுங்கிக் கொண்டிருப்பான்! எப்படியும் இன்னும் சிறிது நேரத்தில் வெளியே வந்துதான் ஆக வேண்டும்; பிடித்து விடலாம் என்று எண்ணினான். ஆனால் இந்தப் பக்கமாக வராமல் வேறு பக்கமாக வெளியே போய்விட்டால்? இந்தச் சந்தேகம் தோன்றியதும் அவனது மனம் சஞ்சலமடையத் தொடங்கியது!......... இந்த உடையுடன் சென்னைக்கு மட்டும் எப்படிப் போவது? முத்தம்மாள் என்ன நினைப்பாள்? இன்ஸ்பெக்டருக்கு உடை விஷயமாக என்ன பதில் சொல்லுவது? முத்துப் பிள்ளை! சிங்காரி......... இவர்களுக்கு விஷயம் தெரிந்தால் எத்தனை அவமானம்? கேவலம் ஒரு பரதேசிப்பயல் இப்படி ஏமாற்றி விட்டானே?...... பரதேசியா அவன்! பொய்த்தாடி வைத்திருந்தான் அல்லவா? சாமியார்போல் ஊரை ஏமாற்றி வயிறு வளர்ப்பவனாக இருக்கும்!...ஆனால் போலீஸ் உடையை ஏன் அபகரிக்க வேண்டும்?

நேரம் ஆக ஆக அவனது வேதனை அதிகரித்தது. இரவு சுமார் ஒன்பது மணியிருக்கும். ஆகாயத்தில் பிறைச் சந்திரன் ஒடிந்த அப்பளத் துண்டுபோல் தனது மங்கிய வெளிச்சத்துடன் உதயமாகியது. பனி பெய்யத் தொடங்கியது. குளிர் காற்று உடம்பெல்லாம் ஊசி போல் குத்தியது. பசிவேறு அவனுக்குப் பிடுங்கித் தின்றது.

அதற்குமேல் அவனுக்கு அங்கு இருப்புக் கொள்ளவில்லை. அருகில் வீடுகளோ, சத்திரம் சாவடிகளோ இருப்பதாகத் தெரியவில்லை. இராப்பொழுதை எங்கு கழிப்பது? ஆகாரத்துக்கு வழி என்ன? இந்தத் தோட்டத்துக்குச் சமீபத்தில் சத்திரம் ஏதேனும் இருக்குமா?......அப்படியே அங்கு உட்கார்ந்திருப்பதைக் காட்டிலும் தேடிப் பார்ப்பது நலம் என்று எண்ணிக் கந்தசாமி எழுந்தான்.

அதே சமயத்தில் தெற்குப் பக்கத்தில் இருந்து சாலையோரமாக யாரோ வருவதுபோல் தெரிந்தது. கந்தசாமி மரத்தின்பின் மறைவாக நின்று கவனித்தான். ஒருகால் அவன் எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் ஆசாமியா? உருவம் சரியாகத் தெரியாவிடினும், வந்தவன் போலீஸ் உடையில் இல்லை என்று மட்டும் தெரிந்தது. ஆகவே அவன் இல்லை. யாராவது வழிப்போக்கனா?...... அந்த ஆசாமி கந்தசாமி இருந்த இடத்துக்குச் சிறிது சமீபமாக வந்ததும், ஒரு கணம் நின்றான். பிறகு நாலா பக்கமும் திரும்பிப் பார்த்து விட்டுத் தோப்புப் பக்கம் திரும்பி நடந்தான்.

சுமார் இரண்டு நிமிட நேரத்தில் அந்தத் தோட்டத்தின் இருள் அவனது உருவத்தை விழுங்கி விட்டது.

## இருபத்திஆறும் அத்தியாயம்

# முந்திரித் தோப்பு மர்மம்

கந்தசாமி ஆச்சரியமடைந்தான். இவன் யார்? இந்த அகாலத்தில் இவனுக்கு இந்தப் பயங்கரமான தோப்புக்குள் என்ன வேலை? ஒருகால் குறுக்கு வழியாகத் தோட்டத்தைக் கடந்து பக்கத்து கிராமத்துக்குச் செல்லுகிறானா? அல்லது அந்தத் தோட்டத்தின் காவற்காரன் இவன்தானா? அப்படியானால் ஏன் இங்கு நின்று சுற்றுமுற்றும் திரும்பிப் பார்க்க வேண்டும்?

யோசிக்க யோசிக்க அவனது மனத்தில் பற்பல சந்தேகங்கள் உதிக்க ஆரம்பித்தன. இந்த முந்திரித் தோப்பில் எத்தனையோ கொலைகள் நடந்திருப்பதாகவும், இருட்டிய பிறகு அந்தப் பக்கம் போவதற்கு ஜனங்கள் பயப்படுவார்கள் என்றும் மாமன் தருமலிங்கம் சொல்லக் கேட்டிருந்தான் அவன். அப்படியிருக்க இந்த ஆசாமி, இந்நேரத்தில் உள்ளே சென்றது விசித்திரமாக இருந்தது. அவனது உடையைத் திருடிய போலிச்சாமியாரும் சாதாரண ஆசாமியாக இருக்க முடியாது! அவன் இன்னும் தோட்டத்தினுள்ளேயே இருக்கலாம்! இப்போது உள்ளே சென்றவனுக்கும், அவனுக்கும் இடையே ஏதாவது தொடர்பு இருக்குமோ?

இந்தச் சந்தேகம் அவனது மூளையில் தோன்றியதும், கந்தசாமி தோட்டத்தை நோக்கி நடந்தான். அந்த மனிதன் உள்ளே நுழைந்த பக்கமாகச் சென்று உற்றுக் கவனித்தான். ஒரே இருட்டாக இருந்தது. சிறிது நிதானித்துக் கவனித்த பிறகு, அடர்ந்த புதர்களுக்கிடையே ஒரு கொடி வழி கண்ணுக்குப் புலப்பட்டது. மிகவும் ஜாக்கிரதையாக அந்த வழியே சென்றான்.

அடர்ந்து வளர்ந்திருந்த மரங்களின் கிளைகள் தலைக்குமேல் கூடாரம்போல் கவிந்து கொண்டிருந்தன. அவற்றினிடையே இங்குமங்குமாக எட்டிப் பார்த்துக் கொண்டிருந்த சந்திரக் கிரணங்களின் உதவியைக் கொண்டு, வளைந்து வளைந்து சென்ற அந்தக் கொடி வழியில் தட்டுத் தடுமாறிக் கொண்டே நடந்தான். நெடுகிலும் உதிர்ந்து கிடந்த உலர்ந்த இலைச் சருகுகள் அவனது கால்களுக்கு அடியில் 'கர் முர்' என்று முறிந்தன. விதம்விதமான காட்டுப் பூக்களின் மணம், குறுக்கும் நெடுக்குமாகப் பாம்புகள்போல் படர்ந்திருந்த கொடிகள், இடையிடையே பேய்கள்போல் நின்றிருந்த சவுக்கு மரங்கள், அவை காற்றில் அசைவதாலான "ஹோ" என்ற பயங்கரமான ஓசை, ஆந்தையின் அலறல், கோட்டானின் கூக்குரல், புதர்களில் ஓடிய பிராணிகள் எழுப்பிய சலசலப்பு, எதிரே அந்தரத்தில் தோன்றித் தோன்றி மறைந்த மின்மினிப் பூச்சிகளின் சிறு வெளிச்சம், சுவர்க்கோழியின் ரீங்காரம் ஆகிய எல்லாம் ஒருங்கு சேர்ந்து அந்த அமானுஷ்யமான சூழ்நிலையில் அவனது உள்ளத்தில் பெருத்த அச்சத்தைக் கிளறி விட்டன.



அவனுக்கு முன்னால் உள்ளே நுழைந்த அந்த ஆசாமியின் சுவடே தெரியவில்லை. சுமார் அரை மணி நேரம் நடந்த பிறகு மரங்கள் அதிக மில்லாத சற்றுத் திறந்த வெளி குறுக் கிட்டது. கொடி வழி அங்கு இரண் டாகப் பிரிந்தது. கந்தசாமி ஒருகணம் நின்று யோசித்த பிறகு மேற்கு நோக்கிச் சென்ற வழியைப் பின்பற்றினான். குகை போல் இரண்டு மரச் செறிவுகளும், திறந்த சமவெளிகளும் மாறி மாறிக் குறுக்கிட்டன. முடிவென்பதே இல்லா மல் போய்க் கொண்டே இருந்த அந்த வனாந்திரத்தில் 'வழிதுறை' தெரியாமல் இரவு முழுதும் சுற்றும்படி ஆகிவிடுமோ என்று அவன் மனத்தில் திகில் பிடித் துக் கொண்டது. கால்கள் ஓய்ந்து விட்டன. பசியும் களைப்பும் மேலிட்டன. கடைசியில் என்னதான் ஆகப் போகிறது? ஒருகால் அந்த ஆசாமி கிழக்குப் பக்கம் பிரிந்து சென்ற பாதை வழியே எங்காவது போயிருப்பானா? திகைத்து நின்ற அவனது கண்களுக் குச் சிறிது தூரத்தில் மரக் கூட்டங்களுக்கு மத்தியில் ஏதோ



ஒரு கட்டடம் தெரிந்தது. அவன் நிம் மதியாக ஒரு பெருமூச்சு விட்டான்.

கந்தசாமி மெதுவாக அருகே சென்று பார்த்தான். அது முழுவதும் இடிந்து சரிந்து போன ஒரு பிரும்மாண்டமான புராதனக் கட்டடம். பார்வைக்குப் பழைய காலத்து அரசர்களின் அரண் மனையைப் போல் காணப்பட்டது. சுற்றிலும் கற்களும் காரையும் சரிந்து கிடந்தன. மத்திய பாகம் மாத்திரம், பாதி இடிந்தும், இடியாமலும் நின்று கொண்டிருந்தது.

அவனுக்கு ஒரு யோசனை தோன்றி யது. இனிமேல் அவர்களைத் தேடிக் கொண்டு அலைவதில் பயனில்லை. பேசா மல் களைப்புத் தீர இக்கட்டடத்து வராந் தாவில் எங்கேயாவது படுத்துத் தூங்கிக் கழித்துவிட்டு, காலையில் எழுந்து மேலே நடக்க வேண்டியதைப் பற்றி யோசிக்க லாம் என்று தீர்மானித்தான் அவன்.

ஜாக்கிரதையாகக் கட்டடத்தின் இடி யாமலிருந்த பாகத்தை நோக்கி நடந் தான். அதன் முன்புறம் ஒரு பெரிய வராந்தாவைப் போல் காணப்பட்டது. அதில் மிகவும் உயரமும் பருமனும் உள்ள ஆறு உருட்டுத் தூண்கள் நின் றிருந்தன. தூண்களிலிருந்த காரை ஆங்காங்கு பெயர்ந்து போயும் அநேக இடங்களில் பாசி படிந்தும் கிடந்தன. தரை முழுவதும் புழுதி படிந்து புல்லும் செடிகளும் முளைத்திருந்தன. ஒரு புறத்தில் நீண்ட திண்ணை ஒன்று இருந்தது. கந்தசாமி தன் தோளிலிருந்த துண்டால் திண்ணையிலிருந்த தூசியைத் தட்டிவிட்டு, அதன்மேல் துண்டைப் பிரித்துப் படுத்துக் கண்களை மூடிக் கொண்டான். அலைபாய்ந்து கொண் டிருந்த மனத்தில் என்ன முயன்றும் மேற் கொண்டு செய்வதென்ன என்பதைப் பற்றி எவ்விதமான முடிவும் ஏற்பட வில்லை. களைப்பு மேலிட்டால், சிறிது நேரத்தில் அயர்ந்து தூங்கி விட்டான்.

இரவு சுமார் இரண்டு மணி யிருக் கும். அவன் திடுக்கிட்டு விழித்துக் கொண்டான். ஏதோ அரவம் கேட்டது போலிருந்தது. கண்களைக் கசக்கிக் கொண்டு எழுந்து உட்கார்ந்தான். எங் கிருந்தோ பேச்சுக் குரல் கேட்டது. அவனுக்கு ஆச்சரியமாக இருந்தது. உண்மையில் மனிதர்களின் குரல்தானா? அல்லது பிரமையா? குரல் கட்டடத் துக்குப் பின்புறத்திலிருந்து வருவது போலிருந்தது.

அவன் மெதுவாக எழுந்தான். சிதிலமாகிக் கிடந்த அந்தக் கட்டடத் துக்குள் நுழைவதற்கு வராந்தாவின் இடது பக்கத்தில் ஒரு சிறிய வாசற்படி காணப்பட்டது. ஆனால் குகைபோல் இருண்டு கிடந்த அதனுள்ளே நுழை வதற்கு அவனுக்குத் துணிவு ஏற்பட வில்லை. சந்தடியின்றி நடந்து சுற்றிக் கொண்டு கட்டடத்தின் பின்புறத்தை யடைந்தான். இப்போதும் குரல் கேட்டுக் கொண்டுதான் இருந்தது. ஆனால், கட்டடத்துக்குள்ளிருந்து கேட்ட தாகத் தெரியவில்லை. பூமிக்கடியிலிருந்து கேட்டது. கீழே குனிந்து தரையில் காதை வைத்துக் கவனித்தான். யாரோ இருவர் பேசுவது காதில் விழுந்தது.

''உன்னிடம் ஒப்படைத்திருந்த வேலை முடிந்ததா, இல்லையா என்று தெரிந்து கொள்வதற்குத்தான் உன்னை இங்கே வரச் சொன்னது!...''

''அதுதான் சொன்னேனே!...சந்தர்ப் பத்தை எதிர்பார்த்துக் கொண்டிருக் கிறேன் என்று? மேலும், முதலில் எனது மாங்காய் விஷயம் பைசலானால் ஒழிய நான் மேற்கொண்டு எதிலும் பிர வேசிக்கப் போவதில்லை!''

கந்தசாமி திடுக்கிட்டான்! இப்போது பேசிய கீச்சுக் குரல் அவனது உடையைத்

## யார் தவறு?

புதியமோட்டார் ஓட்டி ஒருவர் (தவறான பாதையில் சென்று மற்றொரு காருடன் மோதினார்.) மன்னித்து விடுங்கள். தவறு முழுதும் என் மேல்தான்!



மற்றவர் :— இல்லை, இல்லை, என் மேல் தான் தவறு. நீங்க வருகிறது முந்நூறு கஜத்துக்கு முன்னால் தெரிந்தும் நான் இன்னொரு தெருவில் திருப்பியிருக்க வேணுமல்லவா?

திருடிச் சென்ற போலிச் சாமியாருடையது என்பதில் சந்தேகமேயில்லை! இதற்கு முன்னமே கூட அவன் இந்தக் குரலை எங்கேயோ கேட்டிருக்கிறான்! ஆனால் எங்கே?...

''அது விஷயமாகத்தான் எசமானர் சொல்லியனுப்பியிருக்கிறாரே! இன்னும் விற்பனையாக வில்லை. போலீஸ் இருக்கிற உஷாரில் அதை இப்போது வெளியே கொண்டுபோவது சாத்தியமில்லை என்று சொல்லச் சொன்னார்!''

''இப்படியே விற்க வில்லை விற்கவில்லை என்று சொல்லிக் கொண்டே போனால் சும்மா இருக்க முடியாது! எனக்குப் பணம் அவசரமாகத் தேவை! அவரால் விற்க முடியாவிட்டால் என்னிடம் கொடுக்கச் சொல்லு! நான் விற்று அவருக்குச் சேரவேண்டியதைக் கொடுத்து விடுகிறேன்! நாளைக்கு இரண்டில் ஒன்று முடிய வேண்டும்!''

''இதையெல்லாம் எங்களிடம் சொல்லிப் பலனில்லை. எசமானரே நேரில் வருவதாக இருந்தார். ஆனால் அவருக்கு அங்கே வேறு முக்கியமான வேலை இருப்பதால் என்னை அனுப்பி வைத்தார்......''

''என்ன இரைச்சல் அங்கே? மெதுவாகப் பேசுங்கள்!''

இது மூன்றாவது புதுக் குரல்.

அதற்கு மேல் கந்தசாமியால் சரிவரக் கேட்க முடியவில்லை.

''அட நீயும் கூடவே போ! மதராஸில் தான்...கமிஷனர்...வேலூர் பயமில்லை'' என்று ஏதேதோ சம்பந்தா சம்பந்தமில்லாமல் சொற்கள் இங்கொன்றும் அங்கொன்றுமாகத்தான் அவனது காதுகளில் விழுந்தன. அதன் பிறகு அநேகர் சேர்ந்து தணிவான குரலில் பேசுவது போல் தெளிவற்ற சத்தங்கள் கேட்டன.

அவனுக்கு ஒரே பிரமிப்பாக இருந்தது. இந்தக் கட்டடத்துக்குள் என்ன மர்மம் அடங்கி யிருக்கிறது? ஏதோ மாங்காய் என்கிறானே! ஒருகால் இது தோப்புக் காவல்காரன் வசிக்குமிடமோ என்னமோ! இந்தத் தோப்பில் இருக்கும் மாமரங்களின் மகசூல் விஷயமாக ஏதாவது பேசுகிறானா? அப்படியானால் போலீஸ் உஷாராக இருப்பதால் விற்க முடியவில்லை என்கிறானே! மாங்காயை விற்கப் போலீசுக்கு ஏன் பயப்பட வேண்டும்? வேலூரில் யார் இருக்கிறார்கள்? பூமியின் அடியிலிருந்து குரல் கேட்கிறதே! ஏதாவது சுரங்கங்கள் இருக்கின்றனவா? இவ்வாறெல்லாம் சிந்தித்துக் கொண்டே கட்டடத்தின் பின்புறம் நோக்கினான்.

அங்கு முன்புறம் இருந்ததைப் போலவே தரை மட்டத்துக்கு மேல் இரண்டு மூன்றடி தலையைத் தூக்கிக் கொண்டிருந்த இடிந்த சுவர்களும், குவியல் குவியலாக மண்ணும் காரையும் கற்களுமே காணப்பட்டன. அவற்றுக் கப்பால் செடிகளின் மறைவில் ஏதோ கறுப்பாகத் தெரிந்தது. கந்தசாமி கொஞ்சம் முன்னால் சென்று புதர்களின் மறைவிலிருந்து எட்டிப் பார்த்தான். சந்திரனின் மங்கிய வெளிச்சத்தில் அங்கு ஒரு பெரிய மோட்டார் கார் நிற்பது தெரிந்தது. அவனது ஆச்சரியத்துக்கு எல்லையில்லை. கட டாயம் இங்கே ஏதோ பெருத்த மர்மம் அடங்கித்தான் இருக்க வேண்டும் என்று கந்தசாமி தனக்குள் தீர்மானித்துக் கொண்டான்.

காரில் ஒருவருமில்லை என்று தெரிந்து கொண்டு மெதுவாக அதனருகில் சென்று நம்பரைப் பார்த்தான். MBX 4488 என்றிருந்தது. இந்தச் சமயத்தில் மனிதர்களின் காலடிச் சத்தம் கேட்டது. அவனது நெஞ்சு 'தடக் தடக்' என்று அடித்துக் கொண்டது.

''ஜாக்கிரதை! எசமான் உத்தரவு ஞாபகம் இருக்கட்டும்!''

''நானும் கூடவே வருகிறேன்!''

இரண்டாவது பேசியது அந்தப் போலிச் சாமியார். கந்தசாமிக்கு ஒளிந்து கொள்ளவோ ஓடவோ நேரமில்லை! சுற்று முற்றும் பார்த்தான். அந்தக் கட்டடத்துக்குப் பின்புறம் சிறிது தூரம் திறந்தவெளியாக இருந்தது.

அவன் 'சட்' என்று காரின் பின்புறம் சாமான்கள் வைக்குமிடத்தை மெதுவாகத் திறந்து அதில் புகுந்து கதவை மூடிக் கொண்டான்.

சுமார் இரண்டு நிமிடங்களில் மோட்டார் கார் அங்கிருந்து நகர ஆரம்பித்து, வேகமாக முன்னேறியது. (தொடரும்)

Printed and Published by T. Sadasivam at the Kalki Press, Kilpauk, Madras-10 for the Proprietors Messrs Bharathan Publications Private Limited
Managing Editor: T. Sadasivam

## இருபத்தேழாம் அத்தியாயம்

## சாமியாரின் சங்கடம்




திருமலிங்கத்தின் வீட்டுத் திண்ணையில் மாலை சுமார் ஆறு மணி வரையில் சீட்டுக்கச்சேரி சுவாரஸ்யமாக நடந்தது. அது வரையில் தருமலிங்கத்துக்குக் கந்தசாமியைப் பற்றிய நினைவே இல்லை. திண்ணையைவிட்டு எழுந்து உள்ளே சென்றதும், "அத்தான் எங்கே போயிருக்குது?" என்று முனியம்மாள் கேட்ட பிறகுதான் நீராடப் போன பேர்வழி இன்னும் திரும்பவில்லை என்று தெரிந்தது.

அவரது மனத்தில் திடீரென்று ஒரு பயங்கரமான சந்தேகம் தோன்றியது.

"முனியம்மா! அவனுக்கு நீச்சல் தெரியுமா?" அவரது கேள்வியின் தாத்பரியம் புரியாமல் அவள் விழித்துக் கொண்டிருக்கையிலேயே சுப்பையாப் பிள்ளை தருமலிங்கத்தைத் தேடிக்கொண்டு வந்தார்.

"தருமலிங்கம்! உங்க கந்தசாமி வந்து விட்டானா?" என்று கேட்டார்.

"அவனைப் பற்றித்தான் நானும் நினைச்சுக்கிட்டே யிருக்கேன். நாம்ப சீட்டாடிக்கிட்டிருக்கப்போ குளிக்கப் போனான் பாரு, அவ்வளவுதான். இன்னும் காணோம்!"

"சரிதான்! சொடலைமுத்து சொன்னது சரிதான் போலிருக்குது!" என்று ஒரு குண்டைப் போட்டார் அவர்.

"சொடலை முத்துவா?.........என்ன சொன்னான்?"

கந்தசாமி குடியானவன் சொடலை முத்துவை மிரட்டியது முதல் அவனைச் சாமியார் வந்து தப்புவித்த வரையில் சுருங்கக் கூறினர் சுப்பையாப் பிள்ளை.

"குளிச்சுக்கிட்டே இருக்கையில் அந்தச் சாமியார் அவனுடைய போலீஸ் உடுப்பை மாட்டிக்கிட்டு ஓட்டம் பிடிச்சாராம். சொடலைமுத்து தூரத்திலிருந்து கவனிச்சுக்கிட்டிருந்தானாம்!"

"ஐயையோ, அப்புறம்?"

"அப்புறம் என்ன? இவன் கரையேறி வந்து பார்க்கிறதுக்குள்ளே அவன் ரொம்பத் தூரம் போயிட்டான். அவனைத் துரத்திக்கிட்டு உங்க ஆசாமி ஓடியிருக்கிறான். நான் சொல்கிறேன்னு கோவிச்சுக்காதீங்க, தருமலிங்கம்! நாட்டுப்புறத்துக்கு வரும்போது இவன் எதற்காகப் போலீஸ் உடையை மாட்டிக்கிடணும்! சேச்சே! சுத்த அசட்டுப் பிள்ளை!" என்று கூறிக் கொண்டே வெளியேறினர் அவர்.

தர்மலிங்கத்துக்குத் தலை இறக்கமாக இருந்தது. அந்த வயிற்றெரிச்சலைக் கேட்டு அழுவதா சிரிப்பதா என்று அவருக்குத் தோன்றவில்லை.

முனியம்மாளுக்கோ அத்தான் மீது அளவற்ற இரக்கம் ஏற்பட்டது. எப்படியும் அத்தான் அந்தச் சாமியாரை உதைத்து உடுப்பைப் பிடுங்கிக்கொண்டு வெற்றியோடு வந்து விடுவார் என்று நம்பினள் அவள். ஆனல் காலையிலும் கூட அவன் வராமற் போகவே அவளுக்குக் கவலை பிடித்துக் கொண்டது.

"அத்தானைக் காணேமே அப்பா, நீங்களாவது போய் அவரைத் தேடிப் பார்க்கக் கூடாதா?"

"உங்க அத்தான் என்ன சின்னக் குழந்தையா? எல்லாம் தானே வருவான். தொந்தரவு பண்ணதே. எனக்கு அவசரமாக வேலூருக்குப் போகணும்!" என்றார் அவர்.

தருமலிங்கத்துக்கு நிலங்கள் சம்பந்தமாக வேலூர் கோர்ட்டில் ஒரு வழக்கு இருந்தது. ஒரு மணிக்கெல்லாம் போனல்தான் பஸ்ஸைப் பிடித்து ஒன்பது மணி சுமாருக்கு வேலூரை அடைய முடியும்.

சலவை செய்து வைத்திருந்த சட்டையையும் கட்டம் போட்ட சிவப்பு நிற லுங்கி போன்ற வேட்டியையும் பட்டு வெள்ளை அங்கவஸ்திரத்தை

யும் தரித்துக் கொண்டு வேலூருக்குத் தருமலிங்கம் புறப்பட்டு விட்டார்.

* * *

மோட்டார் காரின் பின்புறத்தில் ஒளிந்து கொண்ட கந்தசாமியினால் அதிக நேரம் கதவை மூடி வைத்திருக்க முடிய வில்லை. மூச்சுத் திணற ஆரம்பித்தது. இலேசாகத் திறந்து கொண்டான். முதலில் வளைத்து வளைத்துச் செலுத்தப் பட்ட வண்டி வெகு சீக்கிரத்திலேயே அந்தத் தோட்டத்தை விட்டு வெளிப் பட்டு நேரான சாலையில் கனவேகமாகச் செல்ல ஆரம்பித்தது.

ஆனால் அது யாருடைய வண்டி, எங்கே செல்லுகிறது என்று அவனுக் குப் புரிய வில்லை. நேரம் ஆகஆக முன் பின் யோசியாமல் அதில் ஏறிக்கொண்ட தனது முட்டாள்தனத்தை அவன் நொந்து கொண்டான். எங்கு போய் நிற்குமோ, என்ன ஆபத்து நேரிடுமோ என்று பொறியில் அகப்பட்ட எலி யைப் போல் அவன் தவியாய்த் தவித் துக் கொண்டிருந்தான்.

ஒருகால் அந்த 'எசமானர்' என்பவ ரின் காராக இருக்கலாம். அப்படி யானால் இதில் செல்வதின் மூலம் அந்த ஆசாமியின் இருப்பிடத்தைத் தெரிந்து கொள்ள முடியும். அதைக் கொண்டு இந்த முந்திரித் தோப்புக் கட்டடத்தின் மர்மத்தையும் கண்டுபிடிப்பதற்கு மார்க்கம் ஏற்படலாம்!

அடுத்த கணமே அவனது அந்த ராத்மா சிரித்தது. 'இது என்ன மனக் கோட்டை! சாயபுரம் ஸ்டேஷனில் மாட்டிக் கொண்டு பட்டதெல்லாம் போதாதா? ராமசாமி அண்ணன் என்ன சொன்னன்? 'உன்னுடைய எல்லையை விட்டு வேறொரு எல்லையில் அநாவசியமாகக் கேஸைப் பிடிக்கிறேன், இன்னொன்றைப் பண்ணுகிறேன் என்று போகாதே!' என்று அவன் புத்திமதி சொல்லவில்லையா? நமக்கும் கேஸுக் கும் ரொம்ப தூரம். உடுப்பு போனால் போகிறது என்று பேசாமல் இறங்கி விட வேண்டியதுதான்' என்று கூறியது அவனுடைய உள்ளுணர்வு.

'ஆனால் எப்படி இறங்க முடியும்? ஓடுகிற வண்டியிலிருந்து குதித்தால் எலும்புகள் நொறுங்கி விடாதா!'

சுமார் ஒரு மணி நேரம் ஓடிய பிறகு மோட்டார் தட்டென்று நின்றது.

''கனகசுந்தரம்! அந்த டின்னிலிருக் கும் தண்ணீரை எடு. 'ரேடியேட்டர்' சூடாகி விட்டது'' என்றான் மோட்டா ரைச் செலுத்தி வந்தவன். முன்புறக் கதவு திறந்து மூடப்படும் ஓசை தெளிவாகக் கேட்டது.

பாதையில் வெளிச்சமே யில்லை. மங்கிய பிறை மதியும் மேகத் திரையில் பதுங்கிக் கிடந்தது. சாலையிலும் ஜன சந்தடியில்லை. கந்தசாமி ஓசைப்படா மல் கதவைத் திறந்து கொண்டு மெது வாகக் கீழே இறங்கி வண்டிக்குப் பின்னால் ரோட்டிலேயே முடக்கிக் கொண்டு உட்கார்ந்தான்.

இரண்டே நிமிஷங்களுக்குப் பின் வண்டி மீண்டும் புறப்பட்ட பிறகுதான் அவனுக்குச் சரியாக மூச்சு வந்தது.

எங்கே இருக்கிறோம், அந்தப் பாதை எங்கே போகிறது என்று தெரியாமல் திகைத்துக் கொண்டிருக்கையிலேயே சாலையோரத்தில் புதிதாகச் சுண்ணும்பு தீட்டப்பட்டுக் கம்பீரமாக நின்ற மைல் கல் அவனது திருஷ்டியில் பட்டது. தீக்குச்சியைக் கிழித்துப் பார்த்தான். 'வேலூர் இரண்டு மைல்' என்றிருந்த தைக் கண்டதும் மனத்துக்கு நிம்மதி ஏற்பட்டது. எங்கேயாவது நடுக் காட் டில் இறங்காமல் வேலூருக்கு அருகில் இறங்கியதும் அதிர்ஷ்டம்தான் என்று ஆறுதல் அடைந்தான்.

இரவு முழுதும் உணவோ, உறக்கமோ இல்லாமையால் மிகவும் களைப்பாக இருந்தது. இன்னும் பொழுது புலர வெகுநேரம் இருந்தது. 'பேசாமல் சாலை யோரத்திலேயே படுத்து உறங்கி விட்டுக் காலையில் எழுந்து சட்டைப் பையில் இருந்த சில்லறைக்கு வயிற்றை நிரப்பிக் கொண்டு டிக்கட்டில்லாமலேயே பட்ட ணத்துக்கு வண்டியேற வேண்டியது தான்' என்று தீர்மானித்துக் கொண் டான் கந்தசாமி. 'சாமியார்களுக்கு



டிக்கட் எதற்கு?' என்று முடிவுக்கு வந்த வனாய் ஓரத்திலிருந்த மரத்தடியில் துண்டை விரித்துப் படுத்தான்.

உடல் என்னவோ களைத்திருந்தது. ஆனால் பசியின் காரணமாக நிம்மதி யாக நித்திரை வரவில்லை. கண்களை மூடுவதும் திறப்பதும்: ஐந்து நிமிஷம் தூங்குவதும் பிறகு விழித்துக் கொள் வதுமாகப் படுத்திருந்தான்.

சுமார் இரண்டு மணி நேரம் கழிந் திருக்கும். சேவல் கூவியது. கீழ்த்திசை யில் பொழுது விடிவதற்கான அறி குறிகள் தோன்றத் தொடங்கின. உடனே எழுந்திருக்கலாமா அல்லது இன்னும் கொஞ்சம் வெளிச்சமாகட் டுமா என்று இலேசாக இமைகளை மூடிய வண்ணம் யோசித்துக் கொண்டிருந்த கந்தசாமி தலைமாட்டில் ஏதோ சத்தம் கேட்டுத் திரும்பிப் பார்த்தான்.

ஒரு கூலிக்காரன் பெரிய டிரங்குப் பெட்டி யொன்றை அவனது தலைமாட் டுக்கு அருகில் இறக்கி வைத்து விட்டு வெகு வேகமாகத் திரும்பிப் போய்க் கொண்டிருந்தான்.

கந்தசாமி எழுந்து உட்கார்ந்து தலை யில் அவசரமாகத் துணியை முண்டா சாகக் கட்டிக் கொண்டு தாடியையும் சரிப்படுத்திக் கொண்டான்.

''ஏய்! இந்தாப்பா, பெட்டியை வைத்துவிட்டு எங்கே போறே?''

அவன் திரும்பிப் பார்த்தான். ''பையைக் கொண்டு வர மறந்து விட் டேனுங்க சாமி! பஸ் ஸ்டாண்டுக்குப் போகணும். நீங்கதான் கொஞ்சம் பார்த்துக்குங்க. இதோ பையை எடுத் துக்கிட்டு ஓடி வந்து விடுகிறேன். இதோ அஞ்சே நிமிஷம்'' என்று சொல்லிவிட்டு ஓடினான் அவன்.

அவன் 'சாமி சாமி' என்று கூப் பிட்டது கந்தசாமிக்குச் சந்தோஷத்தை யளித்தது. ''நல்ல தமாஷ்! இந்த வேஷத்துக்குக்கூட நல்ல மதிப்புத் தான்'' என்று எண்ணித் தனக்குள் சிரித்துக் கொண்டான் கந்தசாமி.

ஐந்து நிமிஷத்தில் வருகிறேன் என்று போனவன் அரைமணியாகியும் வர வில்லை. பொழுது புலர்ந்து விட்டது. சாலையில் கொஞ்சம் கொஞ்சமாக ஜனசஞ்சாரம் ஏற்பட்டது. பஸ்கள் 'பூம் பூம்' என்று ஊதிய வண்ணம் புழுதியை வாரி இறைத்துக் கொண்டு வேகமாக ஓடின.

கந்தசாமி அருகிலிருந்த வேப்பமரத்தி லிருந்து குச்சி ஒடித்துப் பல் துலக்கிய வண்ணம் கூலிக்காரனை எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருந்தான்.

கீழ் வானத்தில் உதயமான சூரியன் கிறு கிறுவென்று மேலெழும்பி உலகத் தைத் தனது ஒளிப் பிரவாகத்தில் மூழ் கடிக்கத் தலைப்பட்டான். மணி ஏழுக்கு மேலிருக்கும். ஜனசந்தடி அதிகமாகி விட்டது. கந்தசாமிக்குப் பசி பொறுக்க வில்லை. 'பெட்டியைப் பற்றி நமக்கேன் கவலை? பேசாமல் எழுந்து போய் விட லாம்' என்று நினைத்தான். இன்னும் அரை மணி நேரம் பார்ப்பது, அவன் வந்துசேராவிடில் அப்படித்தான் செய்ய வேண்டும் என்ற தீர்மானத்துடன் அந்தக் கூலிக்காரனைச் சபித்த வண்ணம் பெட்டியின் மேல் ஏறி உட்கார்ந்து கொண்டான்.

வழியே போகிறவர்கள் சாமியாரை யும் பெட்டியையும் மாறி மாறிப் பார்த்



துக் கொண்டே சென்றனர். ஒருவன் குறும்பாக ''சூட் கேஸ் சாமியார் டோய்!'' என்றான் கந்தசாமிக்குத் தருமசங்கடமாக இருந்தது. மேலும் ஒரு மணி நேரம் கழிந்தும் அவன் வராமையால் பொறுமையை இழந் தான். ஆனால் பெட்டியை அநாதரவாக அங்கே விட்டு விட்டுப் போக அவன் மனம் இடந் தரவில்லை. வழியில் அந்தத் துர்ப்பாக்கியசாலிக்கு என்ன அசந்தர்ப் பம் நேரிட்டு விட்டதோ? இல்லாவிடில் இவ்வளவு நேரம் பெட்டியை இங்கே விட்டு விட்டு வராமலா இருப்பான்? பேசாமல் இதைப் போலீஸ் ஸ்டேஷனில் கொண்டு போய் ஒப்படைத்து விட வேண்டியதுதான் சரியான முறை என்று கூறியது அவனது போலீஸ் உள்ளம்.

பெட்டியைத் தூக்கிப் பார்த்தான். ஒரே கனமாகக் கனத்தது. வழிப்போக்கன் ஒருவனை உதவிக்கு அழைத்தான்.

அவன் ''என்ன சாமி, இப்படிக் கனக்குதே! இதுக்குள்ளே என்ன வைச்சிருக்கே!'' என்று கேட்டுக் கொண்டே அதைக் கந்தசாமியின் தலையில் தூக்கி வைத்து விட்டான்.

பாரம் ஒரேயடியாகத் தலையை அழுத்தியது. கந்தசாமியார் தள்ளாடித் தள்ளாடி மெதுவாக வேலூரை நோக்கி நடந்து கொண்டிருந்தார்.

அவன் வேலூரை நெருங்கிய போது மணி கிட்டத்தட்ட பத்து இருக்கும். வீதியோரத்திலிருந்த டீக் கடையைக் கண்டதும் அவன் மனம் ஏங்கியது. முதலில் நாஸ்தாவை முடித்துக் கொண்டால் கொஞ்சம் உடம்பில் தெம்பு ஏற்படும் என்று தோன்றியது.

இந்தப் பளுவை வேறு தலைமேல் தூக்கிக் கொண்டு ஏன் திரிய வேண்டும்? இதை இங்கேயே வைத்து விட்டுப் போனால் தான் நல்லது என்று நினைத்தான்.

நாஸ்தா முடிந்ததும் கந்தசாமி டீக் கடைமுதலாளியிடம் காசைக்கொடுத்து விட்டு, ''இதோ பாருங்க, இந்தப் பெட்டி இங்கேயே இருக்கட்டும். நான் இதோ அஞ்சு நிமிஷத்திலே வந்து எடுத்துக்கிட்டுப் போறேன்!'' என்றான்.

முதலாளி ஒரு முறை அவனை ஏற இறங்கப் பார்த்தார்.

''இதோ இப்பவே வந்துடுவேனுங்க'' என்றான் கந்தசாமி மறுபடியும்.

''சீக்கிரம் வந்துடுங்க சாமி! காலம் கெட்டுக் கிடக்குது; இதுக்குள்ளே கஞ்சா, அபினி ஏதாவது இருந்துவிட்டுக் கடைசியிலே நான் போலீசிலே மாட்டிக்கிட்டுத் தவிக்கும்படியாக ஆயிடப் போகுதுங்க'' என்றார் முதலாளி.



கந்தசாமி ஒரு அசட்டுச் சிரிப்புடன் பஸ் ஸ்டாண்டுக்குப் போகும் வழியை விசாரித்துக் கொண்டு புறப்பட்டான். அவனது மனத்தில் ஒரு புதிய பயம் புகுந்து கொண்டது. 'இந்தப் பெட்டிக்குள் என்னதான் இருக்கிறது? ஏன் இப்படிக் கனக்கிறது? டீக்கடைக்காரன் கூறியதுபோல 'அபினி' ஏதாவது இருக்குமோ! இத்தனை ஆபத்துக்கள் வந்தது போதாதென்று, இதன் மூலமாக ஏதாவது தொல்லை வந்து சேராதிருக்க வேண்டுமே?' என்று யோசித்த வண்ணம் அவன்விரைவாக நடந்தான்.

பஸ் ஸ்டாண்டில் ஜனத்திரள் நிறைந்திருந்தது. வெளியூர் பஸ்கள் சில புறப்பட்டுக் கொண்டிருந்தன. பஸ்ஸில் இடம் கிடைக்காமல் நின்றிருப்பவர்களும் இனிமேல் வரப் போகும் பஸ்ஸுக்காகக் காத்துக் கிடப்பவர்களுமாக அந்த இடம் கலகலப்பாக இருந்தது. எங்கு தேடியும் அந்தக் கூலிக்காரனை அங்கு காணவில்லை. அங்கங்கே சிறு சிறு கும்பல்களாக நின்று பேசிக் கொண்டிருந்தவர்களருகே சென்று கவனித்துப் பார்த்தான். ஆனால் பெட்டி விஷயமாக ஒருவரும் பேசிக் கொள்ளவில்லை. சிறிது நேரம் நின்று யோசித்தான். மேற்கொண்டு எந்தத் தகராறிலும் ஈடுபடாமல் பெட்டியை டீக்கடையிலேயே கிடக்கட்டுமென்று விட்டு விட்டு ஊருக்குத் திரும்பி விடுவதுதான் உசிதம் என்று பட்டது அவனுக்கு. சென்னைக்கு வண்டி

பெட்டியை, டீக்கடையினுள் கொண்டு போய் இறக்கி வைத்தான். அங்கிருந்தவர்கள் அனைவரும் இந்த விநோதச் சாமியாரை வேடிக்கை பார்த்தார்கள்.

கந்தசாமி பலகாரத்தைத் தின்று கொண்டே யோசித்தான். பெட்டியின் தோற்றத்திலிருந்து அது அந்தக் கூலிக்காரனுடையதாக இருக்க முடியாது என்று தோன்றியது. அவன் பஸ் ஸ்டாண்டுக்குப் போக வேண்டுமென்றான். பெட்டியின் சொந்தக்காரர்கள் பஸ் ஸ்டாண்டில் இருக்கலாம். ஒருகால் இந்தக் கூலிக்காரன் அவன் புறப்பட்ட பிறகு அந்த மரத்தடியில் வந்து தேடி விட்டுப் போயிருந்தால்? எதற்கும் முதலில் பஸ் ஸ்டாண்டுக்குப் போய்ப் பார்த்து விட்டு, பிறகு போலீஸுக்குப் போவது நல்லது. அப்படிச் செய்வதற்கு

எப்போது புறப்படுகிறது என்று விசாரித்தான். காலை பத்தேமுக்காலுக்கு ஒன்று, இரவு ஒன்பது மணிக்கு ஒன்று என்று தெரிய வந்தது.

அப்போது கிட்டத்தட்ட பன்னிரண்டு மணியாகி விட்டது. இரவு ஏழு மணி சுமாருக்கு ரயில்வே ஸ்டேஷனை அடைந்தால் போதுமானது. அதுவரையில் என்ன செய்வதென்று தோன்ருமல் அவன் சாவகாசமாகக் கடை வீதிகளைச் சுற்றி வந்தான்.

பகல் மூன்று மணி சுமாருக்குப்பையில் மிச்சமிருந்த சில்லறையில் ஒரு அணுவுக்கு வெற்றிலை பாக்கு வாங்கினுன். கடைக்காரன் ஒரு மாதிரியாக அவனைக் கூர்ந்து கவனித்து விட்டு, ''சாமிக்கு எந்த ஊருங்க?'' என்று கேட்டான்.

''எல்லா ஊரும் நம்ம ஊருதானே!'' என்று வேஷத்துக்குப் பொருத்தமாகப் பதிலளித்தான் கந்தசாமி.

கடைக்காரன் சிரித்துக் கொண்டே, ''அதுக்கில்லைங்க சாமி, உங்களைப் பார்த்தால் ரொம்ப சாதுவாகத் தோணுது. ஜாக்கிரதையாக இருங்க. போலீஸ்காரனுங்க ஏதோ கொலை வழக்கு விஷயமா சந்தேகத்தின் பேரிலே பஸ் ஸ்டாண்டில் நின்னுக்கிட்டிருந்த நாலைஞ்சு சாமியார்களை அரஸ்ட்டு பண்ணிருங்களாம்!'' என்ருன்.

கந்தசாமிக்கு அடிவயிற்றைக் கலக்கியது. ''கொலை வழக்கா? சிவசிவா ... சாமியாருங்களா கொலை பண்ணிட்டாங்க? என்ன விவரமுங்க அது?''

''இன்னும் சரியா விவரம் தெரியலைங்க. ஆரணி ரோட்டிலே ஏதோ நடந்திருக்குதுன்னு சொல்லிக்கிருங்க. சாயந்திரம் பேப்பர்லே பார்த்தால் தெரியும்! ஜாக்கிரதையாக இருங்க!''

''ஆண்டவன் இருக்கானுங்க! மடியிலே கனமிருந்தாலல்ல வழியிலே பயம்!'' என்று கூறிக் கொண்டே அங்கிருந்து நகர்ந்தார் கந்தசாமியார்.

என்ன அக்கிரமம்! இந்தச் சாமியார் வேஷக்காரங்க எல்லோருமே இப்படித் தாஞ? அப்படியானல் சந்தேகத்தின் பேரில் அவனை யாராவது 'அரஸ்ட்டு' பண்ணி விட்டால்? அவன் உண்மையான சாமியாரில்லை என்பதை அந்தப் பொய்த் தாடி ஒன்றே நிரூபித்து விடுமே! ஏன் இந்த வேஷம் போட்டுக் கொண்டிருக்கிருய் என்று கேட்டால் எப்படி உண்மையைச் சொல்வது? உண்மையைச் சொல்லாதிருந்தால் உடனே சந்தேகம் பலப்பட்டு விடும். எல்லாம் பொல்லாத காலமாக அல்லவா இருக்கிறது! வேஷத்தை மாற்றி விடலாமென்ருல் வேறு துணி கிடையாது. நேராக இப்பொழுதே ரயில்வே ஸ்டேஷனுக்குப் போகவும் கூடாது. இப்படிப்பட்ட சந்தர்ப்பங்களில் அந்த போலீஸார் அதிகக்கண்ணேட்டம்வைத் திருப்பார்கள் என்று போலீஸ்காரஞன அவன் நன்கு அறிவான். தெருக்களில் திரிவதும் ஆபத்து. சத்திரம் சாவடிகளில் போய்த் தங்குவதும் உசிதமல்ல. வேறு எங்கேயாவது பந்தோபஸ்தான இடத்தில் தங்கி விட்டு இருட்டிய பிறகு ரயில்வே ஸ்டேஷனுக்குப் போவதுதான் நல்லது என்று தோன்றியது.

இவ்வித சிந்தனையால் அலைக்கப்பட்டவனை ஜனசந்தடியுள்ள அந்தப் பெரிய வீதியில் நடமாடப் பயந்து ஒரு சிறிய சந்தில் திரும்பி நடந்தான். பத்துப் பதினைந்து அடி வைத்திருப்பான். மறு கோடியில் பூட்ஸ் ஒலி கேட்டது.

''அதோ! அந்தச் சாமியார்தான்!''

கந்தசாமி நிமிர்ந்து பார்த்தான்...... எதிரே ஒரு போலீஸ்காரனும், காலையில் தான் பெட்டியை வைத்து விட்டு வந்த டீக்கடை ஆசாமியும் அவனை நோக்கி வேகமாக வந்து கொண்டிருந்தனர்.

## இருபத்தெட்டாம் அத்தியாயம்

# பயங்கரச் செய்தி

கந்தசாமிக்கு யோசிக்க நேரமில்லை. திரும்பி ஓடினுல் வீதியிலுள்ளவர்களே பிடித்து அமுக்கி விடுவார்கள். வலப்புறம் ஒரு குறுக்குச் சந்து காணப்பட்டது. சடக்கென்று அதில் புகுந்து விரைவாக ஓடினுன். மீண்டும் இடப்பக்கத்துச்சந்தொன்றில் நுழைந்தான். இது போல் சிறியதும் பெரியதுமாக எதிர்ப்பட்ட இரண்டு குறுக்குத் தெருக்களில் புகுந்து விடுவிடென்று நடந்து சற்றே விசாலமானதும் ஜன சந்தடி குறைவானதுமான வீதியை அடைந்தான். அதன் வலது சாரியில் பெரிய பெரிய மரங்கள் இருந்தன. இடது பக்கத்தில் காலி மனைகள். அவற்றின் இடையே ஒரே ஒரு சிறிய மாடி வீடு. அந்த வீட்டின் கதவு பூட்டப்பட்டிருந்ததைக் கவனித்தான். கந்தசாமி சட்டென்று அவ்வீட்டின் காம்பவுண்டுக்குள் நுழைந்து ஓரமாக ஒளிந்து கொண்டான்.

போலீஸ்காரன் அவனைத் தொடர்ந்து வந்ததாகத் தெரியவில்லை. எவனே ஒரு



வயோதிகன் மட்டும் தலை குனிந்தவண்ணம் வந்து கொண்டிருந்தான். இடது காலைச் சிறிது நொண்டிக் கொண்டு வலது கையை வீசி வீசி நடந்த அந்த ஆசாமியைக் கந்தசாமி ஊன்றிக் கவனித்தான். அவனுக்கு ஆச்சரியமாக இருந்தது. அவன் அந்த வீட்டைத் தாண்டிச் செல்லுவதற்குள் அவரை மெதுவாகக் கூப்பிட்டான்: ''மாமா!''

நேர்ட்டு வேலை முடிந்து பஸ் ஸ்டாண்டை நோக்கி நடந்து கொண்டிருந்த தருமலிங்கம் அக்குரலைக் கேட்டவுடன் திரும்பினார். காம்பவுண்டுக்கருகில் ஒரு பரதேசி நின்றுகொண்டு தம்மைக் கையினால் சைகை காட்டி அழைப்பதைக் கண்டு, ''என்ன சாமி? என்ன வேண்டும்?'' என்றார்.

''நான் சாமியாரில்லை மாமா! நான் தான் கந்தசாமி'' என்றான்.

தமது மருமகனைத் தெரிந்துகொள்ள அவருக்கு அதிக நேரம் ஆகவில்லை. அவனை அந்தக் கோலத்தில் காண அவருக்கு ஒரே திகைப்பாக இருந்தது.

''இது என்ன கந்தசாமி! இங்கே என்ன பண்ணறே! உன் உடுப்பை யாரோ?......''

கந்தசாமி அவரை எச்சரிக்கை செய்தான். ''சும்மா அங்கே பேசிக்கிட்டு நிக்காதிங்க. கொஞ்சம் இங்கே என் பக்கத்திலே வாங்க'' என்றான்.

அவர் உள்ளே நுழைந்தார். கந்தசாமி தணிவான குரலில் அவசரமாகப் பேசினான்.

''மாமா, இங்கே ஒரு பெரிய கேஸ்! இதோ எதிர்பங்களாவைச் சாமியார் வேஷத்திலே துப்பறிஞ்சுக் கிட்டிருக்கேன். அவர்களுக்குத் தெரிஞ்சு போச்சு. வேறே வேஷம் மாத்திக்கணும்....... கொஞ்சம் உங்க வேஷ்டியையும் துண்டையும் அவிழ்த்துக் கொடுத்துவிட்டு இந்த உடையை மாத்திக்குங்க...''

''என்ன பேசறே, கந்தசாமி! நான் வேறே ஏதோ கேள்விப்பட்டேன்...''

''எல்லாம் இப்போது பேச நேரமில்லை. காலையிலே ஊருக்கு வந்து சொல்லுகிறேன். கேஸைப் பாதிக்கு மேல் கண்டு பிடிச்சுட்டேன், இன்னும் ஒரே ஒரு தடயம்தான் பாக்கி மாமா! கொஞ்சம் ஒத்தாசை பண்ணுங்க. உம் சீக்கிரம், சீக்கிரம்!'' என்று கெஞ்சித் துரிதப்படுத்தினான். இருவரும் உடைகளை மாற்றிக் கொண்டார்கள்.

''இந்தக் காவியை மாட்டிக்கிட்டு ஊருக்குப் போனால் சிரிப்பாங்களே!''

''நீங்க ஊருக்குப் போகிறபோது பாதி ராத்திரியாயிடும். யாரும் பார்க்க மாட்டார்கள்'' என்றான் கந்தசாமி.

சாமியார் கோலத்துடன் தருமலிங்கம் தலைவிதியே என்று சுவர் மறைவிலிருந்து வெளியே வந்ததுதான் தாமதம், தன்னை ஏமாற்றிவிட்டு வந்த கந்தசாமியாரைத் தேடிக் கொண்டு வந்த போலீஸ்காரர் அவரை 'லபக்' என்று பாய்ந்து பிடித்துக்கொண்டார்.

''திருட்டுச்சாமி குடுகுடுன்னு ஓடி வந்து இங்கேயா பதுங்கிக்கிட்டிருந்தே! நடஸ்டேஷனுக்கு'' என்று இழுத்தான்.

போலீஸ்காரரோடு இருந்த டீக் கடைக்காரன், ''சாமிக்குத் தாடியைக் காணோமே!'' என்றான்.

உதறலோடு உயிரைக் கையில் பிடித்துக் கொண்டிருந்த கந்தசாமி தாடியை அவிழ்த்துக் கொடுக்க மறந்து போனதை அப்போதுதான் உணர்ந்து கொண்டான்.



''உண்மையான தாடியானால் அப்படியே இருக்கும்! பொய்த்தாடி. ஓடுகிறபோது, கழண்டு விழுந்திருக்கும்......... நடவுங்க ஸ்டேஷனுக்கு.''

தருமலிங்கத்துக்குக் கந்தசாமியின் மீது அசாத்தியமான கோபம் வந்தது. 'எனக்கு ஒன்றும் தெரியாது, அந்த அயோக்கியப் பயல் இங்கே ஒளிந்திருக்கிறான்!' என்று

காட்டிக் கொடுத்துவிட வேண்டுமென்று கூட நினைத்தார். ''போலீஸ்காரரையா! விஷயத்தைக் கேளுங்க!'' என்று அவர் ஏதோ சொல்ல ஆரம்பித்தார்.

போலீஸ்காரர், அவரைப் பேசவே விடவில்லை. ''அடசி! பேசினுல் மண்டை மேலே போடுவேன். உன் பஞ்சாயத்தெல்லாம் ஸ்டேஷனிலே வந்து வைச்சுக்கோ!'' என்று கழுத்தில் கையைக் கொடுத்துப் பலவந்தமாகத் தள்ளிக் கொண்டு போய் விட்டார்.

*       *       *

கந்தசாமி சென்னையைவிட்டுப் புறப்படும் போது முத்தம்மாளிடம் ஒரு செய்தி சொல்லி விட்டுப் போனுன்.

''அக்கா! காளிங்கராயன் தெருவு பதினலாம் நம்பர் வீட்டிலே கண்ணம்மான்னு ஒருத்தி இருக்காங்க. ரொம்பத் தங்கமானவங்க. அவங்க புருஷர் முத்துப்பிள்ளை பெரிய உத்தியோகத்தில் இருந்தவர். சொந்த வீடு. நல்ல பணக்காரங்க. அவுங்க பணத்தைத்தான் இந்தத் தங்கவேலு திருடி விட்டான். விசாரணைக்குப் போனபோதுதான் நான் அவர்களைப் பார்த்தேன். உன்னைப் பற்றி அந்த அம்மா முன்னேயே கேள்விப்பட்டிருக்காங்களாம் உன்னைப் பார்க்கணும்னு துடிச்சுக்கிட்டிருக்காங்க, ஒரு நாளைக்கு நீ போய் அவங்களைப் பார்த்துட்டு வா'' என்ருன்.

தன்னைப் பற்றி முன்னேயே கேள்விப்பட்டுத் தன்னைக் காணத் துடிக்கும் கண்ணம்மாளைப் பார்க்க வேண்டும் என்று முத்தம்மாளுக்கும் ஆவல் எழுந்தது.

முத்தம்மாள் காளிங்கராயன் தெருவில் அவ்வீட்டின் எதிரே நின்றுகொண்டு பதினலாம் நம்பர் அதுதானு அல்லது பக்கத்து வீடோ என்று கவனித்துக் கொண்டிருந்தாள்.

முன்பக்கத்துத் தோட்டத்தில் புஷ்பச் செடிகளுக்குத் தண்ணீர் விட்டுக் கொண்டிருந்த சிங்காரி, தன்னெதிரே பட்டுச் சேலை உடுத்திய யாரோ ஒரு அம்மாள் நின்று உற்றுக் கவனிப்பதைக் கண்டு நிமிர்ந்து பார்த்தாள். மூத்தம்மாளை அவள் ஏற்கனவே ஆஸ்பத்திரியில் பார்த்திருந்தமையால் அப்போது பார்த்தவுடனே நன்ருக அடையாளம் புரிந்து விட்டது.

''வாங்க, வாங்க! உள்ளே வாங்க!'' என்று முகமலர்ச்சியுடன் ஓடிப் போய்த் தோட்டத்துக் கதவைத் திறந்தாள்.

வீட்டருகில் பார்த்ததும் பாராததுமாகக் கிடைத்த குதூகல வரவேற்பைக் கண்டு முத்தம்மாளின் உள்ளம் மகிழ்ச்சியால் நிரம்பி விட்டது.

''கண்ணம்மா இந்த வீட்டிலேதானே இருக்காங்க?'' என்று அவள் வாக்கியத்தை முடிப்பதற்குமுன் சிங்காரி, ''ஆமாம். உள்ளே வாங்க. என் சின்னம்மாதான் அவங்க'' என்று அவளை அழைத்துக் கொண்டு உள்ளே ஓடிளுள்.

''சின்னம்மா! உங்களைத் தேடிக்கிட்டு யார் வந்திருக்காங்க பார்!'' சிங்காரி முத்தம்மாளை அவளுக்கு அறிமுகம் செய்து வைத்தாள்.

''ஓஹோ, நீங்களா! வாங்க வாங்க. உட்காருங்க, எத்தனையோ நாட்களாகப் பார்க்கணும்னு இருந்தேன். ஏன் சிங்காரி, நிக்கறியே!'' என்ருள். சிங்காரி விஷயத்தைப் புரிந்து கொண்டவள் போல்சமையலறையைநோக்கிஓடினுள்.

சிங்காரி கொண்டு வந்த காப்பியைக் குடித்து விட்டுக் கண்ணம்மாளும் முத்தம்மாளும் வெற்றிலைப் பெட்டியைக் காலி செய்து கொண்டே சம்பாஷணையைத் தொடங்கினர்.

இதே சமயம் வீதியில் பத்திரிகைக்காரச் சிறுவன், ''சென்னை கான்ஸ்டபிள் கோரக் கொலை! தினப் பத்திரிகை ஓரணு!'' என்று உரக்கக் கூவிக் கொண்டே சென்ருன்.

முத்தம்மாள் திடுக்கிட்டாள். அறையில் உட்கார்ந்து தமது பழைய





முதல் காக்கை: எனக்கு ரொம்ப அலுப்பா இருக்கு. நம்பர் இரண்டு, குண்டப்பையர் தெருவுக்குப் போய் நீ கத்திவிட்டு வந்து விடு. அவர்கள் விட்டுக்கு நாளைக்கு விருந்தாளி யாரோ வரப் போகிருங்க!

இரண்டாவது காக்கை: ஐயையோ! நான் போகமாட்டேன். அந்த விட்டுக்காரர் 'காக்காய் பிடிக்கிறவர்'ன்னு ஊரெல்லாம் பேசிக்கரு!

கவிதைப் புத்தகங்களில் ஒட்டிக் கொண்டிருந்த கரையானைத் தட்டிக் கொண்டிருந்தார் முத்துப் புலவர். பையனின் சத்தத்தைக் கேட்டு அவர் வெளியே எழுந்து ஓடிப் போய் ஒரு தினப் பத்திரிகையை வாங்கிக் கொண்டு வந்தார். பிறகு ''சிங்காரி! ஓரணு வாங்கிக் கொண்டு போய்க் கொடு'' என்ருர்.

''என்ன போட்டிருக்குதுங்க பேப்பர்லே?'' என்ருள் முத்தம்மாள்.

பேப்பரைப் பிரித்து மௌனமாகப் படிக்கத் தொடங்கிய புலவரின் முகம் வெளிறியது. மனத்தில் எழுந்த பீதியினுல்பேசமாட்டாமல் ஏதோ உளறினுர். முத்தம்மாளின் ஆவல் அதிகரித்தது.

''என்ன சிங்காரி, அது! நீதான் படித்துப் பாரேன்'' என்ருள் கண்ணம்மாள். சிங்காரி பத்திரிகையை வாங்கி அதில் கொட்டை எழுத்தில் பிரசுரிக்கப் பட்டிருந்த செய்தியைப் படித்தாள்.

''வேலூரில் கோரக் கொலே. சென்னை கான்ஸ்டபிள் கொலேயுண்டார்.

''இன்று காலே வேலூர் ஆரணி ரோட்டிலுள்ள டீ கிளப்பில் அடையாளம் தெரியாத சாமியார் ஒருவர் விட்டுச் சென்ற பெரிய டிரங்குப் பெட்டியில் ஒரு போலீஸ்காரனின் பிரேதம் காணப் பட்டது. பெட்டியை வைத்து விட்டு ஐந்து நிமிடத்தில் வருவதாகச் சொல்லிச் சென்ற சாமியார் வெகு நேரம் வரையில் வராமற் போகவே மேற்படி பெட்டி போலீஸாரிடம் ஒப்படைக்கப் பட்டது. சந்தேகத்தின் பேரில் போலீஸார் பெட்டியைத் திறந்து பார்த்ததில் அதில் கழுத்தை நெரித்துக் கொலே செய்யப்பட்ட கான்ஸ்டபிளின் சடலம் கண்டெடுக்கப்பட்டதாகக் கூறப்படுகிறது. இறந்தவரின் உடையிலிருந்தும் நம்பரிலிருந்தும் அவர் சென்னையைச் சேர்ந்த கான்ஸ்டபிள் கந்தசாமி என்று தெரிய வருகிறது......''

''ஐயோ தம்பி!'' என்று அலறினுள் முத்தம்மாள். கண்ணம்மாள் திடுக்கிட்டாள். சிங்காரியின் இதயம் வெடித்து விடும் போலிருந்தது. கையில் இருந்த பத்திரிகையை வீசி எறிந்துவிட்டு, தாங்க மாட்டாத துக்கத்துடன் தன் அறைக்கு ஓடிப் படுக்கையின் மீது விழுந்தாள்.

இதே சமயம் தோட்டத்தில் காலடிச் சத்தம் கேட்டது. கான்ஸ்டபிள் முருகேசன் அவசரமாக வந்தான். அவனது முகம் பேயறைந்தது போலிருந்தது. அவனைக் கண்டதும் முத்தம்மாள் கண்ணீர்ப் பெருக்கத்தோடு அழுதாள்.

''ஒரு மணி நேரத்துக்கு முன்னுலேதான் டெலிபோனில் சமாசாரம் வந்தது. இன்ஸ்பெக்டர் உடனே காரில் புறப்பட்டுப் போயிருக்கிருர். அவன் வேலூருக்கு எதற்காகப் போனுன், அக்கா?'' என்று முருகேசன் கேட்டான்.

கண்ணம்மாள் குற்றவாளியைப் போல் தவித்தாள். தன் வழக்கு விஷயமாகத் தங்கவேலுவைத் தேடிக் கொண்டு போன இடத்தில்தான் கந்தசாமிக்கு இந்தக் கதி நேர்ந்து விட்டது என்று நினைத்தாள் அவள்.

'''இரண்டு மூன்று நாளிலே வந்துடறேன் அக்கா' என்று சொல்லிவிட்டுப் போனுனே, முருகேசா. இன்னிக்கோ நாளைக்கோ வந்துடுவான் என்று நினைச்சேன்! என்னென்ன கோட்டை கட்டினேனடா தம்பி!'' என்று பிரலாபித்த முத்தம்மாளை முருகேசன் தேற்றினுன்.

''என் மனசு சரியாவே இல்லே. இதோ நான் வேலூருக்குப் புறப்பட்டுக்கிட்டிருக்கேன். வீட்டண்டை போனேன். நீங்க இங்கே வந்திருப்பதாகக் கேள்விப்பட்டு உடனே ஓடி வந்தேன்!'' என்ருன் முருகேசன்.

''இந்தப் பாவியையும் கூட்டிக்கிட்டுப் போ, தம்பி!'' என்று புறப்பட்டாள் முத்தம்மாள். ''நானும் வருகிறேன், அக்கா!'' என்று கூடவே கிளம்பினுள் கண்ணம்மாள். இவர்களது பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்த சிங்காரி கண்ணீரும் கம்பலேயுமாகத் தன் அறையிலிருந்து எட்டிப் பார்த்தாள்.

''சின்னம்மா...என்னேயும்...'' என்று மேலே பேச மாட்டாமல் விம்மிய அவளே, ''அப்பா தனியாக இருக்கிருரம்மா. நீ இங்கேயே இரு. நாளைக்கே திரும்பிவிடுவோம்'' என்று சமாதானப் படுத்தினுள் கண்ணம்மாள்.

மூவரும் வெளியே செல்வதை ஏக்கத்தோடு பார்த்துக் கொண்டிருந்தாள் பேதைப் பெண் சிங்காரி. **(தொடரும்)**

Printed and Published by T. Sadasivam at the Kalki Press, Kilpauk, Madras-10
for the Proprietors Messrs Bharathan Publication Private Limited
Mana ing Editor: T. Sadasivam

கான்ஸ்டபிள் கந்தசாமி

ஏ. கே. பட்சோமி

## இருபத்தொன்பதாம் அத்தியாயம்
## இன்ஸ்பெக்டரின்திகைப்பு

இரவு மணி இரண்டு இருக்கும். உலகமே மோனத்தில் ஆழ்ந்த அச்சமயத்திலும் சிங்காரி தன் அறையில் அழுத வண்ணம் உட்கார்ந்திருந்தாள்.

மணிக்கணக்காகப் பித்தம் பிடித்தவர் போல் தமது அறையில் உட்கார்ந்து கொண்டிருந்த முத்துப் புலவர் மெதுவாக எழுந்து வந்தார்.

''குழந்தாய், நீ மனசை அலட்டிக் கொள்ளாதே! விளக்கை அணைத்து விட்டுப் பேசாமல் படுத்துத் தூங்கு!''

சிங்காரி அளவுகடந்த துயரத்தினால் அடித் தொண்டையில் பேசினாள்.

''அப்பா...நான் அதிர்ஷ்ட மில்லாதவள் அப்பா! என் துரதிர்ஷ்டம் என் மீது அனுதாபப்படுகிறவர்களைக் கூடப் பிடித்துக் கொள்ளுகிறது. என்னை அவருக்குக் கட்டிக்கொடுப்பது என்று முடிவு செய்யாமலிருந்திருந்தால் ஒருகால் அவருக்கு இந்தக் கதி நேர்ந்திருக்காதோ என்னவோ? இந்தத் துக்கிரியின்...''

''பைத்தியக்கார எண்ணம், சிங்காரி! ஆண்டவனுடைய சித்தம் எப்படியோ அப்படித்தான் நடக்கும். மனித வாழ்க்கையிலே சிற்சில சந்திப்புகளின் மூலம் வளரும் நேசமும் பாசமும் திடீரென்று ஏற்படும் பிரிவுகளினால் சோகமாக மாறுகின்றன. இத்தகைய சந்திப்புக்கள் ஏற்படாமலேயே இருந்திருந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும் என்று நினைக்கத்தான் தோன்றுகிறது. எல்லாம் அவன் திருவிளையாடல், அம்மா!''

சிங்காரி பெருமூச்சு விட்டாள்.

''எதற்காக அப்பா இந்த ஆண்டவன் இப்படி விளையாட வேண்டும்!''

''உலக வாழ்க்கையின் நிலையில்லாத தன்மையை நமக்கு உணர்த்தி, நிலையுள்ளது எது என்று தேடச் செய்வதற்காகத்தான், குழந்தாய்!''

''டக் டக் டக்!''

வாசற்கதவு தட்டப்படும் ஓசை!

''உன்னைப் பார்க்க வேண்டுமென்று ஓடி வந்தேன், சிங்காரி! கதவைத் திறவேன்......!'' என்று கெஞ்சியது ஒரு குரல். அதற்குமேல் அவளால் வாளாவிருக்க முடியவில்லை. சடக்கென்று தாளைத் திறந்து விட்டாள்.

அடுத்தகணம் கொலையுண்டதாகக் கருதப்பட்ட கந்தசாமி உள்ளே நுழைந்தான். புலவரும் சிங்காரியும் அவனை வியப்போடு பார்த்தார்கள்.

''என்னை யாரும் கொலை பண்ணவில்லை. கொலை செய்யப்பட்டது வேறு ஒருவன்!'' என்றான் கந்தசாமி.

* * *

தருமலிங்கத்தைப் போலீஸ்காரன் தள்ளிக் கொண்டு போவதை மறைவிலிருந்து கவனித்த கந்தசாமி இந்தச் சிக்கலை எதிர் பார்க்கவே யில்லை. டீக் கடைக்காரன் தன்னை அடையாளம் கண்டு பிடித்துக் காட்டி விடக்கூடாதே என்பதற்காக அவன் தருமலிங்கத்திடம் பொய் கூறி உடையை மாற்றப் போக அது வேறு விதமாக முடிந்து விட்டது. ஸ்டேஷனுக்குப் போனதும், தருமலிங்கம் தாம் இன்னார் என்பதையும், இன்ன வேலையாக வேலூருக்கு வந்தார் என்பதையும் மாத்திரம் சொல்லி, காஷாயத்தைப் பற்றியும் சாமர்த்திய

மாக ஏதாவது சரடு திரித்துக் கூறினர் என்றால் அவனுக்கு ஆபத்து இல்லை. ஆனல் அங்கு நடக்கும் 'போலீஸ் மரியாதையில்' மாமன் மருமகன் என்ற உறவெல்லாம் பறந்து போகாதா? இப்போதே, 'போலீஸ்காரய்யா, விஷயத்தைக் கேளுங்க' என்று ஆரம்பித்தவர் போலீஸ் ஸ்டேஷனில் தமக்குக் 'காவி' கிடைத்த வரலாற்றை ஒளிக்காமல் கூறிவிடுவார். இது வரை விலாசம் இல்லாத சாமியாரைத் தேடிக் கொண்டிருந்த போலீஸார் பிறகு ஊர் பெயர் விலாசம் ஆகிய எல்லா விவரங்களுமுள்ள கந்தசாமியைத் தேட ஆரம்பித்து விடுவார்கள்! ஏதோ கொலை வழக்கு விஷயமாகச் சாமியாரைத் தேடுகிறார்கள் என்றல்லவா கூறினன் அந்தக் கடைக்காரன்? ஒருகால் அந்தப் பெட்டி அத்தனை பளுவாக இருந்ததே, உள்ளே பிரேதம் ஏதாவது இருந்ததோ? இப்போது என்ன செய்வது? தருமலிங்கத்தை எப்படி விடுவிப்பது? அல்லது அவரை விதிப்படி ஆகட்டும் என்று விட்டு விட்டு அவன் மாத்திரம் சென்னைக்குத் திரும்பிச் செல்வதா?

இதே சமயம் அவனது பார்வை தற்செயலாக எதிர் பங்களாத் தோட்டத்தின் பக்கம் சென்றது.

அவன் திடுக்கிட்டான். தோட்டத்தின் நடுவே அமைக்கப்பட்டிருந்த கப்பிக் கல் பாதையில் ஒரு பெரிய மோட்டார்கார் நிறுத்தப்பட்டு இருந்தது. எம். பி. எக்ஸ்-4488! அதே காரின் பின்புறத்தில் ஒளிந்து கொண்டு தான் அவன் முதல் நாள் இரவு பனம் பழப்பட்டியி லிருந்து வேலூர் வந்து சேர்ந்தான். மற்றொன்று அந்தப் பங்களாவின் வாசற்படியருகில் நின்றிருந்த மனிதன். அவன் வேறு யாருமில்லை. காலையில் அவனது தலைமாட்டில் அந்தப் பெட்டியை வைத்து விட்டுச் சென்ற அதே கூலிக்காரன்தான். கந்தசாமிக்கு அவனைக் கண்டதும் ஆத்திரம் பொங்கிக் கொண்டு வந்தது. இவனல் அல்லவா இத்தனை ஆபத்தும்? ஏன் இப்போதே இவனைப் பிடித்துப் போலீஸிடம் ஒப்படைத்துவிடக் கூடாது? அவன் இருப்பிடத்தை விட்டு வெளி வந்து அந்த ஆசாமியின் மீது ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து பிடித்தான்.



''அயோக்கிய ராஸ்கல்! அம்புட்டுக்கிட்டாயா? நீ அந்தப் பெட்டியைக் கொண்டு வந்து என் தலையிலே கட்டிய பிறகு போலீஸ் என்னையல்லவா துரத்திக்கிட்டிருக்குது; உன்னைப் பிடிச்சுப் போலீஸிலே கொடுத்துட்டுத்தான் மறு வேலை'' என்று அவனைப் பிடித்து ஒரே யடியாக உலுக்கினன் கந்தசாமி.

அந்த ஆசாமி கந்தசாமியைக் கெட்டியாகப் பிடித்து உட்புறம் இழுத்துக் கொண்டே, ''என்ன பாய்! என்ன பேசறே! நீ கொஞ்சம் உள்ளே வந்து பேசு!'' என்றான்.

கந்தசாமி உடுத்தி யிருந்த லுங்கி போன்ற கட்டம் போட்ட சிவப்புத் துணியும் தலைப்பாகையும் தாடியும் சேர்ந்து, அவன் ஒரு முஸல்மான் என்ற பிரமையை உண்டாக்கின போலும்.

வெளியே நடந்த சலசலப்பைக் கேட்டு உள்ளேயிருந்து மற்றொரு ஆசாமி விரைவாக ஓடி வந்தான்.

''இவன் யாரோ உளவாளி! உள்ளே இழுத்துக்கிட்டுப் போகணும்!'' என்றான் முதலில் பேசியவன்.

இருவருமாகச் சேர்ந்து கந்தசாமியை அவன் என்ன திமிரியும் விடாமல் பங்களாவுக்குள் இழுத்துச் சென்றனர். கதவு தாளிடப் பட்டது. அவன் பலவந்தமாகச் சரசர என்று மாடிக்கு இழுத்துச் செல்லப் பட்டான்.

மாடியின் முன்புறத்து ஹாலில் ஒரு பெரிய மேஜையருகில் ஆஜானு பாகுவான மனிதனொருவன் உட்கார்ந்திருந்தான். அவனுடைய உடையும் கறுத்த முகமும், வில் மீசையும், இரத்தம் போல் சிவந்த கண்களும், கம்பீரமான தோற்றமும் பார்க்கப் பயங்கரமாயிருந்தன. அவன் கந்தசாமியைக் கண்டதும் தனது ஆட்களை நோக்கி, ''யார் இந்தத் துருக்கப் பயல்?'' என்று அதட்டலாகக் கேட்டான்.

பெட்டியைக் கொண்டு வந்த ஆள் அவன் அருகில் சென்று காதோடு ஏதோ ரகசியமாகக் கூறினன்.

கந்தசாமி அவனது முகத்தை நிமிர்ந்து நோக்கினன். இந்தக் கம்பீரமான முகம், இந்த அதிகாரக் குரல் எல்லாம் அவனுக்கு முன்னமேயே பரிச்சயமான

வையாகத் தோன்றின. யார் இந்த ஆசாமி? இதற்கு முன் எந்த இடத்தில் பார்த்திருக்கிறேன்?

''ஏய்! உனக்கு இங்கே என்ன வேலை?'' என்று கர்ஜித்துக் கொண்டே எழுந்தான் அவன்.

கந்தசாமி பதில் பேசவில்லை.

''ஏய், சாம்பிராணி! என்ன? கேட்கிறேன் பதில் பேசாமல் இருக்கிறாய்?'' என்று அதட்டிக் கொண்டே அவனது தாடியைப் பிடித்து உலுக்க முயன்றான். மறுகணம் அந்தப் பொய்த் தாடி பிய்ந்து அவனது கையோடு வந்து விட்டது. அவ்வளவுதான்; அடுத்த விநாடி ஆட்கள் இருவரும் அவனது கைகளைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டனர். அவர்களது எசமானனான அந்தத் தடித்த ஆசாமியின் கடுகடுத்த முகத்தில் வியப்பும் குரலில் பரிகாசமும்தொனித்தன.

'' சபாஷ்! கந்தசாமி! ........சூரப்புலி தான்! என்னை வேவு பார்க்க வந்தாயா?'' என்று கேட்டான் அந்த மனிதன்.

கந்தசாமிக்கு அவன் யாரென்று ஞாபகம் வந்து விட்டது! அவனது சப்த நாடியும் ஒடுங்கி விட்டது. ''கருப்...பண்ண...சாமி!...'' என்று முணுமுணுத்தன அவனது உதடுகள்!

''தங்கவேலு!'' என்று கூப்பிட்டான் கருப்பண்ணசாமி. கந்தசாமியின் ஆச்சரியத்துக்கு எல்லையில்லை. மருதம்மாளின் அண்ணன் மகன் என்று சொல்லிக் கொண்டு மந்தாரப்பேட்டையில் அவளது வீட்டில் தங்கியிருந்த அவனது ஜன்ம விரோதியான அதே தங்கவேலு அடுத்த அறையிலிருந்து வந்தான்.

'' இவனைப் பற்றித்தானே நீ அன்று என்னிடம் சொன்னாய்?'' என்று கேட்டான் கருப்பண்ணசாமி.

'' இவனேதான் சார்! ஆசாமி சரியான சூரன்! இவன் உடுப்பைத்தான் கனகசுந்தரம் மாட்டிக்கிட்டிருந்தான்'' என்றான் தங்கவேலு.

கருப்பண்ணசாமி கடகடவென்று சிரித்துவிட்டுச் சொன்னான்:

'' கந்தசாமி! இந்நேரம் நீ செத்துப் போன செய்தி எல்லாத் தினசரிப் பத்திரிகைகளிலும் வெளி வந்திருக்கும்!''

கந்தசாமி திடுக்கிட்டான்.

இதே சமயம் கீழே வாசற்கதவு தட்டப்படும் ஓசை கேட்டது.

கருப்பண்ணசாமி தன் ஆட்களில் மற்றொருவனை அழைத்துத் தணிவான குரலில் உத்தரவிட்டான். ''போய்ப் பார்!...போலீஸாக இருந்தால்......''

'' என்ன சொல்லணும்னு தெரியுமுங்க எசமான்!'' என்று கூறிவிட்டுக் கீழே இறங்கிச் சென்றான் அவன்.

தங்கவேலு கருப்பண்ணசாமியின் உத்தரவுக்காகக் காத்திருப்பவனைப் போலக் காணப்பட்டான்.



''இந்தக் கழுதையை நமது 'விருந்தாளி அறை'யில் கொண்டு போய்த் தள்ளு!'' என்றான் அந்த எசமான்.

கந்தசாமி திமிறினான். தங்கவேலு அவனது கழுத்தில் அறைந்து தள்ளிக் கொண்டு போனான்.

'' கூச்சல் கீச்சல் போட்டே, இன்னொரு பெட்டி தயாராக இருக்குது!'' என்று மெதுவான குரலில், ஆனால் கடுமையாக உறுமிக் கொண்டே அவனைப் பின்புறத்திலிருந்தஇருண்டஅறையொன்றில் இழுத்துக் கொண்டு போய்த் தள்ளினான் தங்கவேலு. அறைக் கதவு வெளிப்புறம் இழுத்துத் தாளிடப்பட்டுப் பூட்டப்பட்டும் விட்டது.

போலீஸ்காரனிடமிருந்து தப்பினோம் என்று நினைத்துக் கொண்டேயிருந்த போது அதைவிடப் பேராபத்தில் அல்லவா அவன் சிக்கிக் கொண்டான்!

காலையில் அவன் சுமந்து கொண்டு அலைந்த பெட்டியில் கனகசுந்தரம் என்பவனின் பிரேதம்தான் இருந்திருக்க வேண்டும் என்பதில் ஐயமில்லை. தனக்கும் எங்கே சமாதி கட்டி விடுவார்களோ என்ற திகில் கந்தசாமியைப் பிடித்துக் கொண்டது.

கூடத்தில் தங்கவேலுவின் குரல் தெளிவாகக் கேட்டது.

'' ஸார், ஸார்! மோப்பம் பிடிச்சுட்டாங்க ஸார்!...''

அதற்குமேல் கசமுசவென்று அவர்கள் பேசிக் கொண்டவை ஒன்றும் அவனது காதுகளில் விழவில்லை. மெதுவாக நகர்ந்து குகை போல் இருண்டு கிடந்த அச்சிறிய அறையின் சுவர்களைத் துழா

விப் பார்த்தான். ஒரு சிறிய சாளரமோ துவாரமோகூடக் காணப் படவில்லை. பேசாமல் ஒரு மூலையில் போய்த் தலையில் கையை வைத்துக் கொண்டு உட்கார்ந்து விட்டான். பற்பல எண்ணங்கள் அவனைச் சித்திரவதை செய்தன.

கும்பாளம்மன் சந்தில் நடந்த கொள்ளை, கனகசுந்தரத்தின் கொலை இரண்டிலுமே கருப்பண்ணன் சம்பந்தப் பட்டிருக்கிறான். இன்னும் அந்த முந்திரித் தோப்புக் கூட்டத்துக்கும் அவனுக்கும் சம்பந்தம் இருக்கிறது. ஒருகால் அந்தக் கூட்டத்துக்கு இவன்தான் தலைவன் போலும்!

கொலையுண்ட கனகசுந்தரத்தின் குரலும்கூட அவனுக்குப் பரிச்சயமான தாகத்தான் இருந்தது. இந்தத் தங்கவேலுப் பயலின் வண்டவாளங்களும் அம்பலமாகி விட்டன!......

சுமார் அரைமணி நேரம் கழிந்தது. திடீரென்று கீழ்த்தளத்தில் பல ஆட்கள் ஓடி வருவது போன்ற அரவம் கேட்டது. மாடியிலும் கனத்த பாதரட்சைகளின் ஒலி கேட்டது. கந்தசாமி காது கொடுத்துக் கூர்ந்து கவனித்தான்.



இரண்டு மூன்று பேர் பேசினார்கள்.

''எங்கே யாரையுமே காணவில்லை?''

''அந்த ஆசாமியைக் கூடக் காணோமே! இந்த வீட்டுக்குள்ளே தானே நுழைந்தான் அவன்?''

''இதோ இருக்கிறது ஸார் அவனுடைய பொய்த் தாடி!''

கந்தசாமிக்குப் புரிந்து விட்டது. கருப்பண்ணசாமி அப்பொழுதே அவனை 'வேவு பார்க்க வந்திருக்கிறாயா?' என்று கேட்டான். அடுத்தாற்போல் வெளிக் கதவைத் தட்டியது போலீஸைச் சேர்ந்தவர்களாகத்தான் இருக்க வேண்டும்! ஆகவே தன் சகாக்களுடன் அந்தக் கொள்ளைக்காரன் இந்த இடத்தைக் காலி செய்து கொண்டு ஓடி விட்டான் போலும். இப்போது இங்கே வந்திருப்பது நிச்சயம் போலீஸ் படையாகத்தான் இருக்க வேண்டும்!

அவனது உள்ளம் மகிழ்ச்சியினால் துள்ளியது. இனி அபாயமில்லை! அவன் எழுந்து கதவைத் தடதடவென்று வேகமாகத் தட்டினான்.

''சத்தம் எங்கிருந்து வருகிறதென்று பார்!'' என்று ஒரு குரல் கேட்டது.

''அதோ! பின் பக்கத்திலிருந்து சத்தம் கேட்கிறது, ஸார்!''

சிறிது நேரத்தில் அவ்வறையின் கதவு உடைத்துத் திறக்கப்பட்டது. வெளியே ஆயுத பாணிகளான ஏழெட்டு கான்ஸ்டபிள்களுடன் ஒரு இன்ஸ்பெக்டர் நின்று கொண்டிருந்தார். கந்தசாமி மெதுவாக வெளியே வந்ததும் இன்ஸ்பெக்டர் அவன்மீது பாய்ந்து கெட்டியாகப் பிடித்துக் கொண்டார்.

''இவன்தான் அந்தக் கிழவன் தரும லிங்கம் சொன்ன ஆசாமியாக இருக்க வேண்டும் ஸார்! அரையில் வெள்ளைக் கட்டம் போட்ட சிவப்புத் துணி கட்டியிருக்கிறான் பாருங்க!'' என்றான் ஒரு கான்ஸ்டபிள்.

அவனது கைகளில் விலங்குகள் மாட்டப்பட்டன. வீட்டைச்சோதனை போட்டுப் பார்க்கும்படி இரண்டு மூன்று பேரை நிறுத்தி விட்டு மற்றவர்களுடன் ஸ்டேஷனுக்குத் திரும்பினார் போலீஸ் இன்ஸ்பெக்டர். கந்தசாமியையும் இழுத்துக் கொண்டு சென்றார்கள்.

போலீஸ் ஸ்டேஷனில் தரும லிங்கம் இன்னும் சாமியார் உடையிலேயே பந்தோபஸ்தாக இருந்தார். கந்தசாமியைக் கண்டதும் அவர் தமது முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டு விட்டார்.

''இவன்தானா ஐயா நீ சொன்ன ஆசாமி?'' என்று கேட்டார் போலீஸ் இன்ஸ்பெக்டர்.

''ஆமாம்'' என்று ஒரே வார்த்தையில் திரும்பிப் பாராமலேயே பதிலளித்தார் தருமலிங்கம்.

இன்ஸ்பெக்டர் காகிதத்தையும் பேனாவையும் கையிலெடுத்துக் கொண்டார்.

''ஏய்! உன் பெயரென்ன?''

''கந்தசாமிங்க ஸார்!''

''எந்த ஊர்?''

''சென்னை.''

''தொழில்?''

''கான்ஸ்டபிள் ஸார்!''

''என்ன உளறுகிறாய்! யோசித்துப் பதில் சொல்லு! நீயா கான்ஸ்டபிள்?''

''ஆமாம் ஸார்! சென்னை மந்தாரப் பேட்டை டிவிஷன்!''

இன்ஸ்பெக்டர் அவனை வியப்போடு நிமிர்ந்து நோக்கினார்.

''நீயா கான்ஸ்டபிள் கந்தசாமி?'' இந்தச் சமயத்தில் இன்னொரு எதிர் பாராத சம்பவம் நடந்தது. ஸ்டேஷன் வாசலில் வந்து நின்ற காரிலிருந்து மந்தாரப்பேட்டை இன்ஸ்பெக்டர் பூவராகம் இறங்கினார். அவரைக் கண்டதும் கந்தசாமி அடைந்த ஆனந்தத்துக்கு எல்லையில்லை. 'ஸல்யூட்' அடிப்பதற்குக் கைகள் சுவாதீனத்தில் இல்லை. ''ஸார், ஸார்!'' என்று கத்தினான்.

பூவராகத்துக்கு அவனை அங்கு கண்டதும் ஒரே ஆச்சரியமாகப் போய் விட்டது. ஒரு கணம் அவர் அப்படியே திகைத்து நின்றார்.

## முப்பதாம் அத்தியாயம்

# சபாஷ் கந்தசாமி!

''என்ன கந்தசாமி, நீ எப்படி இங்கே!......அட இது என்ன மிஸ்டர் அமிர்தலிங்கம்! இவனை எதற்காகக் கைது செய்திருக்கிறீர்கள்?''

இன்ஸ்பெக்டர் அமிர்தலிங்கத்துக்கு எல்லாம் ஒரே புதிராக இருந்தது.

''உங்கள் ஸ்டேஷனைச் சேர்ந்த கந்தசாமியா இவன்? நீங்கள் ஆஸ்பத்திரியில் அந்தப் பிரேதத்தைப் பார்த்தீர்களா?'' என்று கேட்டார்.

''பார்த்தேன் ஸார்! அவன் கந்தசாமியின் உடையைப் போட்டுக் கொண்டிருக்கிறானே தவிர, கந்தசாமியல்ல. இதோ இவன்தான் எங்கள் ஸ்டேஷன் கந்தசாமி! கொலையுண்டவன் பெயர் கனகசுந்தரம்! அவனை நாங்கள் வேறு ஒரு கேஸ் விஷயமாகத் தேடிக் கொண்டிருந்தோம். சில மாதங்களுக்கு முன்னால் சென்னை ராவண கான சபாவில் மாதவி வேஷம் போட்ட ஆசாமி. அவன்தான் வைர மாங்காய் மாலையுடன் கம்பி நீட்டி விட்டான் என்ற செய்தியைப் பத்திரிகையில் பார்த்திருப்பீர்களே! உங்களுக்கும் கூடத் தகவல் வந்திருக்கும் என நினைக்கிறேன்! அதே ஆசாமிதான் இந்தக் கனகசுந்தரம்...... உம், நீங்கள் நமது கந்தசாமியை எதற்காகப் பிடித்து வைத்திருக்கிறீர்கள்?... ஏன் கந்தசாமி, நீ 'லீவில்' அல்லவா போயிருந்தாய்? உன்னுடைய 'டிரஸ்' அவனிடம் எப்படிப் போயிற்று?''

கந்தசாமி தொண்டையைக் கனைத்தான். அவனுக்குப் பல சந்தேகங்கள் 'பளிச்பளிச்'சென்று விளங்கின. அந்தப் போலிச் சாமியார் மாதவி வேஷம் போட்ட கடலூர் கனகசுந்தரம்தான்! 'மாங்காய்' என்று அவன் குறிப்பிட்டது அந்த வைர மாங்காய் மாலையைத்தானிருக்கும்!......கந்தசாமியின் கவலைகள் பறந்தன. உற்சாக மிகுதியில் மூளை மின்னல் வேகத்தில் வேலை செய்தது. இன்ஸ்பெக்டரின் கேள்விகளுக்குத் தக்க பதில் அவனது மூளையில் உடனே தயாராகி விட்டது!

''அது ஒரு பெரிய கதைங்க ஸார்...!'' என்று ஆரம்பித்தான் கந்தசாமி.

''நானும் அன்றைக்கு நாடகம் பார்க்கப் போயிருந்தேனுங்க. கனகசுந்தரத்தின் முகம் என் மனசிலே நல்லா பதிஞ்சு போச்சு. நான் லீவு எடுத்ததே இந்தக் கேஸைக் கண்டு பிடிக்கத்தானுங்க. எங்கள் மாமன் ஊருக்குப் பக்கத்திலே முந்திரித் தோப்பிலே ஒரு பெரிய கொள்ளைக் கூட்டம் இருக்குது. அதாவது நம்ப கும்பாளம்மன் சந்திலே வைரக் கொள்ளை நடந்துச்சு பாருங்க! அதே கூட்டம்தான்! அடையாற்றுப் பங்களாவிலே தங்கி யிருந்து இன்ஸ்பெக்டர் அளகிரிசாமி நாயுடுவைக் கட்டிப் போட்டு விட்டு ஓடிய அதே ஆசாமிங்க! இந்தக் கனகசுந்தரமும் அந்தக் கூட்டத்திலே சேர்ந்தவன்தான். இவன் 'அடித்து'க் கொண்டு போன 'மாங்காயை' இன்னும் விற்கவில்லைங்க. நான் சாமியார் வேஷம் போட்டு இவங்களை 'ஷேடோ' பண்ணிக்கிட்டே போய் எல்லாத்தையும் கண்டு பிடிச்சேனுங்க. இந்தச் சமயத்திலே எக்கச் சக்கமாக என் கையிலே வைச்சிருந்த உடுப்பு மூட்டை அவன் கையிலே சிக்கிக் கொண்டதுங்க!......''

கந்தசாமி சற்று இடையில் நிறுத்தினான். இன்ஸ்பெக்டர்கள் பூவராகமும் அமிர்தலிங்கமும் அவன் மேற்கொண்டு என்ன கூறப்போகிறானோ என்று மிகுந்த ஆச்சரியத்தோடு அவன் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தனர்.

''அப்புறம்?'' என்றார் பூவராகம், ஆவலை அடக்கமாட்டாதவராக.

''அப்புறம் இவங்க முந்திரித்தோப்பி லிருந்து வேலூருக்குக் காரிலே வந் தாங்க. நானும் குறுக்கு வழியாக வேலூருக்கு எப்படியோ வந்து சேர்ந் தேன். இதுக்குள்ளே, மாங்காய் மாலை விஷயமாக ஏற்பட்ட தகராறிலே, கொள்ளைக் கூட்டத் தலைவன் கருப் பண்ணசாமி, இந்தக் கனகசுந்தரத்தைக் கொலை செய்து விட்டிருக்கிறான். நான் வேலூரை அடைந்த சமயத்திலே அவ னுடைய ஆசாமிகள் பிணத்தை ஒரு டிரங்குப் பெட்டியிலே போட்டுத் தூக் கிக்கிட்டு வந்தாங்க. என்னைப் பார்த்த துமே அதை ஓரமாகப் போட்டு விட்டு ஓட்டம் பிடிச்சாங்க. போலீஸ் ஸ்டேஷ னுக்கு உடனே தகவல் கொடுக்கவோ பெட்டியைப் போலீஸில் ஒப்படைக் கவோ நேரமில்லைங்க. அதனாலே பெட்டி யைத் தூக்கிட்டுப் போய் ஒரு டீக் கடை யில் வைச்சுட்டு இவங்களைத் தேடிக் கொண்டு ஓடினேன்.

''அதிர்ஷ்ட வசமாக அந்தக் கொள் ளைத் தலைவன் கருப்பண்ணசாமி இந்த வேலூரிலே தங்கியிருக்கிற பங்களாவை யும் கண்டு பிடித்தேன். அந்தப் பங்களா வுக்குள்ளே போய் அங்கிருக்கிற மர்மத் தையும் பார்க்கணும் என்று தோன்றி யது. ஆனால் அதற்குள்ளாக அந்தத் திருட்டு ஆசாமிகளுக்கு என் சாமியார் வேஷம் தெரிந்து போயிடுச்சு. ஆகை யால் வேறே என்ன வேஷம் போடலாம் என்று யோசனை பண்ணிக்கிட்டிருக்கை யில் அந்தப் பக்கம் என் மாமன் தரும லிங்கம் வந்தாருங்க. அவரிடம் காவித் துணியைக் கொடுத்துட்டு அவருடைய துணிகளை வாங்கிச் சாயபு வேஷம் போட்டுக்கிட்டு அந்தப் பங்களாவுக்குள்ளே நுழைஞ்சேன்...''

''அப்படியானால் இந் தக் கிழவர் உனது மாமனா?'' என்றார் வேலூர்இன்ஸ்பெக்டர்.

''இதில் சந் தேகம் வேறெங் களா?'' என்றான் கந்தசாமி.

''இந்த ஆள் அதைச் சொல் லாமல் உன்னைக் காப்பாற்றுவதற்காக 'யாரோ ஒரு முரடன் தன்னை அடித்து உடைகளைப் பறித்துக் கொண்டு இந்தக் காவியைக் கொடுத்து விட்டான்' என்றல்லவா கூறினார்! அந்தப் பங்களா விஷயமாக ஏற்கெனவே எங்களுக்கும் சந்தேகம். அதோடு மேலும் சந்தேகாஸ்தபமான நிலையில் நீயும் அதில் நுழைந்திருக்கிறாய் என்று கேள்விப்பட்டதும், நான் ஆட் களுடன் அங்கே ஓடி வந்தேன்'' என் றார் அமிர்தலிங்கம்.

கந்தசாமி தன்னுடைய கதையைத் தொடர்ந்து கூறினான் :

''அந்தக் கட்டடத்துக்குள்ளே வேவு பார்க்க நுழைஞ்சதிலிருந்து நமது பேட்டையிலே காளிங்கராயன் தெரு வீட்டில் திருடின தங்கவேலு என்கிற ரௌடியும்கூட இந்தக் கூட்டத்தில் தான் இருக்கிறான் என்று தெரிஞ்சுபோச் சுங்க! இன்னும் இந்தக் கொலை விஷய மாக பூரா விவரத்தையும் கண்டு பிடிக் கிறத்துக்குள்ளே அந்தக் கருப்பண்ண சாமி என்னை அடையாளம் கண்டு கொண்டான். முன்னமேயே அவனுக்கு நான் யார், எப்பேர்ப்பட்டவன் என்று தெரியுமுங்க. கும்பாளம்மன் சந்திலே கொடுத்த சூட்டை ஆசாமி இன்னும் மறக்கவில்லைங்க. பத்துப் பதினைஞ்சு பேர் துப்பாக்கியும் கத்தியுமாக என் மேலே பாய்ஞ்சு வந்தாங்க. நான் ஒருத் தன் எத்தனை நேரம் சமாளிக்க முடியும்? கடைசியில் அந்த அறையிலே சிக்கிக் கிட்டு அங்கிருந்து தப்பிச்சு வர வழி தேடிக்கிட்டிருந்தேன். தப்பிச்சு வந்தால் நேராக இந்த ஸ்டேஷனுக்கு வந்து 'ரிபோர்ட்' கொடுத்து இவர்களை அழைச்சுக்கிட்டுப் போகணும்னு தீர்மா னிச்சுட்டேனுங்க. ஆனால் கருப்பண்ண சாமியும் அவன் சகாக்களும் பயந்து போய் ஓடி விட்டார்கள். அதற்குள்ளே என்னைப் பிடிச்சு விலங்கு மாட்டி விட்டாங்க.''

கந்தசாமியின் கைவிலங் குகள் அகற்றப்பட்டு விட் டன. தருமலிங்கமும் விடு தலை செய்யப்பட்டார்.

''இவன் என் மருமகன் தானுங்க! பயத்தினாலே 'யாரோ முரடன்' என்று சொன்னதை மன் னிச்சிடுங்க!'' என் றார் தருமலிங்கம்.

இன்ஸ்பெக்டர் பூவராகம் கந்தசாமி யின்முதுகில் தட்டிக் கொடுத்தார்.



"கந்தசாமி, உன்னை என்னவோ என்று நினைத்தேனப்பா! ஆனால் இப்படித் தன்னந் தனியாக மற்றவர்களுடைய உதவியுமின்றி யாரிடமும் தெரிவிக்காமல் இது போன்ற கேஸ்களில் இறங்குவது சிற்சில சமயங்களில் உயிருக்கே ஆபத்தாக முடியும்!......உம், இப்போது மேற்கொண்டு ஆக வேண்டியவற்றைக் கவனிக்க வேண்டும். அந்தக் கொள்ளைக்காரர்கள் இப்போது எங்கே இருப்பார்கள் என்று ஏதாவது அனுமானிக்க முடியுமா?''

''ஹூம்! இது என்னங்க பிரமாதம்?'' என்றுமுந்திரித்தோப்பைப் பற்றித் தனக்குத் தெரிந்த விவரங்களுக்குக் கண் காது மூக்கு ஒட்ட வைத்து வர்ணித்தான்.

பூவராகம் அமிர்தலிங்கத்துடன்மந்திராலோசனை நடத்தினர். தாமதமின்றிக் கந்தசாமியின் உதவியோடு ஒரு பெரிய போலீஸ் படை முந்திரித் தோட்டத்தை நோக்கிப் புறப்பட்டது.



* * *

தன் எதிரே நிற்கும் உருவம் பேய் அல்ல அசல் மனிதன்தான் என்று புரிந்து கொள்ள முத்துப் புலவருக்கு வெகு நேரம் பிடித்தது. பிறகுதான் அவரது பயம் நீங்கியது. என்றாலும் முன் ஜாக்கிரதையாகச் சிறிது எட்டவே உட்கார்ந்து கொண்டு அவனிடம் பேசினார். கந்தசாமி உயிரோடு திரும்பி வந்துவிட்டான் என்பதில் சிங்காரிக்குக் கரைகாணாத ஆனந்தம் ஏற்பட்டது. அந்த நள்ளிரவிலும் அவள் எழுந்து ஓடிப் போய் அடுப்பைப் பற்ற வைத்துப் பலகாரம் செய்து களைப்புற்றிருந்த கந்தசாமிக்கும் பசியோடிருந்த தன் தந்தைக்கும் கொடுத்தாள்.

கந்தசாமி இன்ஸ்பெக்டர் பூவராகத்தினிடம் கூறிய அதே கதை, இப்போது புலவரிடமும் சிங்காரியிடமும் கூறுகையில் விசுவரூபம் எடுத்துவிட்டது. அவனது வீர தீரச் செயல்களைக் கேட்டு அவர்கள் அப்படியே மலைத்துப் போனார்கள். கந்தசாமி கூறினான்:

''சிங்காரி! ஒரு ஆசாமி விடாமல் அந்தக் கொள்ளைக் கூட்டம் பூராவையும் தொரத்தித் தொரத்திப் பிடிச்சு வேலூரர் போலீஸிடம் ஒப்புக் கொடுத்திட்டேன். எவ்வளவு நகைகள்! எவ்வளவு சொத்து! அடா அடா அடா...''

''நம்ம வீட்டிலே கொள்ளைபோன பணம் கூட அதில் இருந்ததா கந்தசாமி?'' என்று கேட்டார் புலவர்.

''நம்ம பணம்னு நோட்டு மேலே பேரா போட்டிருக்கும்? லட்சக்கணக்கா இருந்த பணத்திலே இதுவும் ஒன்றாகச் சேர்ந்துதான் இருக்கும்.''

''கொள்ளைக்காரர்களைப் பிடிச்சுக் கொடுத்தப்புறம் என்ன பண்ணினீங்க?'' என்று கேட்டாள் சிங்காரி ஆவலோடு.

''அப்புறம் என்ன! உங்களைப் பார்க்கணும்னு மனசு துடிச்சுது! நேரமாராத்திரி பன்னிரண்டு மணியாய்ப்போச்சு! ரயிலா பஸ்ஸா ஒண்ணும் கிடையாது. என்னடா பண்ணலாம்னு பார்த்தேன். நல்லகாலமா இன்ஸ்பெக்டர் பூவராகம், அவசரமாகக் கமிஷனரைப் பார்த்துப் பேசணும்னு காரிலே புறப்பட்டார். நானும் அதிலேயே தொத்திக்கிட்டு 'விர்'னு வந்துட்டேன். எங்க வீட்டுக்குப் போய்ப் பார்த்தால் கதவு பூட்டிக் கிடக்குது. நேரா இங்கே வந்துட்டேன்'' என்று கூறிச் சிரித்தான் அவன்.

* * *

காலை எட்டு மணிக்கெல்லாம் கண்ணம்மாளும் முத்தம்மாளும் வேலூரிலிருந்து திரும்பி விட்டனர். கந்தசாமியைக்கண்ட முத்தம்மாள் ''தம்பி! ஈ!'' என்று ஆனந்தக் கண்ணீர் விட்டாள்.

அன்று வேலூர் மட்டுமல்லாமல் சென்னை நகரமும் கூட அல்லோலகல்லோலப்பட்டுப் போயிற்று. பத்திரிகைகள் கொட்டை கொட்டையான எழுத்தில் கொள்ளைக் கூட்டம் பிடிபட்ட விவரங்களைப் பிரசுரித்தன. பத்திரிகை நிருபர்கள் கந்தசாமியைப் பேட்டி கண்டு நச்சரித்து விட்டனர். அவனது புகைப்படத்தைப் போட்டு அவனை 'வீரன், தீரன், அஞ்சா நெஞ்சன்' என்றெல்லாம் பிரமாதப்படுத்தினர்.

அடையாறு பங்களாவில் இருந்த கூட்டமும், பனம்பழப்பட்டி முந்திரித் தோப்பில் பிடிபட்ட கூட்டமும் ஒன்றுதான் என்று கேள்வியுற்ற அளகிரிசாமி நாயுடுவுக்கும் ஏட்டு கோவிந்தப் பிள்ளைக்கும் ஏற்பட்ட மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. அவர்கள் கந்தசாமியைப் பார்ப்பதற்காக ஆஸ்பத்திரியிலிருந்து காரில் வந்தார்கள்.

இத்தனை வைபவத்துக்கும் மேலாக, போலீஸ் கமிஷனரே கந்தசாமியுடன் கை குலுக்கி அவனைப் புகழ்ந்தார்.

''கந்தசாமி நமது இலாகாவுக்கே பெருமை தரக்கூடிய பொக்கிஷம்! அவனைச் சீக்கிரமே ஹெட்கான்ஸ்டபிள் பதவிக்கு உயர்த்துவதாகவும் அவனது தீரத்தைப் பாராட்டி அவனுக்கு ஆயிரம் ரூபாய் பரிசளிப்பதாகவும் நமது இலாகா தீர்மானித்து விட்டது!'' என்று அவர் கூறியபோது அவனுக்கு இந்திர லோகத்தில் சஞ்சரிப்பதுபோலவே இருந்தது.

''இவன் என்னுடைய வலது கை, சீடன் ஸார்!'' என்று சொல்லிப் பெருமைப்பட்டுக் கொண்டார் இன்ஸ்பெக்டர் அளகிரிசாமி.

கந்தசாமியின் கனவு நனவாகி விட்டது. ஒன்று! இரண்டா! பாங்கிக் கொள்ளை! கும்பாளம்மன் சந்துக் கொள்ளை! ராவணகான சபா கேஸ்! அடையாறு பங்களா கேஸ்! காளிங்கராயன் தெரு திருட்டு! முந்திரித் தோப்பு மர்மம்! இத்தனைக்கும் மேலாக ஒரு கொலைக் கேஸ்!—இவ்வளவையும் ஒரே மூச்சில் கண்டு பிடித்த பெருமை அவனைச் சேர்ந்துவிட்டது!

அன்று கண்ணம்மாளின் வீட்டில் கந்தசாமியைப் பாராட்டுவதற்காக ஒரு விசேஷ விருந்து வைக்கப்பட்டது. ஊரிலிருந்து தருமலிங்கமும் முனியம்மாளும் கூட வந்திருந்தனர். சாப்பாட்டுக்குப் பிறகு விருந்தினர்கள் அனைவரும் கூடத்தில் உட்கார்ந்து ஆனந்தமாகப் பேசிக் கொண்டிருந்தனர். முத்துப் பிள்ளை அநேக வருடங்களுக்குப் பிறகு குதூகலத்தோடு, சகஜமாகப் பேசினர்.

''இதோ பார் கண்ணம்மா! கந்தசாமி சொல்லி விட்டான்; கொள்ளை போன நமது பணம் வெகு சீக்கிரம் கேஸ் முடிந்தவுடன் கிடைத்து விடுமாம்.''

''ஆமாம், நான் கமிஷனரையே நேரா ஒரு பேச்சுக் கேட்டுவிட்டேன்! உங்க பணம் திரும்பிவிடும்! உங்களுக்கு நான் கொடுத்த வாக்கை நிறைவேற்றி விட்டேன்......'' என்றான் கந்தசாமி.

''என்னமோ தம்பி, நீ இவ்வளவு தூரம் உயிரையேகூட லட்சியம் பண்ணாமே எங்களுக்காக இத்தனை பாடு பட்டதற்கு நாங்க உள்ள நாள் வரை உன்னை மறக்கவே முடியாது!'' என்று நன்றி தெரிவித்தாள் கண்ணம்மாள்.

''கண்ணம்மா! கந்தசாமி சொன்னதை நீ சரியாகக் கவனிக்கவில்லை!...... 'நான் என் வாக்கை நிறைவேற்றி விட்டேன். நீங்கள் கொடுத்த வாக்கை என்ன செய்யப் போகிறீர்கள்?' என்றல்லவா கேட்கிறான் அவன்!''

''எதைச் சொல்கிறீங்க?......''

''எதையா? அன்றைக்கு அந்தப் பட்சி ஜோஸ்யக்காரன் ஆருடம் சொன்னபோது நீ என்ன சொன்னாய்?''

கண்ணம்மாள் சந்தோஷத்தோடு வாய் விட்டுச் சிரித்தாள்.

''அக்கா! நம்மவங்களிலே பிள்ளை வீட்டுக்காரங்கதான் பெண் வீட்டைத் தேடி வந்து கேட்கிற வழக்கம். ஆனால் நம்ம விஷயத்திலே இதிலே கூட ஒரு புதுமை இருந்துட்டுப் போகட்டும். நானே உங்களை வலுவில் கேட்கிறேன், சிங்காரியைக் கந்தசாமிக்குக் கட்டிக் கொள்ளுங்க!'' என்றாள் கண்ணம்மாள்.

முத்தம்மாள் கடகட வென்று நகைத்தாள். ''அதெப்படி முடியும் கண்ணம்மா! எங்க கந்தசாமியைத்தான் உங்க சிங்காரிக்குக் கட்டிக் கொடுக்கப் போகிறேன்!'' என்றாள்.

அங்கெழுந்த சிரிப்பொலியில் அவ்வீடே அமளிப்பட்டது. கந்தசாமிக்கு உள்ளங்கால் முதல் உச்சந்தலை வரையில் உடலின் ஒவ்வொரு அணுவும் புளகாங்கித மடைந்தது. அவன் பார்த்த பார்வையைச் சமாளிக்கத் திராணியற்றுக் கன்னங்குழிய முறுவலித்த வண்ணம் தலைகுனிந்தாள் சிங்காரி.

முருகேசனின் முகத்தில் அசடு வழிந்தது. மாமன் தருமலிங்கத்தைப் பார்த்து, ''இதோ பாருங்க மாமா. இந்தப் புள்ளை கெடந்து தவிக்கிற தவிப்பைப்பாருங்க! முனியம்மாவும் இவருமா சேர்ந்து போட்டிருக்கிற 'பிளா'னெல்லாம் எனக்குத் தெரியாதுன்னு நெனைச்சிருக்காங்க. இவங்களைச் சும்மா விடக் கூடாது! அதே முகூர்த்தத்தில் இவங்களையும் கட்டிப் போட்டு விட்டுத்தான் மறு வேலை!'' என்றான் கந்தசாமி.

கூடத்தில் மீண்டும் சிரிப்பொலி எழுந்தது. முனியம்மாள் விசுக்கென்று உள்ளே ஓடி விட்டாள்.

''கந்தசாமி! அந்த ஜோஸ்யர் என்ன பாட்டு சொன்னர்!...'களிப்புண்டாம் சிங்காரக் கன்னி சேர்வாள்!' என்றல்லவா சொன்னர்?'' என்றார் புலவர்.

''அதுமட்டு மில்லைங்க, உங்களைப் பார்த்துக்கூட 'கண்ணம்மாள் அவர்களது கருணை கிட்டும்!' என்று சொன்ன மாதிரி ஞாபகம்!'' என்று கந்தசாமி குறும்பாகப் பதில் கூறவும் அங்கெழுந்த அவுட்டுச் சிரிப்பும் கோலாகலமும் அடங்க வெகு நேரம் பிடித்தது.

''சபாஷ் கந்தசாமி! கவிதை அற்புதமாக இருக்கிறதே! புலவருக்கு மருமகன் என்றால் இப்படியல்லவா இருக்க வேண்டும்!'' என்று கைகொட்டி ஆரவாரித்தார் முத்துப் புலவர். (முற்றும்)

**Printed and Published by T. Sadasivam at the Kalki Press, Kilpauk, Madras-10 for the Proprietors Messrs Bharathan Publications Private Limited Managing Editor: T. Sadasivam**

# கருணைக்கடல்

தேசிகவிநாயகம் பிள்ளை




மந்தை பெரிய மந்தை — உணவின்றி
வாடிமெலியு மந்தை

சிந்தை தளரும் மந்தை — நடக்கவும்
சீவனிலாத மந்தை

தன்னந் தனியாகி — ஒருமறி
தாவி முன் ஓடுதையா

பின்னோர் இளமறியும்—சிந்தியிங்கு
பீடை படுதேஐயா !

இடையர் :

'இன்றிரா யாகம் முடியுதென்றார் — அதில்
இத்தனையும் கொலையாகும் என்றார்
நின்றுசொல நேரம் இல்லை என்றார்-இன்னும்
நீண்டவழி போக வேண்டும்' என்றார்.

வள்ளலும் உள்ளம் வருந்தியானும் — அந்த
மாமகம் காண வருவேனென்று
துள்ளும் மறியுஞ் சுமந்து கொண்டு-தாயும்
சோர்ந்து தொடர வழிநடந்தார்.



வையகந் தன்னில் உயிர்களின் மீதருள்
 மாரி பொழியும் பெரியவனும்
ஐயனைக் கண்டவர் கொண்ட அதிசயம்
 ஆராலே கூற இயலுமடி!

வாயிலைக் காத்திடும் சேவகரும்—வழி
 மாறி விலகி ஒதுங்கி நின்றார்;
தாயினும் மிக்க தயாளன் இவன்—போல் இத்
 தாரணி கண்டதும் உண்டோ வென்றார்?

பாதையிற் சென்றவர் பார்த்து நின்றார்—ஒரு
 பக்கமாய் வண்டிகள் ஓட்டி நின்றார்;
மாதவம் ஈதலால் வேறுளதோ!—என
 வாயார வாழ்த்திப் புகழ்ந்து நின்றார்.

சந்தை இரைச்சல் அடங்கியது—கடைச்
 சண்டையும் இல்லா தொடுங்கியது!
வந்தவர் போனவர் கண்களுக்கும்—அந்த
 வள்ளல் முகம் விருந்தானதம்மா!

மண்ணைச் சுமந்து வருங்குயவன்—ஈதோர்
 மாமுனி என்று வணங்கி நின்றான்
எண்ணெய்க் குடமேந்து வாணியனும்—இவர்
 யாரோ பெரியர் எனப் பணிந்தான்.

பள்ளிச் சிறுவரும் சாடிவந்தார்—அவர்
 பக்கத் தண்ணாவியும் ஓடி வந்தார்;
கள்ளரும் உள்ளம் மறந்து நின்றார்—வட்டக்
 காரரும் காசுப்பை விட்டு வந்தார்.





மாடும் அரிசியைத் தின்றதம்மா!—அதை
மாற்றி யடிப்பாரும் இல்லையம்மா!
விடும் திறந்து கிடந்ததம்மா — உலை
வெந்திடு சோறும் குழைந்ததம்மா!

பெண்டுகள் வாசலில் கூடி நின்றார்-இந்தப்
பேரருளாளனும் யாரோ என்றார்;
கண்டவர் உள்ளம் கனியுதென்றார்-இவன்
கண்ணின் அழகினைப் பாரும் என்றார்.

கன்னி ஒருமகள் மையெழுதி — இரு
கண்ணும் எழுதுமுன் ஓடிவந்தாள்
பின்னும் ஒரு மகள் கூந்தலிலே — சூடும்
பிச்சிமலர் கையில் சுற்றி வந்தாள்.

பாலுக் கழுத மதலையுமே — ஐயன்
பக்கம் வரக் களிப்புற்ற தென்றால்
சேலொக்கும் மாதர் விழிகள் - அவன்முகச்
செவ்வியில் ஆழ்வது அதிசயமோ!

[வேறு]

வையமிசை உயிர்கள் படும் துயரை
எண்ணி
மறுகும் உளத்(து) அயலொன்றும்
அறியானாகி
ஐயனும் அவ் விதிவழி நடந்து மன்னன்
அரியமகம் செய்யுமிடம் அணுகினானே!




"யாகத் திறைவரே! என்னாரும் தேவரே !
அம்புவி யாளும் அரசர் பெருமான்
பிம்பி சாரப் பெருந்தகை இந்நாள்
மறைகளில் விதிக்கும் வழிவகை யறிந்து
முறையிற் செய்து முடிக்கும்இம் மகத்தில்
பேணி உமக்கிடும் பெரும்பலி இதுவாம் !"

என்று சொல்லி யாக தீக்ஷிதரும்—வாளை
ஏந்திய கையினை ஓங்கையிலே
பொன்றும் உயிரினைக் காக்க வரும்—அந்தப்
புண்ணிய மூர்த்தியும் ஓடிவந்து :

"அண்ணலே இக்கொடும் பாவிஇவ் வேளையில்
ஆட்டினைக் கொல்லா தருள் புரிவீர்
திண்ணிய ஞான முடையவரும்—இந்தத்
தீவினை செய்வாரோ" என்றுரைத்தான்.

"வாழும் உயிரினை வாங்கி விடல்—இந்த
மண்ணில் எவர்க்கும் எளிதாகும்
விழும் உடலை எழுப்புதலோ—ஒரு
வேந்தன் நினைக்கினும் ஆகாதையா !"

"செய்பிழை யாவும் பொறுத்தருள்வீர்"—எனச்
சேவித்து மன்னனும் தாழ்ந்து நின்றான் ;
"ஐயனே, நாட்டில் கொலைதவிர்த்து—நாளை
ஆணையும் கட்டுவேன்" என்றுரைத்தான்.



# வள்ளுவர் சித்திர மடல்

"செய்தொழில் பலவற்றிலும் குற்றம் அற்றது நெய்தற் தொழில் ஒன்றே" என்பதை உணர்ந்த திருவள்ளுவர் மயிலாப்பூரில் கைத்தறியில் ஆடைகள் நெய்து வாழ்க்கை நடத்தி வந்தார்.

ஒரு நாள் திருவள்ளுவர் துணி நெய்துகொண் டிருந்தபோது ஓர் அதிசயம் நிகழ்ந்தது. பிரம்மா, விஷ்ணு முதலிய தேவர்கள் திருவள்ளுவர் வீட்டைத் தேடி வந்தார்கள். "திருவாலங் காட்டில் சிவபெருமான் நடனமாடியபோது திடீரென்று ஒரு காலை மேலே தூக்கி ஊர்த்துவ தாண்டவம் ஆடினர். அதன் காரணத்தைத் தங்களைக் கேட்டுத் தெரிந்து கொள்ளும்படி பணித் தார்" என்றார்கள். அப்போது திருவள்ளுவர் பாடிய பாடல்:

"பூவில் அயனும் புரந்தரனும் பூவுலகைத்
தாவி அளந்தோனும் தாமிருக்க — நாவில்
இழை யொட்டி நூல்நெருடும் ஏழை அறிவேனே
குழை யொட்டும் பிஞ்சகன்தன் கூத்து."

சிவபெருமான் நடனமாடும்போது காது ஒன்றிலிருந்து விழுந்துவிட்ட குண்டலத்தை யாரும் அறியாவண்ணம் அவ்வாறு லாகவமாக எடுத்துச் செவியில் திரும்ப ஒட்டிவிட்டதைத் திருவள்ளுவர் தாம் இருந்த இடத்திலிருந்தே ஞானக் கண்ணால் அறிந்து கொண்டார். தேவர்களும் அறிய முடியாத இரகசியத்தை அறிந்து அவர்களுக்கு அறிவித்தார்.



ஏலேல சிங்கர் என்ற வியாபாரியின் விட்டுக்குத் திருவள்ளுவர் சென்றார். விட்டு வாசலில் நின்ற அவர் மனைவியிடம் "செட்டியார் எங்கே?" என்று கேட்டார். "சிவபூஜை செய்கிறார்" என்றார் அந்த அம்மையார். "சிவ பூஜை இங்கு செய்கிறாரா? குப்பத்தில் உள்ள கடையில் செய்கிறாரா?" என்றார் திருவள்ளுவர். உண்மையில் சிவ பூஜையில் இருந்த செட்டியார் வியாபார விஷயத்தைப் பற்றித் தான் அச்சமயம் நினைத்துக்கொண் டிருந்தார்! இதை அறிந்து கூறிய திருவள்ளுவரின் பெருமையை உணர்ந்து அன்று முதல் அவருக்குச் சீடனாக அமர்ந்தார்.

ஏலேல சிங்கரின் மனத் திடத்தை அறிய வள்ளுவர் ஒரு சோதனை செய்தார். ஏலேல சிங்கரை ஒரு மரத்தின் உச்சிக்கு ஏறச் சொல்லிக் கையையும் காலையும் மரத்திலிருந்து விடச் சொன்னார். திருவள்ளுவரின் ஆணையைச் சிரமேற் கொண்ட ஏலேலசிங்கரும் அப்படியே செய்தார். மிக இயல்பாகத் தரையில் நிற்பது போல ஆகாயத்தில் நின்ற ஏலேல சிங்கரின் மனோதிடத்தை வியந்து பாராட்டி அவருக்குத் திருவள்ளுவர் சமய ஞான உபதேசம் புரிந்தார்.



மதுரைத் தமிழ்ச் சங்கப் புலவர்கள் திருவள்ளுவர் இயற்றிய திருக்குறளைப் பரிசோதித்து ஏற்றுக் கொள்ள இலேசில் இணங்கவில்லை. கடைசியாக "நாங்கள் வீற்றிருக்கும் சங்கப் பலகை எந்த நூலுக்கு இடம் கொடுக்குமோ அதுவே செந்தமிழ் நூல். உம்முடைய திருக்குறளுக்குப் பலகை இடம் தந்தால் அதைச் செந்தமிழ் நூல் என்று ஏற்றுக் கொள்வோம்" என்றனர்.

திருவள்ளுவர் அதற்குச் சம்மதித்தார். பாண்டிய மன்னனும் மந்திரி பிரதானிகளும் புடை சூழப் பொற்றாமரைக் குளத்துக்கு வந்தார். பொற்றாமரைக் குளத்தில் புலவர்களைத் தாங்கி மிதந்து கொண்டிருந்த சங்கப் பலகையில் திருவள்ளுவர் திருக்குறளை வைத்தார். உடனே அப்பலகை தன் மீது அமர்ந்திருந்த நாற்பத்தொன்பது சங்கப் புலவர்களுக்கும் இருக்க இடமில்லாமல் சுருங்கித் திருக்குறளுக்குமட்டும் இடம் அளித்தது. புலவர்கள் பொற்றாமரைத் தடாகத்தில் விழுந்து தவித்தனர். பின்னர், திருக்குறளைப் பரிசோதித்து அது அற்புதமான நூல் என்பதைக் கண்டு போற்றினார்கள்.



திருவள்ளுவர் ஒரு சமயம் உணவருந்தும்போது தம் மனைவியை அழைத்தார். கணவர் அழைத்த குரல் கேட்ட வாசுகி அம்மையார் கிணற்றில் தண்ணீர் இழுத்துக் கொண்டிருந்த குடத்தை அப்படியே விட்டுவிட்டு அவசரமாக ஓடி வந்தார். கற்புடைய பெண்டிரின் கடமைக்குத் துணை புரிந்து தண்ணீர்க் குடமும் பாதிக் கிணற்றில் அப்படியே அந்தரத்தில் நின்றது!

தினந்தோறும் திருவள்ளுவர் உணவருந்தும் போது இலைக்கு அருகில் ஒரு சிறிய பாத்திரத்தில் நீரும் ஓர் ஊசியும் வைக்கும்படி வாசுகி அம்மைக்குப் பணித்தார். ஆனால் அந்த ஊசியைத் திருவள்ளுவர் என்றும் உபயோகிக்க வில்லை. வாசுகி அம்மையும் அவை எதற்காக வென்று கேட்க வில்லை. வாசுகி அம்மை தமது அந்தியக் காலம் நெருங்கி விட்டது என்று தெரிந்த போதுதான் '' ஊசியும் நீரும் வைக்கச் சொன்னது எதற்காக ?'' என்று கேட்டார். ''சோற்றுப் பருக்கை தவறித் தரையில் விழுந்தால் ஊசியால் எடுத்துக் கழுவி இலையில் போட்டுக் கொள்வதற்காக வைக்கச் சொன்னேன். ஊசியை உபயோகப்படுத்தச் சந்தர்ப்பம் நேரவே இல்லை. இதைப் பற்றி இத்தனை காலமும் 'எதற்காக ?' என்று கூடக் கேளாமல் அந்தப் பணியைச் செய்து வந்தாயே ? உன்னைப் போன்ற உத்தமியைப் பிரிந்து எப்படி வாழ்வேன் !'' என்று திருவள்ளுவர் கதறியதில் வியப்பில்லை அல்லவா ?



அறுபத்து மூன்று நாயன்மார்களில் ஒருவராகிய திருமூலர் என்னும் சித்தர் பெருமான், கயிலாய மலையில் நந்தி தேவரின் திருவருள் பெற்ற யோகி! பொதிகை மலையிலிருந்த தமது நண்பர் அகத்தியரைக் காணப் புறப்பட்டவர் வடக்கேயிருந்து தெற்கு நோக்கி வரும்போது, திருவாவடுதுறைக்கு அருகே உள்ள சாத்தனூரில் பசுக்களை மேய்த்துக் கொண்டிருந்த ஓர் இடையன் பாம்பு கடித்து இறந்து கிடப்பதையும் பசுக்கள் அவனைச் சுற்றி நின்று கண்ணீர் வடிப்பதையும் கண்டார். உடனே



இரக்கம் அதிகரித்தவராய், தமது உடம்பை மரத்தின் மேல் வைத்து விட்டு 'பரகாயப் பிரவேசம்' என்ற சித்தியினால் இடையனுடைய உடம்பிலே புகுந்து கொள்கிறார். பசுக்கள் ஆனந்தம் அடைந்து குதிக்கின்றன. மூலன் என்ற அந்த இடையனுடைய உடம்பிலே புகுந்த சித்தர், பசுக்களை அவற்றின் வீடுகளில் சேர்த்து விட்டுத் திரும்பும்போது, மூலனுடைய மனைவி வழி மறிக்கிறாள். "என்னை விட்டு விட்டு எங்கே போகிறாய் ?" என்கிறாள். "பெண்ணே நீ வேறு, நான் வேறு. என்னைத்



தொடாதே" என்கிறார் சித்தர். கணவனுக்கு மூளைக் கோளாறு அல்லது தன்னை விலக்கப் பார்க்கிறானா என்று புரியாத மூலனுடைய மனைவி, கணவனைப் பஞ்சாயத்து சபைக்கு முன்னால் கொண்டு நிறுத்துகிறாள். மூலனுடைய பேச்சைக் கேட்ட பஞ்சாயத்தார், "அம்மா, உன் கணவன் காட்டுக்குப் போன இடத்தில் ஞானோதயம் பெற்றிருக்கிறான். இனி அவனை இல்லறத்துக்கு அழைக்காதே!" என்று தீர்ப்புக் கூறி விடுகின்றனர்.



சித்தர் காட்டுக்குத் திரும்பி வந்து தமது உடலைத் தேடினர். மரத்தில் வைத்துப் போன உடலைக் காணோம்!

"இறைவனுடைய திருவுளம் இதுபோலும்!" என்று கருதியவராய், மூலனுடைய உருவிலேயே முனிவராக விளங்கினர். திருவாவடுதுறையிலே படர் அரசின் கீழ் பல்லாண்டுகள் தவம் இருந்து "திருமந்திரம்" என்ற அற்புதமான ஞானப் பாடல்களைப் பாடி அருளினர் திருமூலர்.

# கன்னி

கன்னிப் பருவத்துப் பெண்மயிலே—உன்றன்
கட்டழ கெல்லாம்வீ ணாகுதடி

மின்னி ஒளிவிடும் மேனியளே—உன்றன்
மின்னலெ லாம்வீணே போகுதடி

பின்னிப் படர்ந்ததோர் காட்டினுள்ளே—வாசப்
பிச்சி மலர்க்கொடி பூத்ததுபோல்

மன்னி உயர்மலை உச்சியிலே—கொண்டு
வைத்ததோர் தீஞ்சுவைத் தேனடைபோல்
*கன்னிப் பருவத்துப் பெண்மயிலே!*

பாலை வனத்திலே பால்பொழியும்—குவிர்
பௌர்ணமிச் சந்திரன் தானோநீ

வேலைத் திரைக்குளே முத்துகுக்கும்—ஒளி
விந்தை யழகுள்ள சிப்பியோநீ

நீலக் கடற்கசத் தாழத்திலே—சென்று
நிற்கும் பவளக் கொடிபோலே

மூலை இருளினில் மூடிமறைந்தே—ஓ! ஓ!
மோகினிப் பெண்ணேவீ ணாகிறாய்
*கன்னிப் பருவத்துப் பெண்மயிலே!*

கண்மணி யேஇளங் காரிகையே—உன்றன்
கன்னிப் பருவம்வீண் போகுதேடி

பெண்மணி யேஎழிற் பெண்மயிலே—உன்றன்
பெண்மையெ லாம்த்சோ! வீ ணாகுதேடி!

---

*['இளவேனில்' கவிதைப் புத்தகத்திலிருந்து]*

சோமு

மணியம்

சித்திரகூட பர்வதத்தில் லக்ஷ்மணன் ஒரு அழகிய பர்ணசாலையை அவர்கள் தங்கி யிருப்பதற்காக நிர்மாணித்து விட்டான். அந்த அற்புதமான பர்ணசாலையைப் பார்த்ததும் ராமன் கண் கலங்கி நின்றான். லக்ஷ்மணனது கைத்திறனை வியந்த வண்ணம், "தம்பி! குடிசை கட்டும் இந்த அழகிய கலையை என்று நீ கற்றுக் கொண்டாய்!" என்று கேட்கும் பாவத்தை ஓவியர் மணியம் வண்ண ஓவியமாக வழங்குகிறார்.

......................இளையவற் பார்த்(து),' இரு
குன்று போலக் குவவிய தோளினாய்!
என்று கற்றனை நீயிது போல்?' என்றான்,—
துன்று தாமரைக் கண்பனி சோர்கின்றான்

மணியம்

# உதயம்!




பொழுது புலருமடி – மனப்
பூவும் மலருமடி!
அழுத இருளெல்லாம் – கண்ணே
அகலும் அகலுமடி! —'இளவேனில்'



## பொன்னி தந்த செல்வர் :1

சோழப் பேரரசின் மகோன்னத காலத்தைச் சித்திரிக்கும் சரித்திரக் கதையான "பொன்னியின் செல்வன்" என்ற நவீனத்தில் வரும் காட்சிகளை ஓவியர் மணியம் இங்கே தருகிறார்.

தமிழ் நாட்டின் பொற்காலமாக விளங்கிய சீரும் சீலமும் பொருந்திய சரித்திரத்தைப் பின்னணியாகக் கொண்டு, தமிழர்களின் வீரம், பண்பாடு, அரசியல் திறம் ஆகிய உயர்ந்த பண்புகள் அனைத்தையும் சித்திரிக்கும் இந்தக் கதையில், தமிழ் மக்கள் எண்ணி எண்ணி வியக்கக் கூடிய அரிய கதாபாத்திரங்களைக் காண்கிறோம். பொன்னி தந்த




செல்வராக விளங்கிய கல்கி அவர்களின் இந்த அமர சிருஷ்டிகளை — ஓவியர் மணியம் தமது கற்பனையிலே கண்டு வரைந்திருக்கிறார். சுந்தர சோழ சக்கரவர்த்தி, ராஜராஜ சோழன், பழுவேட்டரையர், மதுராந்தகன், ஆழ்வார்க்கடியான், குந்தவை, நந்தினி, செம்பியன்மாதேவி, அநிருத்தப்பிரம்மராயர், பூங்குழலி முதலிய கதாபாத்திரங்களையும் அவர்கள் தோன்றும் ரஸமான காட்சிகளையும் பொன்னிநந்த செல்வர் 1, 2 ஆகிய காட்சிகளிடையே காணலாம்.




தமது சரித்திரக் கற்பனைக்குப் பின்னணி வழங்கக்கூடிய ஓவியக் காட்சிகளை யெல்லாம் சென்று சென்று பார்த்து ரஸித்தார் கல்கி அவர்கள். அவருடைய உள்ளத்தைக் கவர்ந்த சில புகழ்பெற்ற ஓவியங்களை இங்கே காணலாம்.






கலையை வளர்த்துக் காத்த பல்லவர்கள் காலத்தில் கலையையே தன் வாழ்க்கையாகக் கொண்டு வாழ்ந்தாள் ஆயனச் சிற்பியின் மகள் சிவகாமி. அவள் செய்த வீர சபதத்தைப் பின்னணியாகக் கொண்டு கல்கி அவர்கள் புனைந்த சரித்திரக் கற்பனை "சிவகாமியின் சபதம்". இந்தக் கதையில் வரும் கதாநாயகியையும், பல்லவர்கள் வளர்த்த சிற்பக் கலையையும் இந்தப் பக்கத்தில் காணலாம்.





## மயில் விழி மான்

பேராசிரியர் திரு ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்கள் தம் வாழ் நாளில் கடைசியாக எழுதிய "மயில்விழி மான்" என்ற சிறு கதையில் வரும் கதா பாத்திரங்கள்





## ஆய்

ஆய் அண்டிரன் என்ற அரசன் மலைநாட்டை ஆண்டு வந்தவன். வீரர்களுள் வீரனாக விளங்கினான். தன்னை நாடி வந்தவர்களுக்குப் பொன்னும் மணியும் யானையும் தேரும் ஈந்தான்! ஏன் அப்படிக் கொடுத்தான்? பொருளைக் கொடுத்துப் புண்ணியத்தைச் சம்பாதிக்கும் நோக்கத்தின் காரணமாகவா கொடுத்தான்? அதற்கு வணிகன் அல்ல அவன். பின் ஏன் கொடுத்தான்? தன் முன்னோர் காட்டிய வழியே தனக்கும் சிறந்தது என்று கருதியமையால் அவன் அப்படி ஈந்தான்!

இம்மைச் செய்தது மறுமைக்(கு) ஆம் எனும்
அறவிலை வணிகன் ஆய்அலன் பிறரும்
சான்றோர் சென்ற நெறிஎன
ஆங்குப் பட்டன்(று) அவன்கை வண்மையே!



## பேகன்

பேகன் என்ற சிற்றரசன் ஒருநாள் காட்டு வழியே போய்க் கொண்டிருந்தான். வானத்தில் இருந்திருந்தாற்போல் கரு மேகங்கள் திரண்டன! குளிர்ந்த காற்று வீசிற்று. மழை பொழிவதற்கான அறிகுறிகள் தென்பட்டன. அந்தச் சமயம் திடீர் என்று மயில் கத்தும் சத்தம் கேட்டது. தன் வழியே போய்க் கொண்டிருந்த பேகன் குளிர் தாங்க மாட்டாமல்தான் கத்துகிறது என்று நினைத்துவிட்டான். தன்னைப் பார்த்து உதவி கேட்கத்தான் கத்துகிறது என்று நினைத்துவிட்டான். அவ்வளவுதான்! தன் மேலாடையைக் கழற்றி மயிலுக்குப் போர்த்திவிட்டான்!

" கான மஞ்ஞைக்குக் கலிங்கம் நல்கிய
அருந்திறல் அணங்கின் ஆவியர் பெருமகன்
பெருங்கல் நாடன் பேகன் "

— சிறுபாணாற்றுப் படை

ஏப்ரல் 12உ முதல்

சென்னை

சித்ரா ... கிரவுன்

காமதேனு ... சயானி

மற்றும் தென்னாடெங்கும்





சரவணபவா & யூனிட்டியின்

# வணங்காமுடி

டைரக்ஷன்

P. புல்லையா ...

# அருமைத் தலைவன்




பேணும் கொழுநர் பிழைகளெலாம்
　　பிரிந்த பொழுது நினைந்தவரைக்
காணும் பொழுது மறந்திருப்பீர்
　　கனப்பொற் கபாடந் திறமினோ!

— கலிங்கத்துப்பரணி.

# பார்த்தனின் பிரார்த்தனை

[கீதையைப் பகவான் உபதேசிப்பதற்கு முன் யுத்த களத்தில் நின்ற பார்த்தனின் மன நிலையை இந்த அழகான நாடோடிப் பாடல் விவரிக்கிறது.]

கௌரவர் சேனைகளை
அணிவகுத்து—ஏலேலோ
கீர்த்தியுள்ள வீஷ்மரங்கே
காத்திருந்தார்—ஏலேலோ

பார்த்தனிந்த சேனையெல்லாம்
பார்த்தவுடன்—ஏலேலோ
பலமொடுங்க மனம்தளர்ந்து
பரதவித்தான்—ஏலேலோ

பாட்டனுடன் விற்குருவைத்
துணைவர்களை—ஏலேலோ
கூட்டமாகக் கொன்றிடுதல்
கொடுமையன்றோ—ஏலேலோ

வாட்டத்துடன் புவியையாண்டு
மகிழ்வதிலும்—ஏலேலோ
வனவாசம் சிறந்ததன்றோ
மாயவனே—ஏலேலோ





## என்னைக் கண்டுகொள்!



பொய்தான் தவிர்ந்துன்னைப் போற்றி
சயசய போற்றி என்னும்
கைதான் நெகிழ விடேன், உடை
யாய்! என்னைக் கண்டுகொள்ளே!

— மாணிக்கவாசகர்.

# மாதர்குல திலகங்கள்



நற்றமிழ் மதுரை தந்த மாதர் குல திலகங்களில் திருமதி ருக்மிணி தேவி அவர்களும் ஒருவர். திருமதி ருக்மிணி தேவி அவர்கள், மதுரையில் பிறந்தவர்; பிரசித்திபெற்ற கல்வியாளரும், பொறி இயல் விற்பன்னருமான திரு ஏ. நிலகண்ட சாஸ்திரியாரின் புதல்வியராவர். அடையாறு பிரம்மஞான சபையின் அக்கிராசனராக விளங்கிய தத்துவஞானி டாக்டர் ஜி. எஸ். அருண்டேல் அவர்களை மணந்து, கணவருடன் உலகில் முக்கியமான நாடுகளுக்கெல்லாம் சென்று வந்தார். உலக முன்னணியில் இந்தியா பெருமையுடன் விளங்க வேண்டுமானுல், கலைகள் மூலமாகவே அது சாத்தியமாகும் என்று உணர்ந்தார். அதுமுதல் அருங் கலைகள் வளர்ச்சிப் பணியில் தம்மை அர்ப்பணம் செய்து கொண்டார்.

அருங்கலைகளில் பரத நாட்டியக் கலைக்கு ஒரு முக்கிய ஸ்தானம் உண்டு. பரத நாட்டியம் வேத காலந் தொட்டு நம் நாட்டில் விளங்கி வரும் கலைகளில் ஒன்று. ருக் வேதத்தில் பரத நாட்டியத்தைப் பற்றிப் பிரஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. எனினும் பரத நாட்டியக் கலை தென்னிந்தியாவில்தான், கலை யார்வமிக்க மன்னர்கள் காலத்தில் பூரண வளர்ச்சியடைய முடிந்ததெனலாம். எனினும் காலப் போக்கில், இந்த அருமையான கலை பலவித காரணங்களினுல் மெள்ள மெள்ள மதிப்பு இழந்து அடியோடு மறைந்தே போய்விடும் நிலைக்கு வந்து விட்டது. அப்போதுதான், திருமதி ருக்மிணி தேவி அவர்கள் இந்தக் கலையைச் சாஸ்திரோக்த முறையில் கற்றுத் தேர்ந்து இந்தக் கலைக்குப் புத்துயிர் அளித்தார். இந்தக் கலை வளர்ச்சியை முக்கியமான குறிக்கோளாகக் கொண்டு 1936 ல் தோன்றியதுதான் கலாக்ஷேத்திரம்.

திருமதி ருக்மணி தேவியார் தந்தையைப் போலவே சிறந்த கல்வியாளர். மேற்கு, கிழக்கு வல்லரசு நாடுகளிலெல்லாம் பாரத நாட்டின் சார்பாகக் கலைத் தூதுகள் சென்று, பிற நாடுகளுடன் நமது கலாசார உறவை ஸ்தாபிப்பதில் பணி புரிந்துள்ளார். இன்னும் அவ்விதப் பணிகள் பல ஆற்றி வருகிருர். பார்லிமெண்டு மேல்சபைக்கு, திருமதி ருக்மிணி தேவி அருங்கலைகளின் பிரதிநிதியாக நியமனம் செய்யப்பட்டிருக்கிருர். இதைத் தமிழ்நாட்டு மாதர் குலத்துக்கே பெருமை தரும் நியமனம் என்று கூறவேண்டும்.

பரத நாட்டியக் கலை வளர்ச்சிக்கு ஸ்ரீமதி ருக்மிணிதேவி ஓர் மறுமலர்ச்சி அளித்ததைப் பாராட்டி அவருக்குச் சென்ற ஆண்டு இந்திய சர்க்கார் ''பத்மபூஷணம்'' பட்டம் அளித்ததும், இதைத் தொடர்ந்து சில தினங்களுக்கு முன் புது தில்லியில் ஆரம்பமான தேசியக் கலையரங்கில் ஸ்ரீமதி ருக்மிணி தேவி அவர்களுக்கு இந்திய சர்க்காரின் விருதுகள் அளிக்கப்பட்டதும் யாவரும் அறிந்தவையே.

கலா க்ஷேத்திரத்தின் கலைத் தொண்டு எப்படிப் பிரசித்தமானதோ, அதைப்போல் கல்வித் தொண்டும் பிரசித்தமானதாகும். மாண்டிஸோரி கல்வி முறை அங்கிருந்துதான் ஜீவ ஊற்ருகப் பெருகிப் பாய்ந்து வருகிறது.

இவை தவிர, தமிழ் வளர்ச்சிக்காகக் கலாக்ஷேத்திரம் நடத்திவரும் பல ஆராய்ச்சிகளையும், தமிழ்த் தாத்தா டாக்டர் உ. வே. சாமிநாதய்யர் அவர்கள் பெயரால் விளங்கி வரும், புத்தக சாலையையும், அரிய தமிழ் நூல்கள், வெளியீடுகளையும், பழந் தமிழ் ஏட்டுச் சுவடிகளைப் பாதுகாத்து அவற்றை அழகாக அச்சிட்டு வரும் சாதனைகளையும், எவ்வளவு பாராட்டினுலும் தகும்.

அங்கு தயாராகும் கைத்தறி ஆடைகளின் விசேஷம் எங்கும் இன்று பிரபலமாகி விட்டது. ''அடையாறு பார்டர், அடையாறு தலைப்பு'' என்று இன்று பிரசித்தி பெற்று விளங்குகிறது.

இவ்வாறெல்லாம் அநேக சிறப்புகளுடன் தேசத்துக்கே ஒரு கலாக்ஷேத்திரமாக விளங்கும் ஒரு ஸ்தாபனத்தை எவ்வளவோ திறம் பட நிர்வகித்து வரும் திருமதி ருக்மிணி தேவி அவர்களுக்கு இந்த ஹேவிளம்பி தமிழ்ப் புத்தாண்டுத் திருநாளில், தமிழ்ப் பெருமக்களின் பாராட்டுதல்கள் உரித்தாகின்றன.



## பாரி

ஈகையிலுள்ள இன்பத்தைக் கண்டவர்கள் தமிழ்ப் பேரரசர்கள். அவர்களில் எழுவரை ''கடை எழு வள்ளல்கள்'' என்று வெகுவாகப் பாராட்டி தமிழ் இலக்கியங்கள் பேசுகின்றன. அந்த எழுவரில் மூவரை ஓவியர் ராஜம் இப் பக்கங்களில் வழங்குகிறார்.

பறம்பு நாட்டை ஆண்டு வந்த பாரி அரசன், ஒரு முல்லைக் கொடியைப் பார்த்தான். அது ஏறிப் படர்வதற்குக் கொழு கம்பின்றி அலைந்தது. தான் ஏறி வந்த தேரையே அந்தக் கொடிக்கு ஈந்துவிட்டு, அகன்றான். இப்பண்பைக் கபிலர் பாடுகிறார்.

பூத்தலை அறாஅப் புனைகொடி முல்லை
நாத்தழும் பிருப்பப் பாடா தாயினும்
கறங்குமணி நெடுந்தேர் கொள்கெனக் கொடுத்த
பரந்து ஓங்கு சிறப்பின் பாரி!

(புறம்)



## திப்பு சுல்தான்

**வட** இந்தியாவில் வெற்றிக் கொடி நாட்டிவிட்டதாக வெள்ளைக்காரர்கள் இறுமாந்திருந்தனர். இந்தியாவில் ஆதிக்கம் செலுத்தத் தங்களுக்குப் போட்டியாக இருந்த பிரஞ்சுக்காரர்களையும் அவர்கள் தோற்கடித்து விட்டதால், இனி இந்தியா முழுதும் ஆதிக்கம் செலுத்தும் காலம் தூரத்தில் இல்லையென அவர்கள் எண்ணினர். போர் செய்யாமலேயே தென் இந்தியா அடிபணிந்து விடும் என்றும் அவர்கள் கனவு கண்டனர். ஆனால், ஆங்கிலேயர்கள் தென் இந்திய பூமியில் காலடி வைத்தபோது, இமயம் போல் ஒரு மலை தங்களுக்குத் தடையாக இருப்பதை உணரலாயினர். பதினெட்டாவது நூற்றாண்டில் மைசூர் மன்னராக விளங்கிய ஹைதர் அலியும் அவரது வீரப் புதல்வரான திப்பு சுல்தானும் அடுக்கடுக்காகப் பல போர்களில் வெள்ளையர்களைப் புறமுதுகு காட்டி ஓடும்படி செய்தனர். சென்னைக்கு அருகில் நடந்த சரித்திரப் புகழ் பெற்ற போரில் கர்னல் பெயிலி என்ற பிரிட்டிஷ் தளபதியும் அவனது படைகளும் ஆயுதங்களைக் கீழே போட்டுவிட்டுத் திப்புவிடம் சரண் அடைந்தனர்.

மேற்படி தோல்வியைக் கண்டு இங்கிலாந்து தேசமே அதிர்ச்சி அடைந்தது. பல ஆண்டுகள் பிரிட்டிஷாரைக் கலங்க அடித்த திப்பு சுல்தானிடம் கவர்னர் பெயிலி சரண் அடைந்த சரித்திரம் மறக்க முடியாத அற்புதக் காட்சியை மேலே காணலாம்.



## கப்பலோட்டிய வீரர்

"இப்போது எப்படியிருக்கிறது?" என்று ஏளனமாகச் சிரித்தான் சிறை அதிகாரியான வெள்ளைத் துரை. "ஆனந்தமாக இருக்கிறது!" என்றார் கப்பலோட்டிய தமிழ் வீரர் வ. உ. சிதம்பரம் பிள்ளை. துரை திகைத்து நின்றான். அதற்கு முன் சிறையையும் அதில் உள்ள துன்பங்களையும் கண்டறியாத ஸ்ரீ சிதம்பரம் பிள்ளை அப்போது சிறையில் மாடுகளுக்குப் பதிலாகத் தாமே நின்று செக்கு இழுத்துக் கொண்டிருந்தார்! தேசப்பற்று கொண்ட பாவத்துக்காகப் பல வருஷம் கடுங்காவல் தண்டனை அடைந்த ஸ்ரீ வ. உ. சி. அவர்களுக்குச் சிறையில் கொலைக் குற்றம் செய்த கைதிகளைப் போல் செக்கு இழுக்கும் வேலை கொடுத்திருந்தனர். ஆனால், அந்த வேலையைச் சிதம்பரனார் மகிழ்ச்சியுடன் செய்ததைக் கண்டு வெள்ளைத் துரைக்கு ஆச்சரியம் தாங்க முடியவில்லை, "சந்தோஷமாக இருக்கிறீர்களே! சிறைக்கு வெளியே இந்த வேலை செய்து உங்களுக்குப் பழக்கமோ?" என்றான் துரை கேலியாக. "ஆமாம், ஆமாம்" என்றார் பிள்ளை. துரைக்குத் தூக்கிவாரிப் போட்டது. "கொடிய அன்னிய ஆட்சியாகிற இரும்பு நுகத்தடியை எப்போதும் கழுத்தில் வைத்துக் கொண்டு இழுத்து வழக்கப்பட்டவர்களுக்கு, இந்தச் செக்கை இழுப்பது என்ன பிரமாதம்? இது கொசுவைச் சுமப்பது போலத்தான்" என்றார் திரு சிதம்பரம் பிள்ளை. திலகர், லாலா லஜபதிராய் முதலிய மாபெரும் தலைவர்களின் வரிசையில் மங்காத சுடராக விளங்கி வருகிறார் சிதம்பரம் பிள்ளை.



## உப்பு சத்தியாக்கிரகம்

உலக சரித்திரத்திலேயே ஒரு புதுமை விளைவித்த வித்தகர் மகாத்மா காந்தியடிகள்.

உலக சரித்திரத்திலே அடிமைப்பட்ட நாடுகள் எல்லாம் புரட்சி செய்து ஹிம்சையைக் கையாண்டே சுதந்திரம் பெற்றுள்ளன. ஆனால் காந்தி மகானே அஹிம்சா மார்க்கத்தில் புரட்சி செய்து பாரதத்தின் சுதந்திரத்தை ஈட்டித் தந்தார்.

காந்தி மகான் நடத்திய சாத்விக சுதந்திரப் போராட்டங்களில் மிக முக்கியமான போராட்டம் உப்பு சத்தியாக்கிரகம். மக்கள் உணவுடன் கலந்து சாப்பிடும் உப்புக்கு பிரிட்டிஷார் வரி வசூலித்து வந்தனர். இந்த உப்புச் சட்டத்தை மீறி உப்பைக் காய்சுவேன் என்று காந்தி மகான் தொண்டர் படை சூழத் தண்டிக்கு யாத்திரை புறப்பட்டார்.

அதேசமயம் தென்னாட்டிலே நபது அருமைத் தலைவர் ராஜாஜி அவர்சள் தொண்டர் படைசூழ வேதாரண்யத்துக்கு உப்பு சத்தியாக்கிரகம் செய்ய யாத்திரை புறப்பட்டார்.

இந்தச் சத்தியாக்கிரக நிகழ்ச்சி ஊமையராய், குருடர்களாய் இருந்து வந்த பாரத மக்களை விழிப்படையச் செய்தது. பிரிட்டிஷ் அரசாங்கக் கொடுமையை எதிர்த்துத் தடியடி படவும், சிறை வாசம் செய்யவும் முப்பது கோடி மக்களைத் தயார் செய்து விட்டது!

தியாகம் பல புரிந்து பெற்ற கண்ணினும் இனிய சுதந்திரத்தைப் போற்றுவோம்!



## ஜேய் ஹிந்த்!

மிகுந்த ஆயுத வலிமை பொருந்திய பிரிட்டிஷாரைப் போர்முனையில் முறியடித்து, இந்தியப் புண்ணிய பூமியில் உள்ள கோஹிமாவில் முதன்முதலாகத் தாயின் வெற்றி மணிக் கொடியைக் கம்பீரமாகப் பறக்கவிட்ட பெருமை நேதாஜி சுபாஷ் சந்திர போசுக்கே உரியதாகும். இரண்டாவது உலக மகாயுத்தம் நடந்து கொண்டிருந்தபோது வெறும் கையுடன் கிழக்காசியாவுக்குச் சென்ற ஸ்ரீ சுபாஷ் சந்திர போஸ், தாற்காலிக இந்திய சர்க்காரைச் சிருஷ்டித்தார். பலம் மிகுந்த இந்திய தேசிய இராணுவத்தை உருவாக்கினர். திறமை மிக்க ஜான்ஸி ராணிப் படையை அமைத்தார்.

கிழக்காசியாவில் வசிக்கும் லட்சக்கணக்கான இந்தியர்களிடையே ஒற்றுமை நிலவும்படி செய்தார். ரப்பர் பால் வெட்டிக்கொண்டிருந்த ஏழை இந்தியத் தொழிலாளர்களை அநீதியையும் அதர்மத்தையும் எதிர்த்துப் போர் முழக்கம் செய்யும் வீர சிங்கங்களாக மாற்றினர். இறுதியில் பிரிட்டிஷாரை எதிர்த்துப் படையெடுத்தார். நேதாஜி சுபாஷ் சந்திர போஸ் நடத்திய தர்ம யுத்தமும், அவர் உபதேசித்த 'சலோ தில்லி' 'ஜெய் ஹிந்த்!' இவ்விரு தாரக மந்திரங்களும் சரித்திரத்தின் பொன் ஏடுகளில் நிரந்தரமான இடம் பெற்றுள்ளன. இணையற்ற தேச பக்தியும், அஞ்சா நெஞ்சமும், காம்பீர்யமான தோற்றமும் வாய்ந்த நேதாஜி சுபாஷ் சந்திர போஸின் வருகையால், கிழக்காசிய நாடுகளில் உள்ள இந்தியர்களின் மதிப்பு மிகவும் உயர்ந்தது. அமரர் நேதாஜி போஸ் நாமம் வாழ்க!



## தாதியா தோபே

ஆங்கிலேயர்களை முறியடித்து இங்கிலாந்தைத் தமது வசப்படுத்திக் கொள்ளுவதற்கு இடையூறாக நெப்போலியனுக்கு இங்கிலீஷ் கால்வாய் அமைந்தது போல், 1857-ல் இந்தியாவில் உள்ள வெள்ளைக்காரர்களுக்கு யமனாக விளங்கிய தாதியா தோபேக்கு நர்மதை நதி இடையூறாக இருந்தது. அப்போது பிரிட்டிஷாரிடம் அதிகத் துருப்புகள் இருந்தன. ஏராளமான ஆயுதங்களும் இருந்தன. தேசத் துரோகிகளான மன்னர்களின் அபரிமிதமான உதவியும் பிரிட்டிஷாருக்குக் கிடைத்தது. அந்நிலையில் ஏழையான தாதியா என்ன செய்ய முடியும்? நர்மதையைத் தாண்டி வந்தாலன்றி அவர் எதுவும் செய்ய முடியாது. பயங்கரமான வெள்ளப் பெருக்குடன் ஓடிய நர்மதையைத் தாண்டுவதற்குப் பால வசதியில்லை; ஓடங்களும் இல்லை. மகாராஷ்டிரப் புலி தாதியா அப்போதும் சோர்வு அடையவில்லை. துருப்புகளுடனும், தளவாளங்களுடனும் நர்மதையில் குதித்து நீந்தி அக்கரை சேர்ந்து, ஆங்கிலேயர்களைப் பல மாதங்கள் வரையில் அலற அடித்தார். "நெப்போலியன்கூடச் செய்யத் துணியாத காரியத்தைச் செய்து, ஆச்சரியகரமான வெற்றி பெற்ற தாதியா தோபேயைப் பாராட்டாமல் இருக்க முடியாது. உலகில் இந்தியர்களைத் தவிர வேறு எவரும் அவ்விதம் நீந்திச் சென்றிருக்க முடியாது" என்று ஆங்கிலச் சரித்திராசிரியர் மாலிசன் புகழ்ந்துள்ளார்.



## ஜான்ஸி ராணி

ஜான்ஸியின் மன்னர் அகால மரணமடைந்த போது ஜான்ஸி ராணி லக்ஷ்மி பாய்க்கு இருபத்துமூன்று வயதுகூட நிரப்பவில்லை. அந்த மன்னருக்கு ஆண் வாரிசு யாருமே இல்லாததால், ஜான்ஸி ராஜ்யத்தைத் தங்களிடம் ஒப்புவித்துவிட வேண்டும் என்று பிரிட்டிஷார் செய்தி அனுப்பினர். தங்கள் மிரட்டலுக்கெல்லாம் யுவதியான லக்ஷ்மிபாய் பணிந்து விடுவாள் என்று அவர்கள் எண்ணினர்.

"ஜான்ஸி ராஜ்யத்தில் உரிமை கொண்டாடுவதற்கு நீங்கள் யார்? உங்களுக்குப் போர் முனையில் என் வாள் பதில் கூறும்" என்று முழங்கினாள் லக்ஷ்மிபாய். அவ்வளவு தான்! பல இடங்களிலும் வெள்ளைத் துருப்புகளுக்கும் ஜான்ஸி ராணித் துருப்புகளுக்கும் இடையே பயங்கரமான போர்கள் நடந்தன. ராணியே முன்னணியில் நின்று போரை நடத்தினாள். வீராங்கனை ஜான்ஸியின் வீரர்கள் உக்ரமாகச் சண்டையிட்டனர். வெள்ளையர்களின் தலைகள் கணக்கின்றி உருண்டன. போரிட்டவண்ணமே ஜான்ஸிராணி வீர சுவர்க்கம் எய்தினாள். போர்க்களத்தில் லக்ஷ்மிபாயின் வீர தீர பராக்கிரமச் செயல்களை ஆங்கில சரித்திராசிரியர்களும் பாராட்டியுள்ளனர். பாரத நாட்டின் சுதந்திரத்துக்காக உயிரைத் துச்சமாக மதித்து உக்ரப் போர் நடத்திய வீரமாதேவி ஜான்ஸி ராணி லக்ஷ்மிபாய்க்கு உவமை கூற உலக சரித்திரத்திலேயே யாரும் இல்லை எனலாம்.



## தாதியா தோபே

ஆங்கிலேயர்களை முறியடித்து இங்கிலாந்தைத் தமது வசப்படுத்திக் கொள்ளுவதற்கு இடையூறாக நெப்போலியனுக்கு இங்கிலீஷ் கால்வாய் அமைந்தது போல், 1857-ல் இந்தியாவில் உள்ள வெள்ளைக்காரர்களுக்கு யமனாக விளங்கிய தாதியா தோபேக்கு நர்மதை நதி இடையூறாக இருந்தது. அப்போது பிரிட்டிஷாரிடம் அதிகத் துருப்புகள் இருந்தன. ஏராளமான ஆயுதங்களும் இருந்தன. தேசத் துரோகிகளான மன்னர்களின் அபரிமிதமான உதவியும் பிரிட்டிஷாருக்குக் கிடைத்தது. அந்நிலையில் ஏழையான தாதியா என்ன செய்ய முடியும்? நர்மதையைத் தாண்டி வந்தாலன்றி அவர் எதுவும் செய்ய முடியாது. பயங்கரமான வெள்ளப் பெருக்குடன் ஓடிய நர்மதையைத் தாண்டுவதற்குப் பால வசதியில்லை; ஓடங்களும் இல்லை. மகாராஷ்டிரப் புலி தாதியா அப்போதும் சோர்வு அடையவில்லை. துருப்புகளுடனும், தளவாளங்களுடனும் நர்மதையில் குதித்து நீந்தி அக்கரை சேர்ந்து, ஆங்கிலேயர்களைப் பல மாதங்கள் வரையில் அலற அடித்தார். "நெப்போலியன்கூடச் செய்யத் துணியாத காரியத்தைச் செய்து, ஆச்சரியகரமான வெற்றி பெற்ற தாதியா தோபேயைப் பாராட்டாமல் இருக்க முடியாது. உலகில் இந்தியர்களைத் தவிர வேறு எவரும் அவ்விதம் நீந்திச் சென்றிருக்க முடியாது" என்று ஆங்கிலச் சரித்திராசிரியர் மாலிசன் புகழ்ந்துள்ளார்.



## மருது பாண்டியர்கள்

கட்டபொம்மனுக்கு அடுத்தாற்போல் கிழக்கிந்திய கம்பெனியாரின் ஆதிக்க வெறியைத் தங்கள் உயிர் போகும்வரை எதிர்த்துப் போராடியவர்கள் சிவகங்கைச் சீமையைச் சேர்ந்த வீரர்களான மருது சகோதரர்கள்.

தங்கள் கோட்டை கொத்தளங்களை இழந்து வனங்களில் ஒளிந்து திரிந்து வந்த காலத்திலும் அவர்கள் வீரம் குலையவில்லை. வெள்ளைக்காரர்களின் வெள்ளிப் பணத்துக்கு ஆசைப்பட்டு நாட்டைக் காட்டிக் கொடுக்கும் கயவர்களைக் கண்டு உள்ளம் பொருமினர்.

ஒரு நாள் வனத்திலே பெரிய மருது வெள்ளைக்காரர்களின் வெள்ளி நாணயங்களைத் தரையில் போட்டு மிதித்து, "இந்த அற்பக் காசுக்கு ஆசைப்பட்டு, வீரர்களே, தாய் நாட்டைக் காட்டிக் கொடாதீர்கள்! துள்ளி எழுந்திருங்கள்! வெள்ளையர்களை விரட்டியடியுங்கள்!" என்று வீரமூட்டினான். கம்பெனியாரை எதிர்த்துப் போராடி வந்தான். தன்பட்ட இரண்டு தமிழ் சகோதரர்கள் மிருக பலம் வாய்ந்த அன்னிய சர்க்காரை எதிர்த்து வீர முழக்கம் செய்ததை இப்பொழுது எண்ணிப் பார்த்தால்கூட உள்ளம் சிலிர்க்கிறது.

அவர்களின் உதாரணமானது வாழையடி வாழையாகத் தமிழ் மக்களின் சந்ததிகளுக்குத் தேசபக்தியையும் ஆண்மையையும் அஞ்சா நெஞ்சத்தையும் உண்டுபண்ணுகிறது.



## முதல் முழக்கம்

**பா**ரத நாட்டில் முதன் முதலில் பிரிட்டிஷாரின் ஆதிக்கத்தை எதிர்த்து வீர முழக்கம் செய்தவன் தமிழன். பாரத நாட்டில் வர்த்தகம் செய்யவந்த கிழக்கிந்திய கம்பெனியார் நாடாளும் ஆசையும் கொண்டனர். அப்படி ஆசையோடு பாஞ்சாலங்குறிச்சி மீது பீரங்கிப் படை யுடன் ஆங்கிலேயர் போர் தொடுத்தபோது, சீறி எழுந்தான் கட்டபொம்மன்.

1799-ம் ஆண்டு செப்டம்பர் மாதம் ஐந்தாம் தேதி யன்று காலை பாஞ்சாலங் குறிச்சி வீர மண்ணில் பகைவர்களின் பீரங்கிச் சத்தம் கேட்டது.

பீரங்கிச் சத்தம் கேட்டவுடன்—கட்டபொம்முதுரை கோட்டைமீதேறி
ஆரடா கட்ட பொம்மேந்திரன் கோட்டையில் அஞ்சாமல் வாரவன் என்றதட்டி
பாளையம் வாரதைப் பார்த்தனரா மங்கே—பாயும் புலிபோலே சீறினராம்!
வாளை எடுத்துறை விட்டனராம்—கையில் வைத்தபடி வெளிப்பட்டனராம்!

கையில் வாளுடன் வெளிப்பட்டு, பிரிட்டிஷாரின் பீரங்கிப் படையை எதிர்த்து வீரப் போர் புரிந்தான். அந்தச் சம்பவம் நடைபெற்று நூற்றைம்பது ஆண்டுகளுக்கு மேல் ஆகிவிட்டதாயினும் இன்றும் மக்களுக்கு வீரம் புகட்டுகிறது! வாழ்க கட்டபொம்மன் வீரம்!



## தாதியா தோபே

ஆங்கிலேயர்களை முறியடித்து இங்கிலாந்தைத் தமது வசப்படுத்திக் கொள்ளுவதற்கு இடையூறாக நெப்போலியனுக்கு இங்கிலீஷ் கால்வாய் அமைந்தது போல், 1857-ல் இந்தியாவில் உள்ள வெள்ளைக்காரர்களுக்கு யமனாக விளங்கிய தாதியா தோபேக்கு நர்மதை நதி இடையூறாக இருந்தது. அப்போது பிரிட்டிஷாரிடம் அதிகத் துருப்புகள் இருந்தன. ஏராளமான ஆயுதங்களும் இருந்தன. தேசத் துரோகிகளான மன்னர்களின் அபரிமிதமான உதவியும் பிரிட்டிஷாருக்குக் கிடைத்தது. அந்நிலையில் ஏழையான தாதியா என்ன செய்ய முடியும்? நர்மதையைத் தாண்டி வந்தாலன்றி அவர் எதுவும் செய்ய முடியாது. பயங்கரமான வெள்ளப் பெருக்குடன் ஓடிய நர்மதையைத் தாண்டுவதற்குப் பால வசதியில்லை; ஓடங்களும் இல்லை. மகாராஷ்டிரப் புலி தாதியா அப்போதும் சோர்வு அடையவில்லை. துருப்புகளுடனும், தளவாளங்களுடனும் நர்மதையில் குதித்து நீந்தி அக்கரை சேர்ந்து, ஆங்கிலேயர்களைப் பல மாதங்கள் வரையில் அலற அடித்தார். "நெப்போலியன்கூடச் செய்யத் துணியாத காரியத்தைச் செய்து, ஆச்சரியகரமான வெற்றி பெற்ற தாதியா தோபேயைப் பாராட்டாமல் இருக்க முடியாது. உலகில் இந்தியர்களைத் தவிர வேறு எவரும் அவ்விதம் நீந்திச் சென்றிருக்க முடியாது" என்று ஆங்கிலச் சரித்திராசிரியர் மாலிசன் புகழ்ந்துள்ளார்.



## ஜான்ஸி ராணி

ஜான்ஸியின் மன்னர் அகால மரணமடைந்த போது ஜான்ஸி ராணி லக்ஷ்மி பாய்க்கு இருபத்துமூன்று வயதுகூட நிரம்பவில்லை. அந்த மன்னருக்கு ஆண் வாரிசு யாருமே இல்லாததால், ஜான்ஸி ராஜ்யத்தைத் தங்களிடம் ஒப்புவித்துவிட வேண்டும் என்று பிரிட்டிஷார் செய்தி அனுப்பினர். தங்கள் மிரட்டலுக்கெல்லாம் யுவதியான லக்ஷ்மிபாய் பணிந்து விடுவாள் என்று அவர்கள் எண்ணினர்.

'' ஜான்ஸி ராஜ்யத்தில் உரிமை கொண்டாடுவதற்கு நீங்கள் யார்? உங்களுக்குப் போர் முனையில் என் வாள் பதில் கூறும் '' என்று முழங்கினாள் லக்ஷ்மிபாய். அவ்வளவுதான்! பல இடங்களிலும் வெள்ளைத் துருப்புகளுக்கும் ஜான்ஸி ராணித் துருப்புகளுக்கும் இடையே பயங்கரமான போர்கள் நடந்தன. ராணியே முன்னணியில் நின்று போரை நடத்தினாள். வீராங்கனை ஜான்ஸியின் வீரர்கள் உக்ரமாகச் சண்டையிட்டனர். வெள்ளையர்களின் தலைகள் கணக்கின்றி உருண்டன. போரிட்டவண்ணமே ஜான்ஸிராணி வீர சுவர்க்கம் எய்தினாள். போர்க்களத்தில் லக்ஷ்மிபாயின் வீர தீர பராக்கிரமச் செயல்களை ஆங்கில சரித்திராசிரியர்களும் பாராட்டியுள்ளனர். பாரத நாட்டின் சுதந்திரத்துக்காக உயிரைத் துச்சமாக மதித்து உக்ரப் போர் நடத்திய வீரமாதேவி ஜான்ஸி ராணி லக்ஷ்மிடாய்க்த உவமை கூற உலக சரித்திரத்திலேயே யாரும் இல்லை எனலாம்.

## திலகர் வாழ்க்கையில் சில காட்சிகள்

*

1. பாலகங்காதர திலகரும் அவருடைய குடும்பத்தினரும்.

2. திலகர் தமது சுற்றுப் பிரயாணத்தின்போது நடுவழியில் ஒரு ரயில்வே ஸ்டேஷனில் தங்க நேரிட்டது. அப்போது அவர் ஸ்டேஷன் பிளாட்பாரத்திலேயே தம்முடைய ஸ்நானத்தை முடித்துக் கொள்கிறார்.

3. சுதந்திரத்தைக் கோரிப் பிரிட்டனுக்குச் சென்ற இந்திய காங்கிரஸின் தூதுகோஷ்டியினருக்குப் பிரிட்டிஷ் பார்லிமெண்டின் அங்கத்தினர்கள் வரவேற்பு உபசாரம் நடத்தினார்கள். திலகர், பிபின் சந்திரபால், சரோஜினி தேவி முதலிய தேசத் தலைவர்களைப் படத்தில் காணலாம்.





1. திலகர் தமது கேஸரி பத்திரிகையின் தலையங்கத்தைத் தமது இல்லத்தில் அமர்ந்து திருத்துகிறார். 2. அந் நாட்களில் பாரதத்தைத் தட்டி எழுப்பிய அரசியல் திரிமூர்த்திகளான லாலா லஜபதிராய், பாலகங்காதர திலகர், விபின் சந்திரபாலர் மூவரும் இனிய நண்பர்கள். மக்கள் இவர்களை லால், பால், பால் என்று உரிமையோடு அழைத்து மகிழ்வார்கள்.

பெரியதொரு நூல் நிலையத்தையும், கலை மன்றத்தையும் அமைத்திருக்கிறார். இந்தக் கலை மன்றத்தை ஜனாதிபதி ராஜன்பாபுவைக் கொண்டு திறந்து வைத்த காட்சிகள் சிலவற்றை இந்த இரு பக்கங்களில் காணலாம். எதிர்ப் பக்கம் : பொதுக் கூட்ட மேடைமீதிருந்த ராஷ்டிரபதி தேபர் மக்களுக்கு வணக்கம் செலுத்துகிறார். திரு பி. எஸ். குமாரசாமி ராஜாவின் நன்கொடையான காங்கிரஸ் பொன் விழா ஞாபகார்த்தத் திடலின் முகப்பு. ராஜன் பாபு திறந்துவைத்த காந்தி மகான் சிலை. திரு பி. எஸ். குமாரசாமி ராஜா ஜனாதிபதியை வரவேற்றுப் பேசுகிறார். இந்தப் பக்கத்தில்: குமாரசாமி ராஜா தேசத்துக்கு அளித்த காந்தி கலை மன்றக் கட்டடம். நூல் நிலையத்தை ராஜன் பாபு பார்வையிடுகிறார். நூல் நிலைய அறையிலும் காந்தி மகான் சிலை இருக்கிறது. ராஜபாளையம் நகர சபை ஜனாதிபதிக்கு அளித்த வரவேற்பு. பொதுக் கூட்டத்தில் பெண்கள் இருந்த பகுதியின் தோற்றம்.





## நேப்பாள மன்னர்

நேப்பாளம் இந்தியாவின் வட எல்லையில் இமயமலைச் சாரலிலுள்ள சுதந்திர நாடு. பிரிட்டிஷ் ஆட்சிக் காலத்திலிருந்தே நேப்பாளம் சுதந்திர நாடாக இருந்து வருகிறது. நேப்பாளம் காட்மண்டுவிலுள்ள பசுபதிசுவரர் கோயில் சைவப் பெருமக்களுக்குப் புனித க்ஷேத்திரம். தமிழகத்திலுள்ள சைவ பக்தர்கள் அணியும் ருத்ராக்ஷ மாலைகள் நேப்பாளத்திலிருந்து வருவது என்று கூறினால், ஆயிரக் கணக்கான ஆண்டுகளுக்கு முன்பிருந்தே தமிழ் நாட்டுக்கும் நேப்பாள ராஜ்யத்துக்கும் எவ்வளவு நெருங்கிய தொடர்பு இருந்து வந்திருக்கிறது என்பதை அறியலாம். அத்தகைய சுதந்திர நேப்பாள நாட்டின் மன்னர் ஸ்ரீ மகா ராஜாதிராஜ மகேந்திர வீர விக்ரமசகாதேவ் அவர்களுக்கும் மகாராணி ரத்ன ராஜ்யலட்சுமிதேவி அவர்களுக்கும் சென்ற வாரம் சென்னை மக்கள் குதூகலமான வரவேற்பு அளித்து மகிழ்ந்தார்கள். சென்னை கவர்னர் மாளிகையில் ராஜ தம்பதிகளுக்கு விருந்துபசாரம் செய்ததையும், சென்னை நகரசபை வரவேற்பு உபசாரப் பத்திரம் வாசித்தளித்ததையும் இங்கே படத்தில் காணலாம்.



# "கௌரிக் கண்மணி!"

"கௌரிக் கண்மணி" "கௌரிக் கண்மணி" என்று கூப்பிடுவதில் கல்கி அவர்களுக்கு ஒரு ஆனந்தம். அவளுடன் விளையாடுவது ஒரு இனிய பொழுது போக்கு. அவ்விதம் கல்கி அவர்களின் உள்ளத்தைக் கவர்ந்த அருமைப் பேத்தி கௌரியின் பல முக பாவங்களை இந்தப் பக்கத்தில் காணலாம்.

# ஸ்ரீ டி.கே.சி.யின் கடிதங்கள்

திருக்குற்ருலம்,
5—6—45

அருமை நண்பர் கல்கி அவர்களுக்கு,

மாயவரத்தில் 23—5—45 அன்று காலையில் எல்லாருமாகச் சந்தித்தோம். நேற்றுக் கோயில்பட்டியில் பிற்பகல் 2-20 மணிக்குப் பிரிந்தோம்.

இடையில் ஆனந்தித்த அனுபவம் கொஞ்சவஞ்சம் அல்ல: அதோடு நெஞ்சை விட்டுப் போகாத அனுபவம்.

ராஜாஜி எல்லாவற்றையும் ரொம்ப அனுபவித்தார்கள்: அனுபவித்தார்கள் என்பது எட்டயபுரத்திலிருந்து தூத்துக்குடிக்குப் போகும்போது "எல்லாவற்றிற்கும் இப்படித்தான் முடிவு உண்டென்பதை எண்ண வேண்டி யிருக்கிறது" என்று சொன்னதிலிருந்து தெரிந்தது.

சாதாரணமாய் மகாநாடு கூடிப் பிரசங்கம் செய்கிறது என்ருல் கஷ்டமான காரியந்தான். ஆனுல் ராஜாஜி தலைமையில் நடந்த மகாநாடோ ஒரே ரஸமயமாய் இருந்தது. எல்லாருமே உணர்ச்சியோடு பேசினுர்கள். ராஜாஜி பெரிய விஷயங்களை நன்ருய் விளக்கினுர்கள். எல்லாவற்றையும் விடத் தங்கள் வந்தனேபசாரம் கேட்கக் கேட்க ஆனந்தமாய் இருந்தது. சதாசிவம், சிவகாமி சபதத்தில் ஒரு பாத்திரமோ என்று சொல்லும்படி அவரைப் பற்றிச் சொன்னது அவ்வளவு ரஸமா யிருந்தது. பேச்சு முடிந்ததும் வந்தனத்துக்கு உரியவர்கள் வேறு இல்லையா என்று எண்ணத் தோன்றியது.

பொதுவாக எந்த மகாநாட்டிலும் வந்தனேபசாரம் சங்கீதக் கச்சேரியில் "மங்களம்" போன்றது தான். அதாவது சபையோரை எழுந்துவிடச் செய்கிற காரியந்தான். துண்டை உதறச் செய்கிற காரியந்தான். தங்கள் வந்தனேபசாரமோ பதிவுக்கு மாருக எல்லாரையும் ஆனந்தத்தில் திளைக்கச் செய்தது.

உயிரோடிருக்கிறவர்களுக்கு, நல்ல காலம் பிறப்பது போல அமரநிலை அடைந்தவர்களுக்கும் நல்ல தசை திடீர் என்று ஏற்படுகிறது. பாரதிக்கு அப்படி ஏற்பட்டு விட்டது ரொம்ப சந்தோஷம்.

தங்கள்,

டி. கே. சிதம்பரநாதன்

பிற்குறிப்பு. (10—6—45)

கல்கி நேற்று மாலைதான் கிடைத்தது. அதற்காக இங்கே ஒரே அடிபிடிதான்.

'பொழுது புலர்ந்தது' ஒன்றைத்தான் படித்திருக்கிறேன். நேயர்களை எட்டயபுரத்துக்குக் கொண்டு போய்ப் பெரிய நெருக்கடிக்கு உள்ளாக்கி விடுகிறது. கட்டுரையும் வாய்ப்பான படங்களும் சேர்ந்து என்றுமில்லாத விழா, எதிர் பாராத கூட்டம், ஒரே கோலாகலம், வாழை, தோரணம், மங்களகிரியை, ராஜாவும் ராஜாஜியும் சேர்ந்து கொத்துவேலை செய்கிற காரியம் எல்லாவற்றையும் அற்புதமான பிரகாசத்தோடு கண்ணுக்கு முன் கொண்டு வருகின்றன. எட்டயபுரத்துக்கு வந்தவர்கள் ஜோர் ஜோர் என்று சொல்லுகிருர்கள். வராதவர்கள், 'அடடா! வராமல் போய் விட்டோமே' என்று சொல்லுகிருர்கள்.

ராஜாஜிக்கு ரொம்ப திருப்தி. எட்டயபுரத்துக்கு வந்தவர்கள் தானே அவர்கள்.

பிள்ளையாரை எங்கே வேண்டுமானுலும்—குளக்கரை, ஆற்றங்கரை, முக்கு முடுக்கு எங்கே வேண்டுமானுலும் வைத்துக் குழையோ பூவோ போட்டு ஆராதனை செய்து விடலாம். யாரும் குற்றம் சொல்ல மாட்டார்கள். அது போலத்தான் பாரதி அஸ்திவார விழாவுக்கு என்னை உபயோகப் படுத்தி யிருக்கிறது.

பிரிய அன்புள்ள
டி. கே. சிதம்பரநாதன்

கல்கி திரு ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்கள் பக்கத்தில்உட்கார்ந்திருப்பவர்தான் அவர் சகோதரர் திரு ரா. வேங்கடராமய்யர். கல்கி அவர்கள் மடியில் பேத்தி கௌரி.



# திரு. வி. க. நகர்

தமிழும், தமிழ்நாடும், தொழிலாளரும் உய்யப் பாடுபட்ட உத்தம ஞானியான திரு வி. கலியாண சுந்தர முதலியார் அவர்களுக்குச் சென்னை நகரை அடுத்துள்ள செம்பியத்தில் ஒரு ஞாபகார்த்தச் சின்னம் எழுப்பிப் பாராட்டி யிருக்கிறார்கள். திரு வி. க. நகர் என்று ஒரு நகரையே உருவாக்கி யிருக்கிறார்கள். தொழிலாளர்களுக்காகக் கட்டப் பட்ட அந்த நகரை நமது முதன் மந்திரி திரு காமராஜ் ஆகஸ்டு 16-ந் தேதி திறந்துவைத்துத் தமிழ்த் தந்தைக்கு அஞ்சலி. செலுத்தினார். உழைப்பின் பெருமையை உணர்த்திய உத்தம ரான திரு வி. க. வின் உருவச்சிலையை நிதி மந்திரி திரு சி. சுப்பிரமணியம் திறந்து வைப்பதையும், தொழிலாளர்பாக்கத்தையும், திரு வி. க. வின் திருஉருவச் சிலையையும் படத்தில் காணலாம்







மதுரையில், சிரஞ்சீவி கே. சுவாமி
நாதன் பி. எஸ்ஸி. க்கும், சௌபாக்
கியவதி பத்மினிக்கும் கோலாகல
மாகத் திருமணம் நடந்தது.



பல்லானுவில் திரு கிருஷ்ணன்
அவர்களுக்கும் திருமதி ராதா
வுக்கும் மிகச் சிறப்பாகத் திரு
மணம் நடைபெற்றது.

# வாழ்க



சிரஞ்சீவி கோபாலகிருஷ்ணனுக்கும்
சௌபாக்கியவதி பார்வதிக்கும்
மனப்பாடத்தில் சிறப்பாகத் திரு
மணம் நடந்தேறியது.



கோயமுத்தூர், பிரபல அட்வகேட். திரு
ஜி. வெங்கட்ரமணய்யரின் சகோதரர்
புதல்வி திருமதி சாந்தாவுக்கும், திரு பால
சுப்பிரமணியத்துக்கும் வெகு விமரிசை
யாகத் திருமணம் நடந்தது.



கல்கத்தா இம்பீரியல் கெமிக்கல்
இண்டஸ்ட்ரீஸைச் சேர்ந்த சிரஞ்சீவி
எஸ். ராமமூர்த்திக்கும், சௌபாக்
கியவதி மைதிலிக்கும் சிறப்பாகத்
திருமணம் நடந்தது.



பம்பாய் சார்ட்டர்ட் அக்கௌண்டெண்ட் திரு எஸ். வெங்கடகிருஷ்ணனின் புதல்வி திருமதி விஜயலக்ஷ்மிக்கும் திரு கே. எஸ். சந்திரசேகரன் அவர்களுக்கும் பங்களூரில் திருமணம் நடைபெற்றது.



புதுதில்லி இந்திய சர்க்கார் காரியாலயத்தைச் சேர்ந்த திரு சீனிவாசனுக்கும், திருமதி லலிதாவுக்கும், சென்னையில் கோலாகலமாகத் திருமணம் நடந்தேறியது.

# மணமக்கள்



காட்டிலாகா அதிகாரி திரு வி. என். சுந்தரம் அவர்களுக்கும் சௌபாக்கியவதி சொர்ணலக்ஷ்மிக்கும் பாலக்காட்டில் அதிவிமரிசையாகத் திருமணம் நடந்தேறியது.



பம்பாய், இந்துஸ்தான் லீவர் கம்பெனியைச் சேர்ந்த திரு எல். வி. வேங்கடேஸ்வரன், திருமதி அன்னபூர்ணியைத் திருமணம் புரிந்து கொண்டார்.



ரங்கூன் மெர்க்கெண்டைல் பாங்கியைச் சேர்ந்த திரு வெங்கட ராவ், திருமதி தனலக்ஷ்மியை மணம் புரிந்துகொண்டார்.

★

பாரதப் பிரதமர் ஜவாஹர்லால் நேருவை இந்தியாவிலுள்ள அல்பேனியத் தூதுவர் உல்லிலுலோ அவர்கள் ஆகஸ்டு 28ந் தேதி சந்தித்து அளவளாவினர்.

★



கல்கத்தா தமிழ் மாணவர் மன்றத்தினர் ஆகஸ்டு 16ந்தேதி சுதந்திர நூற்றாண்டு விழாவையொட்டி, வீர முழக்கம் செய்த வீரபாண்டியக் கட்டப்பொம்மனின் திருநாளை வெகு விமரிசையாகக் கொண்டாடினர். இவ்விழாவில் திரு விவேகானந்த முகர்ஜியும், திரு ஆர். நாராயணன் அவர்களும் கலந்து கொண்டு சிறப்பித்தனர்.

கர்நாடக சங்கீத வித்வான் முசிரி ஸ்ரீ சுப்பிரமண்ய அய்யருக்கு ஜனாதிபதிப் பரிசு கிடைத்ததைப் பாராட்டிப் பம்பாய் போதர் கல்லூரியில் பாரதிய சங்கீத கலைக் கழகத்தினர் பாராட்டு விழா நடத்தினர். அந்த வைபவத்திலே திரு ஆர். வரதாச்சாரி அவர்கள் வெள்ளிப் பரிசை முசிரி அவர்களுக்கு வழங்குகிறார்.




# குடும்பம் முழுவதற்கும் ஒரே டால்க்

<u>ரம்மியமணம் கொண்ட</u> ப்ரோடெக்ஸ் உயர்ந்தரக சர்வ பிரயோக வாசனைப் பௌடர்; மிக மிகக் குறைந்த விலையில் மிக மிகப் பெரிய டப்பா! இந்தியா வெங்கும் ஆயிரக்கணக்கான குடும்பங்கள் ப்ரோடெக்ஸ் டால்கம் பௌடரைவிரும்புகின்றன—அதன் வசீகரமான வாசனையினாலும் எல்லாவற்றிற்கும் உபயோகப்படும் பரிமள டால்கம் பௌடர் என்பதனாலும்......

## இன்று ப்ரோடெக்ஸ் உபயோகித்தீர்களா?

குணம் உத்தரவாதம்
கால்கேட் பாமாலிவ்
அளிக்கிறது




## ப்ரோடெக்ஸ்

### சர்வப்பிரயோக

### வாசனைப்பௌடர்

PTP/G/3



பாட்டுக் கொரு புலவன்
பாரதி

தமிழ் வளர்த்த





கவி நாயகம்
'தே. வி.'

முத்தமிழ் முனிவர்
டி. கே. சி.

## பெரியார்கள்



இலங்கை தந்த
இன் தமிழ் நாவலர்



தமிழ்த் தாத்தா



ஆராய்ச்சி மன்னர்
வையாபுரிப் பிள்ளை





யாழ் நூல் கண்ட
விபுலானந்தர்

தனித் தமிழ் கண்ட
மறைமலையடிகள்





வீரத் தமிழ் வளர்த்த
திரு.வி.க.

நாளும் தமிழ் வளர்த்த
பேராசிரியர்

# திருமணங்கள்

நமது அன்பார்ந்த நேயர்களுக்கு ஒரு மகிழ்ச்சிகரமான குடும்ப நிகழ்ச்சியைத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறோம்.

நிகழும் வைகாசி மாதம் 25-ந் தேதி (7-6-1957) வெள்ளிக்கிழமை சுப தினத்தில் கல்கி மானேஜிங் டைரக்டரும் ஆசிரியருமான திரு சதாசிவம் அவர்களின் குமாரிகள் சௌபாக்கியவதி ராதாவுக்கும், சௌபாக்கியவதி விஜயலக்ஷ்மிக்கும் திருமணங்கள் இனிது நடந்தேறின.

சௌபாக்கியவதி ராதாவுக்கும் என்ஜினியர் திரு எஸ். குருசாமி ஐயர் அவர்களின் குமாரன் சிரஞ்சீவி விசுவநாதனுக்கும், சௌபாக்கியவதி விஜயலக்ஷ்மிக்கும் திரு ரா. கிருஷ்ணமூர்த்தி (கல்கி) அவர்களின் குமாரன் சிரஞ்சீவி ராஜேந்திரனுக்கும் கல்கி காரியாலயப் பூங்காவில் நிர்மாணிக்கப்பட்டிருந்த விசேஷ கல்யாண மண்டபத்தில் மிகச் சிறப்பாகத் திருமணங்கள் நடைபெற்றன.

இந்தத் திருமண வைபவத்தில் நமது மதிப்புக்குரிய ராஜாஜி அவர்கள் விஜயம் செய்து மணமக்களுக்கு ஆசிர்வாதம் செய்தார்கள். இதைப் பெறற்கரும் பாக்கியமாகக் கருதிப் போற்றி மகிழ்கிறோம்.

மற்றும் திருமண வைபவத்துக்கும் மாலையில் நடைபெற்ற சங்கீத கலாநிதி செம்மங்குடி சீனிவாச அய்யர் அவர்கள் கச்சேரிக்கும் சென்னை ராஜ்ய மந்திரிகள் திரு பக்தவத்ஸலம், திரு சி. சுப்பிரமணியம், திரு கக்கன், திருமதி லூர்தம்மாள், எதிர்க்கட்சித் தலைவர் திரு வி. கே. ராமசாமி முதலியார், சபாநாயகர் யு. கிருஷ்ண ராவ், திரு தேவதாஸ் காந்தி, அவர் குடும்பத்தினர், நாமக்கல் கவிஞர் ராமலிங்கம் பிள்ளை, திரு சிவஞான கிராமணியார், சுத்தானந்த பாரதியார், சென்னை நகரசபை மேயர் திரு சீனிவாசன், பத்திரிகையாளர்களான திரு எஸ். எஸ். வாஸன், திரு ராமநாத் கோயங்கா, திரு காசா சுப்பாராவ், பிரமுகர்களான பூண்டி வாண்டையார் திரு கி. துளசி ஐயா, கபிஸ்தலம் மூப்பனார் திரு கருப்பையா, திருப்புகழ்மணி திரு டி. எம். கிருஷ்ணசாமி ஐயர்-மற்றும் நண்பர்களும், இசைவாணர்களும், கலைவாணர்களும் விஜயம்செய்து சிறப்பித்தார்கள்.

ஜனாதிபதி டாக்டர் ராஜேந்திரபிரசாத், உதவி ஜனாதிபதி ராதாகிருஷ்ணன், பாரதத்தின் பிரதமர் பண்டித ஜவாஹர்லால் நேரு, திருமதி இந்திரா காந்தி மற்ற மத்திய சர்க்கார் மந்திரிகள், மைசூர் மகாராஜா, திருவனந்தபுரம் மகாராஜா, திருமதி பத்மஜா நாயுடு, திரு ஸ்ரீபிரகாசா, திரு கே. எம். முன்ஷி, திரு ஏ. ஜே. ஜான், திரு திவாகர், திரு பட்டாபி சீதாராமய்யா, திரு ராமகிருஷ்ண ராவ், திரு திருவேதி ஆகிய ராஜ்ய கவர்னர்கள், சென்னை ராஜ்ய முதல் மந்திரி திரு காமராஜ நாடார் ஆகிய எண்ணற்ற பிரமுகர்களிடமிருந்தும், திரு வினோபா அடிகள், சென்னை ஆர்ச் பிஷப், விளம்பர ஸ்தாபனங்கள், அகில இந்தியாவில் உள்ள எல்லா பத்திரிகை ஆசிரியர்கள், தமிழ்கூறும் நல்லுலகில் உள்ள எல்லா கல்கி ஏஜண்டுகள் ஆகியவர்களிடமிருந்தும் வாழ்த்துச் செய்திகள் வந்திருந்தன.

காஞ்சி காமகோடிபீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சார்ய சுவாமிகள், சிருங்கேரி சாரதா பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சார்ய சுவாமிகள் ஆகியவர்கள் நல்லாசிகள் கொண்ட ஸ்ரீமுகங்களும் மணமக்களுக்கு வந்திருந்தன.

செம்மங்குடி சீனிவாச ஐயர் அவர்களின் அமோகமான சங்கீதக் கச்சேரி நடைபெற்றது. வயலின் ஸ்ரீ டி. என். கிருஷ்ணன், மிருதங்கம் பழனி ஸ்ரீ சுப்பிரமணிய பிள்ளை, கடம் உமையாள்புரம் ஸ்ரீ கோதண்டராமய்யர் ஆகியவர்கள் பக்கவாத்தியம் வாசித்துச் சிறப்பித்தார்கள்.

சங்கீத கலாநிதி திருவீழிமிழலை சுப்பிரமண்ய பிள்ளை சகோதரர்கள், இஞ்சிக்குடி பிச்சைக்கண்ணு குழுவினர்கள், சென்னை ஸ்ரீ நடேசப் பிள்ளை குழுவினர்கள் நாதஸ்வர கான மழை பொழிந்தார்கள்.

சென்னை நகரசபை பாண்டு வாத்திய கோஷ்டியினர் பாண்டு வாத்திய கீதம் இசைத்து மகிழ்வித்தார்கள்.

திருமணத்துக்கு விஜயம் செய்து சிறப்பித்தவர்களுக்கும், வாழ்த்துச் செய்தி அனுப்பியவர்களுக்கும், மற்றும் பல வகையான தொண்டுகள் செய்தவர்களுக்கும் எங்கள் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

கல்கி நேயர்கள் அனைவருடைய ஆசியையும் கோருகிறோம்.

மாதர்குல திலகங்கள்

# பாரிஜாதம் நாயுடு

பதினைந்து ஆண்டுகளுக்கு முன் ஒரு சகோதரியுடன் நெருங்கிப் பழகும் வாய்ப்பு எனக்குக் கிடைத்திருந்தது. பிறகு இரண்டொரு தடவைகள் சில நிமிஷங்கள் பார்க்கநேர்ந்தது. சென்ற வாரம் வெளிநாட்டுக்குப் போகும் அந்தச் சகோதரியைச் சந்தித்தேன். பதினைந்து வருஷங்களில் அந்தச் சகோதரி அறிவு, ஆற்றலில் பிறை முழுமதி அடைந்தமாதிரி வளர்ந்திருக்கிறார். அதற்கேற்பப் பதவியில் இருக்கிறார். ஆனால் பழைய சிநேகிதிகளிடம் சிரித்து அன்புடன் பேசும் இனித்த சுபாவம் மட்டும் கால ஓட்டத்திலும் மாறவில்லை. லேடி கனகாம்பரம் பார்வைக்குப் பகட்டாக இருந்து துவண்டு சீக்கிரம் வாடி விடும்; ஆனால் பாரிஜாத மலர் வாடாது; மணம் குன்றாது அல்லவா?

திருமதி பாரிஜாத நாயுடு அவர்கள் தஞ்சை ஜில்லாவைச் சேர்ந்த டாக்டர் ராவ்சாகிப் பார்த்தசாரதி நாயுடுவின் செல்வப் புதல்வி. பொன்னி நதியின் புனிதமான தண்ணீரைக் குடித்து வளர்ந்தவர். இல்லற வாழ்க்கையில் மகிழ்ச்சியைக் காணாத அந்தச் சகோதரி பெண்குலத்துக்குச் சேவை செய்ய நினைத்தார். நாம் எவ்வளவோ செயல்களைச் செய்ய நினைக்கலாம். ஆனால் ஒன்றைக் கூடச் செய்து முடிக்க இயலாது. இவரோ சேவை செய்வதைத் தெய்வத்தின் கட்டளையாகக் கொண்டார்.

படிப்பில் அதிக ஆர்வம் கொண்டார். வீட்டிலேயே படித்துப் பிறகு ராணி மேரி கல்லூரியில் சேர்ந்தார். 1923-ம் ஆண்டு எம். ஏ. பரீட்சையில் முதன்மையாகத் தேறினார். கல்லூரிப் படிப்பில் அநேக பதக்கங்களைப் பரிசுகளாகப் பெற்றிருக்கிறார். பிறகு எல். டி. பரீட்சையிலும் தேர்ச்சி பெற்றார்.

வெறும் கல்விப்படிப்புடன் அவர் நின்று விடவில்லை. சமூகநல சேவை செய்யத் தனிப்பட்ட பயிற்சி பெற அமெரிக்காவுக்குச் சென்றார். அங்கேயும் தம்முடைய தனிப்பட்ட சாமர்த்தியத்தால் விரைவில் வெற்றியுடன் திரும்பினார்.

1930-ம் ஆண்டு கல்வி இலாகாவில் வேலைக்கு அமர்ந்தார். சிறிது காலம் பள்ளிக்கூட இன்ஸ்பெக்டர் வேலை பார்த்தார். ஆனால் இந்தியப் பெண்களுக்குச் சேவை செய்ய வேணுமென்ற ஆவல் மனத்தில் இருந்து கொண்டே இருந்தது. அப்பொழுது இந்திய மாதர் சங்கம் மாதர் நலத்துக்காக ஒரு மந்திரி அமைக்க வேண்டு மென்று ஒரு தீர்மானம் செய்து சர்க்காரிடம் வேண்டிக் கொண்டது. அரசாங்கம் அப்படிச் செய்யாவிட்டாலும் மாதர் நல இலாகா என ஒன்று ஏற்படுத்தியது. அதில் திருமதி பாரிஜாதம் நாயுடு உயர்தர அதிகாரியாக அமர்த்தப்பட்டார்; அந்த இலாகா மூலமாகச் சேவா நிலையம் என்ற ஸ்தாபனத்தை முதன்முதலில் ஏற்படுத்தினார். இன்னும் அந்த இலாகா வாயிலாகப் பெண்களுக்கு அநேக பணிகள் ஆற்றி இருக்கிறார்.



1943, 1944 ஆண்டுகளில் யுத்த காலத்தில் பெண்கள் உதவிப் படையின் தலைவியாக வேலை பார்த்த முதல் பெண்மணி இவர்தான்.

1954-ம் ஆண்டு தில்லியில் திட்ட கமிஷனில் இருந்தார். அதன்பிறகு பிலிப்பைன்ஸில் நடந்த மகாநாட்டுக்குப் பாரத நாட்டுப் பெண்குலத்தின் பிரதிநிதியாகச் சென்றார்.

மாதர் நல இலாகா முதல் ஐந்தாண்டு திட்டத்தில் மத்திய சமூக க்ஷேம நல இலாகாவாக மாறியதும் சென்ற மாதம் இந்தோனேஷியா சர்க்காருக்கு ஐ. நா. சமூக க்ஷேம அபிவிருத்தி ஆலோசகராக நியமிக்கப்பட்டு இந்தோனேஷியா சென்றார்.

இந்தச் சகோதரி சுதந்திர இந்தியாவில் பெண்களுக்காக அநேக சேவைகள் செய்யும் சக்தியை இன்னும் அபாரமாக அடைய வேண்டுகிறோம்.

—வசுமதி ராமசுவாமி



சுதந்திரப்போரின் நூற்றாண்டு விழா கொண்டாடப்பட்ட இவ் வருஷம் ஆகஸ்டு 15-ம்தேதியன்று, அஹிம்சாமார்க்கத்தில் பாரத நாட்டின் சுதந்திரத்தை ஈட்டித் தந்த காந்திஜிக்குப் பிரதமர் நேரு அஞ்சலி செலுத்தினார். புதுதில்லியிலுள்ள காந்தி மகான் சமாதிக்கு நேருஜி மலர் மாலை சாத்துகிறார்.



சென்னையில் நடைபெற்று வரும் கதர் கண்காட்சியை மந்திரி பக்தவத்சலம் பார்வையிடுகிறார். கதர் போர்டு டைரக்டர் திரு ரா. பார்த்தசாரதி மந்திரிக்கு வண்ணக் கதர் பட்டாடைகளின் நேர்த்தியை விளக்குகிறார். கதராடைகளின் அழகிலே மந்திரி மூழ்கியிருப்பதைப் படத்தில் காணலாம்..



தொண்டுகளிலெல்லாம் தலைசிறந்தது என்று கருதப்படுவது வைத்தியப் பணிதான். ஐ. நா. சபையின் சார்பில் பாலஸ்தீனத்திலுள்ள அகதிகளுக்கு வைத்திய உதவி அளிப்பதற்காக ஏற்பட்டுள்ள வைத்தியக் குழுவுக்குப் பாரத சர்க்கார் சில டாக்டர்களையும் மருந்துகளையும் அனுப்பியிருக்கிறார்கள். அப்படிச் சென்ற டாக்டர்களில் ஒருவரான திருமதி ஜான் ஜெருசலத்திலுள்ள அரபு மாதர் சங்கத்தில் ஒரு குழந்தைக்கு வைத்தியம் செய்கிறார். குழந்தைச் செல்வத்தைப் பேணுவதிலுள்ள ஆனந்தம் அவர் முகத்திலே பிரதிபலிப்பதைப் படத்தில் காணலாம்.



பர்மாஷெல் சங்கத்தினர் சென்ற ஆகஸ்ட் 14-ந் தேதியன்று சுதந்திர விழாவைச் சிறப்பாகக் கொண்டாடினர். ராஜாஜி அவர்கள் எழுதியனுப்பியிருந்த "நமது ஜனநாயகம்" என்ற கட்டுரையை விழாவில் சங்கத்தின் உபதலைவர் எஸ். கே. பார்த்தசாரதி அவர்கள் வாசித்தார்.



இலங்கை, அக்கரைப்பற்று ஸ்ரீ ராமகிருஷ்ண வித்தியாலய சங்கத்தின் 11-வது ஆண்டு விழா சுவாமி பிரேமோத்மானந்தாஜி தலைமையில் நடந்தது. படத்தில் சங்கத் தலைவர் சுவாமி நடராஜானந்தாஜியையும், வித்தியாலயத்தின் தலைவர் அன்பன் க. நடராஜாவையும் காணலாம்.



கும்பகோணம் பெரிய தெருவிலுள்ள ஸ்ரீ ராமா ஆரம்பப் பாடசாலையில் சுதந்திர விழா குடந்தை சப் கலெக்டர் ரங்கஸ்வாமி ஐயங்கார் தலைமையில் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. பள்ளி சிறுவர்களையும் சிறுமிகளையும் படத்தில் காணலாம்.



சமீபத்தில் மதுரை ஜில்லா எழுத்தாளர்கள் ஒன்று சேர்ந்து. சங்கம் அமைத்தார்கள். இவர்களது முதல் கூட்டம் மதுரை கல்கி அலுவலகத்தில் தினமணி திரு வெ. சந்தானம் தலைமையில் சிறப்பாக நடைபெற்றது.

# திருமணங்கள்

புதுதில்லி இந்திய சர்க்கார் அதிகாரி
ஸ்ரீ ஏ. ஆர். அய்யரின் புதல்வர் ஸ்ரீ
அனந்த கிருஷ்ணனுக்கும் திருவனந்த
புரம் பர்மனென்ட் பாங்கு ஸ்ரீ கிருஷ்
ணய்யரின் புதல்வி லக்ஷ்மிக்கும் வடி
விஸ்வரத்தில் திருமணம் நடந்தது.





சென்னை நகரசபைக் கவுன்சிலர் திரு
கே. கமலக்கண்ணன் அவர்களின்
புதல்வி செல்வி சாந்தகுமாரிக்கும்
ராவ்பகதூர் பி. எஸ். திருபுராந்தக
முதலியார் புதல்வன் ஆர். தயாநிதிக்
கும் சென்னையில் திருமணம் நடந்தது.

மதுரை தியாகராஜா கல்லூரி விரி
வுரையாளர் ஸ்ரீ எம். எஸ். கிருஷ்ண
மூர்த்தி எம். ஏ. க்கும், சௌ. லலிதா
வுக்கும் மதுரையில் வெகு சிறப்
பாகத் திருமணம் நடைபெற்றது.





சௌ. ருக்மிணிக்கும் சென்னை
வில்பர்டு பெரைரா கம்பெனியைச்
சேர்ந்த சிரஞ்சீவி எஸ். கோவிந்த
ராஜனுக்கும் சிதம்பரத்தில் சிறப்
பாகத் திருமணம் நடந்தேறியது.



கணிதப் பேராசிரியர் டாக்டர் எஸ்.
மீனாட்சிசுந்தரம் அவர்களின் புதல்வி
சௌ. ராதாவுக்கும், டாக்டர் எம்.
எஸ். கிருஷ்ணமூர்த்தியின் புதல்வன்
சிரஞ்சீவி ஸ்ரீஹரிக்கும் வால்டேரில்
திருமணம் நடைபெற்றது.







*

கவி ரவீந்திரநாத் தாகூரும், மானிலத்தை வாழ்விக்க வந்த மகாத்மாவும்.

சேவாக் கிராமத்தில் அன்னை கஸ்தூரி பாயும் அண்ணல் காந்தியும்.

சேவாக் கிராமத்தில் காந்தி மகாத்மாவுடன் ராஜாஜி உரையாடிக் கொண்டிருக்கிறார்.

*





*

தேசத் தந்தை காந்திஜியும் ஜனுப் ஜின்னுவும் மகிழ்ச்சிக் கடலில் மூழ்கியிருக்கின்றனர்.

பம்பாய் அ. இ. கா. கமிட்டிக் கூட்டத்தில் கவிக் குயில் சரோஜினி தேவியோடு மகாத்மா காந்தி.

மகாத்மாவும் ஜவாஹர்லால் நேருவும் தீவிரமாக விவாதித்துக் கொண்டிருக்கின்றனர்.

*



●*●

புனித காசி க்ஷேத்திரத்திலே காந்திஜியும் அன்னை கஸ்தூரிபாயும் தங்கியிருந்த போது எடுத்த படம்.

1914-ம் வருஷத்தில் நிகழ்த்திய சத்தியாக்கிரகப் போராட்டத்துக்கு அஹிம்சை வீரர் செல்கிறார்.

லண்டனில்] பாரிஸ்டர் காந்தி.

●*●



# நமது ஜனாதிபதி

இந்தியாவின் ஜனாதிபதியாக டாக்டர் பாபு ராஜேந்திரப் பிரசாத் இரண்டாவது தடவையாகத் தேர்ந்தெடுக்கப் பட்டுள்ளார் என்பதைக் கேட்கப் பாரத மக்கள் அனைவரும் மகிழ்ச்சி அடைவார்கள். சுமார் முப்பது ஆண்டுகளுக்கு மேலாக மகாத்மா காந்தியின் அடிச்சுவடிகளைப் பின்பற்றி வந்த உத்தமத் தலைவர்களுள் பாபு ராஜேந்திரரும் ஒருவர் என்பதை அறியாதவர் இல்லை. தேசத் தந்தை காந்திஜியின் ஜீவிய காலத்திலும் பிறகும் அவரது உபதேசங்களிலிருந்து அணுவளவும் வழுவாது பணியாற்றி வரும் தியாகசீலரான பாபு ராஜேந்திரப் பிரசாத் அவர்கள் காங்கிரஸ் அக்ராசனராக இருந்து புகழ் பெற்றதுடன், சுதந்திர இந்தியாவின் அரசியல் சாசனத்தை உருவாக்கிய மகாசபையின் தலைவராகவும் இருந்து அரும் தொண்டு புரிந்தார். பிறகு பாரதநாடு குடியரசாகத் திகழ்ந்த போது முதலாவது இந்திய ஜனாதிபதியாகத் தேர்ந்தெடுக்கப் பட்ட பெருமை அவருக்குக் கிடைத்தது. மொத்தம் உள்ள 4,63,196 வாக்குகளில் 4,59,698 வாக்குகள் பாபு ராஜேந்திரப் பிரசாத்துக்குக் கிடைத்துள்ளன. இதிலிருந்து அவருக்கு நாட்டில் எவ்வளவு பேராதரவு இருக்கிறது என்பதைத் தெரிந்து கொள்ளலாம். இரண்டாவது தடவை ஜனாதிபதியாகியிருக்கும் பாபு ராஜேந்திரரின் பதவிக்காலத்தில், இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் நிறைவேறி மக்கள் சுபிட்ச வாழ்வு பெற்று, நாடு செழிக்கும் என நம்புகிறோம். மீண்டும் ஜனாதிபதி பீடத்தை அலங்கரிக்கும் பாபு ராஜேந்திரப் பிரசாத், உபஜனாதிபதி பதவி வகிக்கும் டாக்டர் எஸ். ராதாகிருஷ்ணன் இவ்விரு தவப் புதல்வர்களும் உலக நாடுகளிடையே பாரதத்தின் பெருமை உயருவதற்குத் துணையாக இருப்பார்கள் என்று எதிர்பார்க்கிறோம்.



# ஆகாச வெடி

"வேலையில்லாமல் இருந்து வருபவர்களுக்கு மாதம் 60 ரூபாய் கொடுக்க வேண்டும் என்று உ. பி. சோஷலிஸ்டுகள் கோரிக்கை விடுத்திருக்கிறார்கள்!" —தினசரி

வேலையில்லாத் திண்டாட்டத்தில், குறைந்த சம்பளம் வாங்குவோருக்கும் மோகம் ஏற்படச் செய்ய வேண்டும் என்பது சோஷலிஸ்டுகளின் உத்தேசமோ?

★

"தூத்துக்குடி முத்துச் சிப்பி ஏலத்தில் ஒரு பெண்மணிக்கு ரூ 1500 மதிப்புள்ள நல் முத்து ஒன்று கிடைத்திருக்கிறது." —செய்தி

''இந்த நல் முத்து ஒரு ஆண் பிள்ளைக்குக் கிடைத்திருந்தாலும், முடிவில் ஒரு பெண்மணியைத்தானே அடைந்தாக வேண்டும்?'' என்கிறார் ஒரு கிரகஸ்தர்.

★

"கான்பூரில் ஒரு கோஷ்டியார் கடைத் தெரு விளம்பர போர்டுகளில் உள்ள ஆங்கில எழுத்துக்களை அழிக்க முயன்றபோது போலீஸாரால் துரத்தியடிக்கப் பட்டனர்." —செய்தி

''இவ்வித எழுத்தழிப்புக் காரியங்களில் ஈடுபடுவோரின் தலையெழுத்தை யாரால்தான் அழிக்க முடியும்?''

★

"ரஷ்யா-இந்தியா வர்த்தக ஒப்பந்தத்தின் ஒரு அம்சமாக, மூவாயிரம் ஜதை பூட்ஸுகள் ஹைதராபாத்திலிருந்து ஏற்றுமதியாக இருக்கின்றன." —தினச் செய்தி

இரு நாடுகளின் வர்த்தக உறவு நல்ல முறையில் காலூன்றத் தலைப்பட்டிருப்பதைப் பாராட்ட வேண்டும்.

★

"மானிட உலகத்துக்குக் கேடு உண்டாக்கும் அணு ஆயுதப் பரீட்சை முறையை வல்லரசுகள் கைவிட வேண்டும்." —செய்தித் தலைப்பு

''மாணவர் உலகத்துக்குக் கேடு உண்டாக்கும் பரீட்சை முறையையும் கைவிட வேண்டும்'' என்கிறான் ஒரு மாணவன்.



தேவதாஸ் காந்தி

தோற்றம் : 22-5-1900 மறைவு : 3-8-1957

தொண்டு புரிந்தோம்; சேர்ந்து சிறையில் இருந்தோம். அவர் மறைந்தது நம் எல்லோருக்கும் மகத்தான நஷ்டமாகும்'' என்று நேருஜி மனம் உருகிக் கூறியுள்ளார்.

பல ஆண்டுகளாக ஸ்ரீ தேவதாஸ் காந்தியின் நண்பராகவும் ஐந்து வருஷ காலம் ''ஹிந்துஸ்தான் டைம்ஸ்'' பத்திரிகையின் கூட்டு ஆசிரியராகவும் இருந்த ஸ்ரீ கே. சந்தானம், ஸ்ரீ தேவதாஸ் காந்தியின் பொறுமை, நேர்மை, பெருந்தன்மை போன்ற குணதிசயங்களைப் பாராட்டி, அவரது திடீர் மரணத்தைக் குறித்துத் தமது துக்கத்தைத் தெரிவித்துள்ளார்.

ஸ்ரீ தேவதாஸ் காந்தி தேசப்பணி செய்த வண்ணமே உயிர் நீத்ததை எண்ணும்போது நெஞ்சம் துடிக்கின்றது.

பம்பாயில் காந்தி மகான் நினைவு நிதி சம்பந்தமான அலுவல்களில் ஈடுபட்டிருந்த போது அவர் இப்பூவுலகிலிருந்து விடை பெற்றுக்கொண்டு விட்டார்.

காந்தி மகானின் அற்புதமான நூல்களும் அருள்வாக்குகளும் என்றென்றும் அழியா வண்ணம் இருப்பதற்காக, காந்தி இலக்கிய வெளியீடுகளில் அவர் சில ஆண்டுகளாகத் தீவிரமாக ஈடுபட்டிருந்தார்.

அந்தத் திருப்பணிக்குத் தடை ஏற்படாமல் அதை நிறைவேற்றுவதே, தேச மக்களும் தலைவர்களும் காந்திஜியின் தவப்புதல்வரின் ஞாபகம் என்றென்றும் நிலைத்திருக்கும்படி செய்வதற்கான வழியாகும்.

ஆருயிர்க் கணவரைப் பிரிந்து கதறும் ஸ்ரீமதி லக்ஷ்மிக்கும், அவரது குழந்தைகளுக்கும், ராஜாஜிக்கும் யார் ஆறுதல் கூற முடியும்?

# மலாய் நாட்டில் இருள் விலகியது!

மலாய் நாட்டுக்கு 1957-ம் வருஷம் ஆகஸ்டு மாதத்திலே சுதந்திரம் அளிப்பதாக பிரிட்டிஷார் உறுதி கூறியிருந்தனர். பிரிட்டிஷ்காரர்கள் சிறந்த ராஜ தந்திரிகள் அல்லவா? அவர்கள் கொடுத்த வாக்குறுதியைக் காலம் கடத்தாமல் நிறைவேற்றி விட்டார்கள். பிரஞ்சுக்காரர்கள், தங்களுடைய காலனிகள் விஷயத்தில் நடந்து கொள்வது போல், மீனமேஷம் பார்த்துக் கொண்டு நற்பெயரையும் நல்லெண்ணத்தையும் கெடுத்துக் கொள்ளாமல் பிரிட்டிஷார் மலாய்நாட்டுக்குச் சுதந்திரம் கொடுக்க நிச்சயித்து விட்டார்கள்.

மலாயாவை காமன்வெல்த்துக்கு உட்பட்ட ஒரு சுதந்திர நாடாக அங்கீகரிக்கும் மசோதா பிரிட்டிஷ் பார்லிமெண்டில் கடைசித் தடவையாக நிறைவேறி விட்டது. சுதந்திர மலாயாவை உருவாக்கும் அரசியல் திட்ட நகலை மலாயா பெடரல் சபையும் குதூகலத்துடன் ஏகமனதாக அங்கீகரித்துள்ளது.

எனவே, மலாய் நாட்டில் அன்னிய ஆட்சி இருள் அகன்று, சுதந்திர ஆட்சி ஒளி வீசும் நற்காலம் பிறந்திருக்கிறது.

வல்லரசுகளின் ஒவ்வொரு காலனியிலும் ஒவ்வொரு அடிமை நாட்டிலும் ஐம்பது, நூறு, நூற்றைம்பது என்று பலப் பல ஆண்டுகள் போர் நடந்த பிறகுதான், அவை சுதந்திரம் பெறுவது சாத்தியமாயிற்று. பத்து ஆண்டுகளுக்கு முன்பு கூட, மலாயா சுதந்திரம் பெறும் காலம் வரக்கூடும் என்று யாரும் கனவிலும் கருதியதில்லை. பத்து வருஷங்களுக்கு முன் வரையில் ஜனநாயகம் என்றால் என்ன என்பதையே அறியாதிருந்த மலாயா, இந்த மாத இறுதியில் சுதந்திரம் பெறும் முன்னேற்ற நிலையை அடைந்திருப்பது ஆச்சரியப்படத் தக்க விஷயம் அல்லவா?

* * *

மலாய் நாட்டில் சுமார் எட்டு லட்சம் இந்தியர்கள் வசிப்பதால், மலாயாப் பிரச்னைகளில் இந்திய மக்கள் அக்கறை கொள்ளாமல் இருக்க முடியாது. அந்த நாட்டில் வாழும் மாபெரும் சமூகங்களைச் சேர்ந்த சீனர், மலாயர், இந்தியர் இவர்களின் ஆதரவும் ஒத்துழைப்புமின்றி எந்த அரசியல் திட்டமும் செயல்பட முடியாது.

ஆனால், மலாய் நாட்டின் செல்வச் செழுமைக்கு அங்குள்ள ரப்பர்த் தோட்டங்களே காரணம்; ரப்பர்த் தோட்டங்கள் உருவானதற்கு இந்தியத் தொழிலாளர்களின் உழைப்பே காரணமாகும்.

அப்படியிருந்தும் மலாய் நாட்டின் புதிய அரசியல் திட்டத்தின்கீழ் பெரும்பான்மையான இந்தியர்கள் பிரஜாஉரிமை பெறுவது எளிதாக இராது என்ற பீதி நிலவி வருகிறது.

''சுதந்திர மலாயாவில் எவ்வித வேற்றுமையுமின்றி எல்லாச் சமூகத்தினருக்கும் சம உரிமைகளும், சலுகைகளும், சந்தர்ப்பங்களும் அளிக்கப்பட வேண்டும் என்று ஏற்கெனவே ரீட் அறிக்கை கூறியது. ஆனால், அந்தக் கொள்கை நிறைவேற்றப்படவில்லை. பல அம்சங்களில் இந்தியர்கள் நியாயமாகத் தங்களுக்குக் கிடைக்க வேண்டிய உரிமைகளைப் பெற முடியாத வகையில் அரசியல் திட்டம் உருவாகியிருக்கிறது. இந்த வேற்றுமை மலாயாவைத் தங்கள் நாடாகக் கருதும் பதினாயிரக்கணக்கான இந்தியர்களுக்கு அதிர்ச்சியைக் கொடுக்கும் என்பதில் ஐயமில்லை'' என்று பிரிட்டிஷ் பார்லிமெண்டு அங்கத்தினர்களே அச்சபையில் கண்டித்துள்ளனர்.

எனினும் புதிய அரசியல் திட்டத்தை, மலாயா தொழில் மந்திரியான இந்தியப் பிரமுகர் உள்படப் பல இந்தியத் தலைவர்களும் ஆதரித்திருக்கிறார்கள். அவர்கள் மற்றச் சமூகத்தினருடன் ஒத்துழைப்பதோடு, தங்களிடையே ஒற்றுமை குலையாமல் பார்த்துக் கொள்ள வேண்டியதும் அவசியமாகும். அப்படியானால்தான் சிறுபான்மையோரான அவர்கள் சுதந்திர மலாயாவில் நியாயமான உரிமைகள் பெற்று, மலாய்நாட்டின் உண்மையான பிரஜைகளாக இருந்து அமைதியான நல்வாழ்வு நடத்துவது சாத்தியமாகும்.

# மாதர்குலதிலகங்கள்

# ஸ்ரீமதி நாகசுப்பம்மாள்



'இந்த உலகத்தில் யாருடைய பெருமை பேசப்படுகிறது?' — என்று தனக்குத் தானே கேட்டுப் பார்த்துக் கொண்டான் ஒரு கவிஞன். ''சந்தேகமே இல்லை! கொடுப்பவர்களின் பெருமை தான் பேசப்படுகிறது'' என்று அவனே பதிலும் சொல்லிக் கொண்டான். 'கொடுத்துக் கொடுத்துக் கொடைத் தழும்பேறிய இரண்டு கைகளை வணங்க எனக்கு இன்னும் பல கைகளைத் தர வில்லையே'—என்று கொடையின் பெருமையை உணர்ந்த மற்றோர் புலவன் கூறியிருக்கிறான். அந்தப் புலவன் திருமதி நாக சுப்பம்மாளை நினைத்துத்தான் அப்படிக் கூறினானோ என்று தோன்றுகிறது.

திருமதி நாகசுப்பம்மாளுக்குஇப்போது எழுபத்தேழு வயது. தமிழ்ச் சிறப்பும் தெய்விக நலமும் உடைய மதுரைமா நகரிலே பிறந்தவர் இந்த மாதரசியார்.

சென்ற நூற்றாண்டில்—ஏன், சென்ற தலைமுறையில் மகான் மணி ஐயர் என்றால் தெரியாதவர்கள் இருந்திருக்க முடியாது. 'பல துறைகளிலும் பல கலைகளிலும் மணியாய் இலங்கினமையின் அவரை மணி ஐயர் என்று உலகம் அழைத்தது' — என்று திரு வி. க. பாராட்டி யிருக்கிறார். இத்தகைய பெருந்தகையாளராகிய மணி ஐயரின் புதல்வரான திரு எம். எஸ். இராமசாமி ஐயருக்கு மனைவியாகும் பாக்கியம் நாக சுப்பம்மாளுக்குக் கிடைத்தது. திரு இராமஸ்வாமி ஐயர் போலீஸ் இலாகாவில் டெபுடி சூபரிண்டெண்டாகப் பணியாற்றிப் பெருமை கொண்டவர்.

இராமண்ணா—நாகசுப்பம்மாள் இல்லறத்தின் பயனாகப் பெண் குழந்தை ஒன்று பிறந்தது. 'நாகம்மாள்' என்று பெயரிட்டு மகிழ்ச்சியோடு வளர்த்து வந்தனர். நல்லவர்களை மகிழ்ச்சியுறச் செய்வதுதான் விதிக்குப் பிடிக்காத காரியமாயிற்றே! பெற்றுப் பெரு வாழ்வு வாழ வேண்டிய பருவத்தில், திருமணமும் ஆனபின் க்ஷயரோகத்தின் கொடுமையால் காலஞ் சென்றாள் நாகம்மாள். மகளின் மரணம் நாகசுப்பம்மாளுக்கு வாழ்க்கையில் ஒரு பெரிய அதிர்ச்சியாக அமைந்தது. கணவரும் 1943-ல் காலமாகவே துன்பம் நிறைந்த அவர் மனம் அறவழியில் திரும்பியது.

மகளின் சிறு பருவ மரணத்தைப் பற்றி நினைக்கும் போதெல்லாம் க்ஷயரோகத்தின் கொடுமை நாகசுப்பம்மாளுக்கு நினைவு வரும். 1948-49ல் தஞ்சை மாவட்டத்திலுள்ள செங்கிப்பட்டி க்ஷயரோக ஆஸ்பத்திரிக்கு நாற்பத்தொன்பது ஏக்கர் நன்செய் நிலமும், மூன்று ஏக்கர் புன்செய் நிலமும், தம் மகளின் நினைவுக்கு அறிகுறியாக நன்கொடை அளித்தார். பின்பு 1953ல் ராஜாஜி அவர்கள் முதன் மந்திரியாக இருந்தபோது, அவர்மூலம் ரூபாய் 25,000 அதே க்ஷயரோக ஆஸ்பத்திரிக்கு நிதியாக வழங்கியிருக்கிறார்கள். மதுரை சேதுபதி உயர்தரக் கலாசாலையின் நடுவே ஒரு பெரிய ஹால் கட்டுவதற்காக ரூபாய் 25,000 நன்கொடை அளித்திருக்கிறார்.

மதுரை நகரில் மிகப் பழையதும், பெரியதுமான நூல் நிலையம், விக்டோரியா எட்வர்டு ஹால் நூல் நிலையமாகும். நாகசுப்பம்மாள் இந்த நூல நிலையத்திற்கு ஏராளமான புத்தகங்களை அன்பளிப்பாக வாங்கி அளித்திருக்கிறார்கள். சென்னை-மயிலாப்பூரிலுள்ள குப்புசாமி சாஸ்திரி வடமொழிக் கல்லூரிக்கும் அதன் நூல் நிலையத்துக்கும் பெரும் உதவி நிதிகளை வாரி வழங்கி யிருக்கிறார்.

எழுபத்தேழு வயது நிறைந்த இந்த அம்மையாருக்கு இன்னும் எண்ணற்ற அறங்களையும், கொடைகளையும், உதவிகளையும் செய்ய வேண்டுமென்ற ஆசை பரிபூரணமாக நிரம்பி யிருக்கிறது. தமிழ்த் திரு நாட்டின் நன்மைக்காகத் திருமதி நாகசுப்பம்மாள் அவர்கள் பல்லாண்டு காலம் வாழ வேண்டுகிறோம். —நா. பா.



யோகி சுத்தானந்த பாரதியாரின் அறுபதாவது பிறந்த நாள் வைபவம் ஆகஸ்ட் 28ம் தேதி சென்னை ராஜாஜி ஹாலில் சபா நாயகர் டாக்டர் யு. கிருஷ்ணராவ் அவர்கள் தலைமையில் வெகு சிறப்பாக நடைபெற்றது. மந்திரிகளும் பிரமுகர்களும் விழாவில் கலந்து கொண்டு யோகியார் முத்தமிழுக்குச் செய்துள்ள அருந் தொண்டுகளைப் பாராட்டினர். திரு டி. கே. சண்முகம் யோகியாருக்கு மலர் மாலை சூட்டுவதைப் படத்தில் காணலாம்.



திரு கே. எஸ். ராமசாமி சாஸ்திரிகளின் எண்பதாவது பிறந்த தின விழா சென்னை திருவல்லிக்கேணி தேசியபெண்கள் உயர்தர பாடசாலையில் செப்டம்பர் 1ல நடைபெற்றது. இவ் விழாவில் டாக்டர் சி. பி. ராமஸ்வாமி அய்யர், சென்னை மேயர், திரு ஏ. ஜி. வெங்கடாச்சாரி முதலியவர்கள் திரு ராமசாமி சாஸ்திரிகள் செய்துள்ள தொண்டுகளைப் பாராட்டினர்.

சென்ற ஆகஸ்டு இருபத்தைந்தாம் தேதியன்று சென்னை திருவல்லிக்கேணி, ஸ்ரீ பார்த்தசாரதி சுவாமி சபாவில்

திருமதி ருக்மணிதேவி
யின் கலாக்ஷேத்திரம்
திருவான்மியூருக்குச்
செல்லப் போகிறது.
அதன் அஸ்திவார விழா
ஆகஸ்ட் 31உ திரு சி. பி.
ராமசாமி அய்யர் தலைமை
யில் நடைபெற்றது.
மைசூர் மகாராஜா அடிப்
படைக் கல் நாட்டினார்.



நடைபெற்ற ஸ்ரீமதி எம். எஸ்.
எஸ். அவர்களின் கச்சேரி
யைக் கேட்கக் கூடி யிருந்த
மாபெரும் ரஸிகர் கூட்டம்.

# வாழ்க மணமக்கள்



பம்பாய் நேவல் ஸ்டோர்ஸ் திரு ஏ. கே. சாமியின் புதல்வி செல்வி ருக்மிணியைத் திரு நரசிம்மாச்சாரியாரின் குமாரர் திரு சீனிவாசன் திருப்பதியில் மணைப் புரிந்து கொண்டார்.



பம்பாய் டெலிபோன்ஸ் காரியாலயத்தைச் சேர்ந்த திரு எஸ். நாராயணன் புதல்வி சௌபாக்கியவதி லலிதாவுக்கும் வருமானவரி அதிகாரி திரு ஜி. கிருஷ்ணனுக்கும் விவாகம் நடந்தது.



திரு என். வி. சுப்பராமனுக்கும் உதவி இன்ஜினியர் திரு எம். ஆர். நாராயண அய்யரின் மருமாள் செல்வி லோகாம்பாளுக்கும் விமரிசையாகத் திருமணம் நடந்தேறியது.



கூப் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பரேஷன் உதவி அபிவிருத்திக் காரியதரிசி திரு ஆர். சாமண்ணுவின் குமாரி பிரேமாவுக்கும் திரு ...ன். கோபாலாச்சாரிக்கும் சென்னை ... ந்தது.



சென்ட்ரல் ரயில்வே அக்கௌன் டென்ட் திரு சி. ராமநாதனுக்கும் திருமதி சுந்தராம்பாளுக்கும் ஆகஸ்ட் 21ந் தேதி திருநெல்வேலியில் திருமணம் ந...



"இம்பர் வாழ்வின்
இறுதி கண்டு—உண்மையின்
இயல் புணர்த்திய
சங்கரர்……………….."

— பாரதியார்

# மாதர்குல திலகங்கள்

## ஸ்ரீமதி ராஜகுமாரி அம்ருதகௌரி



சமீபத்தில் சென்னையில் உள்ள கான்ஸர் வைத்தியசாலையில் ஸ்ரீமதி அம்ருதகௌரியினுடைய படத்தை டாக்டர் ஏ. லட்சுமணசாமி முதலியார் திறந்து வைத்தார். அப்போது டாக்டர் முதலியார் ஸ்ரீமதி அம்ருதகௌரி அவர்களுடைய திறமையை வெகுவாகப் பாராட்டினார். ஸ்ரீமதி அம்ருதகௌரியின் தலைமையில் பாரத நாட்டிலிருந்து உலக சுகாதார சங்கத்துக்கும் உலக கல்வி ஸ்தாபனத்துக்கும் சென்ற தூதுகோஷ்டிகள் உலக அரங்கிலே பெரும்புகழ் நிலைநாட்டியிருப்பதாகக் கூறினார். அதற்கு முக்கிய காரணம் ஸ்ரீமதி ராஜகுமாரி அம்ருதகௌரியின் திறமை என்று சொன்னார்.

பிரான்ஸ் தேசத்தில் நடைபெற்ற ஒரு மகாநாட்டில் ஸ்ரீமதி ராஜகுமாரி அம்ருதகௌரி பிரஞ்சு மொழியில் பேசினார். மற்றொரு சமயம் இத்தாலி நாட்டில் ஒரு மகாநாடு நடைபெற்றது. இத்தாலி மொழியில் வரவேற்பு அளிக்கப்பட்டது. ஸ்ரீமதி ராஜகுமாரி இத்தாலி மொழியில் எங்கே பேசப்போகிறார் என்று நினைத்துக் கொண்டிருந்தபோது, இத்தாலி மொழியில் பேசிச் சபையோரை ஆச்சரியக் கடலில் ஆழ்த்தி விட்டாராம்!

இப்படிப்பட்ட இந்த ராஜகுமாரி அம்ருதகௌரி யார்?

இவர் பஞ்சாப் ராஜ்யத்தைச் சேர்ந்தவர். அரச குடும்பத்தில் பிறந்தவர். கபூர்தலா சமஸ்தான ராஜா ஹரநாம் சிங்கின் புதல்வியாவார். இவர் சிறு வயதிலே வீட்டிலே நல்ல கல்வியறிவு பெற்றதோடு இங்கிலாந்துக்கும் சென்று படித்து விட்டு வந்தார்.

இப்படிச் செல்வம் கொழிக்கும் அரச குடும்பத்திலே பிறந்தாலும், எல்லா வசதிகளும் பெற்ற வாழ்க்கை நடத்தினாலும் அவருக்குத் தேச பக்தி பெருக்கெடுத்தது. அரச வாழ்வைத் துறந்து விட்டு ஆசிரம வாழ்க்கையைமேற்கொண்டார். காந்திமகானை அடைந்து அவருடைய ஆசிரமத்தில் அவருடைய காலடியில் வாழ வந்து சேர்ந்தார்.

காந்தி மகானின் காரியதரிசியாகப் பதினாறு ஆண்டுகள் சேவை புரிந்திருக்கிறார். ஆசிரமத்தில் ராட்டையைச் சுற்றினார். கதராடையை அணிந்தார். அகில இந்திய சர்க்கா சங்கத்தில் சேர்ந்து பணியாற்றினார்.

அரசியல் துறையிலும் ஈடுபட்டு, அகில இந்தியக் காங்கிரஸின் தலைமைப் பதவியையும் 1931–33, 38-ம் ஆண்டுகளில் வகித்திருக்கிறார். பன்முறை சிறை சென்றார். 1943ம் வருஷம் அவர் செய்தசிறைவாச வரலாறு, கல் மனம் படைத்தவரையும் உருக்கி விடும்! போலீஸ்காரர்கள், மாற்று உடை கூட எடுத்துக் கொள்ள அனுமதிக்காமல் கட்டிக் கொண்டிருந்த சேலையோடேயே சிறைக்கு அழைத்துச் சென்று துர்க்கந்தம் நிரம்பிய இடத்தில் அடைத்து வைத்திருந்தனர். மிக மோசமான ரொட்டியைக் கொடுத்துச் சாப்பிடவிடாமல் செய்து வதைத்துள்ளனர். பல நாட்களில் சாப்பிட ஒன்றும் கொடுக்காமல் கூட இருந்திருக்கின்றனர். அதைப் பற்றி ஒருவரிடமும் குறைப்பட்டுக் கொள்ளாமல் பொறுமையோடிருந்திருக்கிறார்! இவற்றையெல்லாம் பார்க்கும்போது, அவர் காந்திஜியின் உத்தமப் புதல்விதான் என்று தோன்றும்.

'தோன்றும்' என்று ஏன் முடிக்கிறேன் என்று கேட்கிறீர்களா? இப்பொழுது அவர் பேசும் முறையைக் கேட்கும்போது நமக்குச் சற்று அந்தமாதிரியான சந்தேகம் எழுகிறது. பாரத தேசம் சுதந்திரம் பெற்றதிலிருந்து சமீபகாலம் வரை மத்திய சர்க்காரின் சுகாதார மந்திரியாக இருந்து வந்திருக்கிறார். இவர் மந்தியாக இருந்தபோதுதான் பி. ஸி. ஜியை நாட்டில் கொண்டு வந்தார். ராஜாஜியும் மற்ற மேனாட்டு வைத்திய நிபுணர்களும் பலமாக எதிர்த்த பின்னரும் விடாப்பிடியாக பி. ஸி. ஜியை உபயோகிக்கத் திட்டமிட்டார். காந்தி மகானின் உண்மையான சிஷ்யையாக இருந்தால் ராஜாஜி ஏன் வேண்டாம் என்கிறார் என்பதைப் பொறுமையோடு படித்துப் புரிந்து கொள்ள முயன்றிருப்பார்!

மதுவிலக்கு விஷயத்திலும், அவருடைய அபிப்பிராயம் காந்தி பக்தர்களுக்கு வியப்பை அளிப்பதாக இருக்கிறது.

எனினும், பொதுவாகப் பார்க்கும்போது, தாய்த்திரு நாட்டுக்காகத் தமது சுகங்களைத் தியாகம் செய்தவர் ஸ்ரீமதி அம்ருதகௌரி என்ற எண்ணமே மேலோங்கி நிற்கிறது!



## வீடுதோறும்

பரத நாட்டியக் கலைக்குப் பெருமை தேடித்தரும் சிறுமிகள் நாள் தோறும் வளர்ந்து வருகின்றனர்.

தமிழ்கூறும் நல்லுலகம் எங்கிலும் பரதநாட்டியம் பயிலும் சிறுமிகளில் சமீபத்தில் அரங்கேறிய சிலரை இந்தப் பக்கத்தில் காணலாம்.

1. ஸ்ரீமதி நீலாபாலசுப்பிரமணியம் மாணவிகள் குமாரி ராதா, குமாரி இந்திரா. இவர்களது பரதநாட்டிய அரங்கேற்றம், செப்டம்பர் மாதம் ஏழாம் தேதி சென்னை தியாகராய நகர் வாணி மகாலில் நடைபெற்றது. விழாவுக்குப் பேராசிரியர் சாம்பமூர்த்தி தலைமை தாங்கிச் சிறப்பித்தார். 2. பந்தணைநல்லூர் மீனாட்சி சுந்தரம் பிள்ளையின் மாணவியும், திரு கே. என். ராமநாதன் அவர்களின் புதல்வியுமான குமாரி கீதாவின் அரங்கேற்றம் இந்திய நுண்கலைக் கழகம் ஆதரவில் சென்ற மாதம் சென்னையில் நடைபெற்றது. 3. டாக்டர் ஏ. தர்மராஜன் அவர்களின் புதல்வி குமாரி விஜயாவின் அரங்கேற்றம் சென்ற மூன்றும் தேதி திருச்சியில் நடைபெற்றது. சிறுமிக்கு நாட்டியம் பயிற்றுவித்த நடன ஆசிரியர் திரு சி. ராதாகிருஷ்ணன் அவர்களையும் குமாரி விஜயாவையும் திரு கி. ஆ. பெ. விஸ்வநாதம் அவர்கள் பாராட்டினர்.







## நாட்டியக் கலை ⋆⋆⋆ ⋆⋆⋆ ⋆⋆⋆

4. முத்தமிழ் மன்றத் தலைவர் டாக்டர் தியாகராஜன் அவர்களின் புதல்வி குமாரி மல்லிகாவின் பரதநாட்டியம் சென்ற மாதம் இருபத்தொன்பதாம் தேதி விழுப்புரம் தமிழ் விழாவில் நடைபெற்றது. 5. குமாரி டி. வி. நளினியின் பரதநாட்டியம் சிந்திரி உரத் தொழிற்சாலை 'கலா மண்டலி'யில் சிறப்பாக நடைபெற்றது. 6. ஸ்ரீ பரதகலா நிலையத்தின் தலைவி திருமதி எம். கே. செல்வமணியின் சிஷ்யைகள் குமாரி விமலா, பேபி சுமனா இவர்களின் பரதநாட்டிய அரங்கேற்றம் சென்ற மூன்றும் தேதி திருவல்லிக்கேணி பார்த்தசாரதி சபாவின் ஆதரவில் நடைபெற்றது. 7. செப்டம்பரில் ரூர்க்கி தென்னிந்தியக் கலாசாரக் கழகத்தில் நடந்த மாலதியின் பரதநாட்டியம்.








சென்னை தியாகராய நகரில் உள்ள தருமபுரம் ஆதீன பிரசார நிலையத்தில் நான்கு ஆண்டுகளாக நடைபெற்று வரும் திருமுறை வகுப்பு ஆண்டு விழா சென்ற வாரம் விமரிசையாக நடைபெற்றது. இந்த விழாவுக்குக் கல்வி மந்திரி திரு சி. சுப்பிரமணியம் அவர்கள் தலைமை தாங்கிச் சிறப்பித்தார். சென்னை தருமபுர ஆதீன பிரசார நிலையத் தலைவர் ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தரத் தம்பிரான் அவர்களையும், "பிறகு வற்ற விண்ணவன்" என்ற பக்தி ததும்பும் நாடகத்தில் நடித்த மாணவ மாணவிகளையும் காணலாம்.

***  ***  ***



திருச்சி வாகீச பக்தஜன சமரச சன்மார்க்க சங்கத்தார் தமிழ்ப் பேராசிரியர் திரு ஐயன் பெருமாள் கோனார் அவர்களின் தமிழ்த் தொண்டைப் பாராட்டி ஒரு விழா நடத்தினார்கள். விழாவில் திரு கோனார் அவர்களுக்குப் பொன்னாடை போர்த்தி, 'செம் பொருட் காட்சியர்' என்ற சிறப்புப் பட்டத்தையும் வழங்கிக் கௌரவித்தனர். விழாவுக்குத் தலைமை தாங்கிய மதுரை ஆதீனத் தலைவர் சோமசுந்தர ஞானசம்பந்த பரமாச்சாரிய சுவாமிகள் திரு கோனார் அவர்களுக்குப் பொன்னாடை போர்த்திப் பாராட்டினார்.

***  ***  ***



கலைஞர் கலைவாணன் அவர்கள் இயற்றிய 'உதயம்' என்ற காப்பியத்தின் வெளியீட்டு விழா திருச்சித் தமிழ் எழுத்தாளர்சங்க ஆதரவில் சென்ற மூன்றாம் தேதி ஸ்ரீரங்கம் உயர்நிலைப் பள்ளியில் சிறப்பாக நடைபெற்றது. விழாவில் திருச்சி எழுத்தாளர் சங்கத் தலைவர்கவிஞருக்குப் பொன்னாடை போர்த்துகிறார்.

சென்ற மாதம் 29-ந் தேதி விழுப்புரம் முத்தமிழ் மன்றத் தமிழ் விழாவில் விழாத் தலைவர் திரு ராமநாதன் செட்டியார் தலைமையுரை நிகழ்த்துவதையும், மன்றத் தலைவர் டாக்டர் தியாகராஜன் வரவேற்புரை நிகழ்த்துவதையும் படத்தில் காணலாம்.







உபநயனத்தின்போது ஒரு காட்சி. இங்கிலாந்தில் இராணுவப் பயிற்சி உடையிலே நிற்கிறார். கூர்க்க சிப்பாய் உடையில் தோற்றம். ஹாரோ கலாசாலை மாணவன் (1907)









கேம்ப்ரிட்ஜ் மாணவர்
(1909)

கீழே: பாரிஸ்டர் உடையில்

கேம்ப்ரிட்ஜ் பட்டதாரி உடைகளுடன்
கம்பீரத் தோற்றம்
(1910)

கீழே: இங்கிலாந்தில் பாரிஸ்டர் நேரு







காந்தி மகான் தம் வாழ்நாளில் எத்தனையோ அற்புதங்களைச் சாதித்திருக்கிறார். எத்தனையோ மகாநாடுகளைக் கூட்டியிருக்கிறார். எத்தனையோ தலைவர்கள் அவருடன் இருப்பதைப் பெரும் பாக்கியமாகக் கருதியிருக்கிறார்கள். அப்படிப்பட்ட நிகழ்ச்சிகளில் சிலவற்றை இந்தப் பக்கங்களில் காணலாம்.

○ ஆசிய மகாநாட்டில் காந்தி மகான் பேசுகிறார். இருபுறமும் நேருஜியும் கபார்கானும் அமர்ந்திருக்கிறார்கள். ○ அன்னை கஸ்தூரிபா நூல் நூற்கிறார். ○ ராஜாஜியுடன் தீவிர ஆலோசனை. ○ இங்கிலாந்தில் காந்திஜி. ○ கவியரசர் தாகூரின் சாந்தி நிகேதனத்தில். ○ பிரஞ்சு அறிஞர் ரோமன் ரோலந்தின் இல்லத்தில்.



முடிவிலாக் கீர்த்தி பெற்ருய் !
புவிக்குளே முதன்மையுற்ருய் !

# கலைமகள் கோயில்

பேராசிரியர் அ. சீநிவாச ராகவன்

'என்ன, சிந்தனையில் அழுந்தி விட்டாய்?' என்றது குரல். பேசியது யார் என்று திரும்பிப் பார்த்தேன். ஒருவரையும் காணோம்.

சிரிப்பொலி கேட்டது. மறுபடியும் அந்தக் குரல் பேசியது :

'கலைமகளை அல்லும் பகலும் அனவரதமும் துதித்தால் கல்லும் சொல்லாதோ கவி என்பதைத் தான் விழுந்து விழுந்து படித்திருக்கிறாயே ! கலைமகள் கொலு வீற்றிருக்கும் இங்கே, அவள் பாதத்தின் அடியிலே, நூறு வருஷமாக நிற்கிறேன். கல்தான். ஆனாலும் என்ன? கல்லும் சொல்லாதோ கவி ?'

ஆம், சென்னை மாகாணக் கல்லூரியின் தென் கிழக்கு மூலையில், மண்ணிலே புதைந்து, தலையை மட்டும் வெளியிலே நீட்டிக் கொண்டிருந்த குத்துக்கல் ஒன்றுதான் பேசியது.

'எத்தனை வருஷமாக இங்கே இருக்கிறாய் ?' என்று கேட்டேன்.

'நூறு வருஷத்துக்குமேல் ஆச்சு.'

'அப்படியானால் எங்கள் பல்கலைக் கழகம்—நூறு வருஷமாகத் திகழும் இந்தக் கலைக் கோயில்—இது பிறந்து வளர்ந்த கதையெல்லாம் உனக்குத் தெரியும் என்று சொல்.'

'ஏன் தெரியாது? சொல்லட்டுமா?' என்று ஆவலோடு கேட்டது அந்தக் கல்.

பனி விழத் தொடங்கி விட்டது. காற்று சில்லென்று வீசியது. 'நானும் உன்னோடு சேர்ந்து கொண்டு இந்தக் கதையைக் கேட்கிறேனே' என்று சொல்லிக் கொண்டு, கடல் நீலப் பரப்பிலிருந்து வெளியே வந்தான் சந்திரன். கல் பேசியது :

'இப்போது சென்னை ராஜ்யம் என்று வழங்கும் இந்தப் பிரதேசம் சென்னை மாகாணமாய் இருந்த அந்தக் காலம். ராஜ்யத்தை விட, மாகாணம் பெரியதாக இருந்தது என்றால் வேடிக்கையாக இல்லையா? அந்தக் காலத்தில், அதாவது நூற்றுப் பத்தொன்பது வருஷங்களுக்கு முன்பு, இங்கே சென்னையில் கவர்னராக இருந்தது யார் தெரியுமா ?'

'தெரியாது' என்று தலை அசைத்தேன்.

'இது கூடத் தெரியாதா ? நான் சொல்லுகிறேன். அவர் பெயர் எல்பின்ஸ்டன் பிரபு. ஆமாம், அவர்தான் 1837-ல் இருந்து 1842 வரையில் இங்கே கவர்னராக இருந்தவர். அந்தப் புண்ணியவான் போவதற்கு ஒரு வருஷத்துக்கு முன், அதாவது 1841-ம் ஆண்டில், 'பல்கலைக் கழக உயர்நிலைப்பள்ளி' (High School of the Madras University) என்ற கலாசாலை ஒன்றை நிறுவினார். முதன் முதலில் சர்வகலாசாலை ஒன்றுக்கு இங்கே வித்திட்டவர் அவரே.'

'அதென்ன, அப்படிச் சொல்லுகிறாய் ? நமது நாட்டில் இதற்கு முன் பல்கலைக் கழகங்கள் இருந்ததில்லையா ? நாலந்தா, தக்ஷசிலம், காசி முதலிய இடங்களில் எவ்வளவு பெரிய சர்வகலாசாலைகள் இருந்தன ! தென்னாட்டிலும் அவற்றிற்குக் குறைவா ? பாண்டியர்கள் மதுரையில் சங்கம் வளர்த்தார்கள். காஞ்சியில் பல்லவர்கள் கடிகாஸ்தானங்கள் நிறுவினார்கள். சோழர்கள் எழுப்பிய பெருங்கோயில்களை ஒட்டி எத்தனை பெரிய கல்வி நிலையங்கள் ஓங்கி வளர்ந்தன ?'

'ஓ, நீயும் சரித்திரம் படித்திருக்கிறாயா?' என்றது கல். 'ஆனால், அப்பனே, அதெல்லாம் பழங்காலத்தில். இடைக்காலத்தில், அங்கங்கே கல்வி வளர்ந்தது என்றாலும் நாலந்தா, தக்ஷசிலம் போன்ற பெரு நிலையங்கள் இல்லாமல் போய் விட்டன. சமயம், தத்துவம், இலக்கியம், கலை இவற்றை ஏதோ குரு—சிஷ்ய பரம்பரையின் மூலமாக, நாட்டில் அங்கங்கே காத்து வந்தோம் என்பது உண்மைதான். என்றாலும், அறிவின் எல்லாத் துறைகளையும் பேணி வளர்த்து, எல்லோருக்கும் அதில் பங்களிக்க முற்பட்ட மத்திய ஸ்தாபனங்கள் – நூற்றுக்கணக்கான ஆசிரியரும் மாணவரும் ஒன்று சேர்ந்து அறிவைப் பெருக்கவும் பரப்பவும் பாடுபடும் பல்கலைக் கழகங்கள் – நாட்டிலே இல்லை. அதோடு, மேல்நாடுகளில் அமோகமாக வளர்ந்து வந்த கலைகளை, பஞ்ச பூதத்தின் நுட்பங்களைக் கூறும் விஞ்ஞானக் கலைகளை, நமது நாட்டிலும் வளர்ப்பதற்குக் கல்வி நிலையங்கள் தேவையாக இருந்தன. இந்தத் தேவையை, நமது மாகாணத்தைப் பொறுத்த மட்டில், நிறைவாக்க நினைத்தார் எல்பின்ஸ்டன் பிரபு.

நல்ல வேளையில்தான் பல்கலைக் கழக உயர்நிலைப் பள்ளியைத் தொடங்கினார். பன்னிரண்டு வருஷத்தில் இது ஒரு கல்லூரி ஆயிற்று.

இந்த நிலையில், 1854-ம் ஆண்டில் ஸர் சார்லஸ் வுட் என்பவர் இந்தியாவின் கல்வி முன்னேற்றத்தைப் பற்றி இங்கிலாந்துக்கு நீண்ட அறிக்கை ஒன்று அனுப்பினார். அந்த அறிக்கையில் கண்ட குறிப்பின்படி மூன்று பல்கலைக் கழகங்கள் இந்தியாவில் நிறுவப் பெற்றன. இது நடந்தது 1857-ல். பம்பாய், கல்கத்தா, சென்னை இம் மூன்று நகரங்களிலும் பல்கலைக் கழகங்கள் தோன்றின. அப்போது எல்பின்ஸ்டன் பிரபு தொடங்கிய பள்ளி, மாகாணக் கல்லூரி என்ற பெயரோடு சென்னைப் பல்கலைக் கழகத்தோடு இணைந்த ஒரு கல்லூரி ஆயிற்று.

சென்னைப் பல்கலைக் கழகம், லண்டனில் உள்ள பல்கலைக் கழகத்தின் அமைப்பைக் கொண்டது. லண்டன் கழகம் அதன் பொறுப்புக்களையும், செயலாற்றும் முறைகளையும் பெருக்கிக் கொண்டே வந்தது. ஆனால் சென்னைக் கழகமோ, பல வருஷங்களுக்கு; தொடங்கியபோது பெற்ற அமைப்போடு நின்றது. அதாவது; அங்கங்கே மாகாணத்தின் பல்வேறு இடங்களில் தோன்றிய கல்லூரி

# டாக்டர் பட்டம்



வில்லியம் மில்லர்



திவான் பகதூர்
எஸ் சுப்பிரமண்ய அய்யர்



திருவாங்கூர் மகாராணி



மகாமகோபாத்யாய
உ. வே. சாமிநாதய்யர்



ஸர். ஸி. சங்கரன் நாயர்



ஜே. எச். ஸ்டோன்



மக்பெயில்



திவான்பகதூர்
வேங்கடரத்னம் நாயுடு



ஸர். பி. எஸ். சிவஸ்வாமி
அய்யர்





உச்சிக் குடுமியுடனும் பூச்சட்டை, குல்லாயுடனும் நிற்கும் நாலு வயதுக் குழந்தை. சைக்கிள் சவாரி செய்யும் ஐந்து வயதுப் பாலகன். விசித்திர இராணுவ உடையில் குழந்தை வீரர்! தங்கை விஜயலக்ஷ்மியுடன் அண்ணன்.









## பிள்ளைப் பிராயத்திலே!

ஒரு வயது நிரம்பிய நேரு!
அன்னை சொரூபராணியுடன்
தள்ளுவண்டியில் சவாரி.
மூன்று வயதில் குதிரை சவாரி.
துப்பாக்கி வீரர், ஜாக்கிரதை!








## பொங்கல் மலர்

'கல்கி' பொங்கல் மலரைப் பார்த்து நான் அடைந்த சந்தோஷத்தை எப்படிச் சொல்வது? பலவகையிலும் அற்புதமான மணத்தோடு மலர் திகழ்கிறது. இளம் எழுத்தாளர்களுக்குக் 'கல்கி' வரப்பிரஸாதம் என்பதில் ஐயமில்லை. 'பரிசு பெற்ற எழுத்தாளர்கள்' என்பதில் அவ்வளவு ஊக்கப்படுத்தி எழுதி யிருக்கிறீர்கள். ''இலக்கிய விமரிசனத்தில் சகிப்புத்தன்மை காட்டுவது இலக்கியப் பண்பாகும்'' என்று தாங்கள் எழுதி யிருப்பதை எழுத்துலகம் நன்ருக ஊன்றிக் கவனிக்க வேண்டும்.

'கல்கி'யின் வளர்ச்சி தமிழ் எழுத்தாளர்களின் வளர்ச்சியேயாகும்.

புதிய தொடர்கதையான 'மாலவல்லியின் தியாகம்' மகத்தான, நுட்பமான ஒரு உலகத்தைக் கண் முன்னே விரியவிட்டுக் கொண்டு அற்புதமாக ஆரம்பமாகி யிருக்கிறது. நளினமான தேரின் சகட ஒலி போன்ற அழகு நடை. பட்டினப் பாக்கத்து முத்துக்கடை அப்படியே கண் முன்னே நிற்கிறது. திரு கி. ரா. கோபாலன் அவர்களுக்கு நன்றி.

திரு பகீரதனின் ஈழநாட்டுப் பிரயாணமும், திரு சாவியின் கட்டுரையும் பேராசிரியர் கல்கியின் பேனுழனே தங்கள் காரியாலயத்தில் ஓங்கி வளர்ந்து வருகிறது என்பதைத் தெரிவிக்கின்றன. கடல் கண்ட கனவின் ஜீவனுள்ள நடையும், தத்துவ விளக்கங்களும் மெய் சிலிர்க்க வைக்கின்றன. கலைஞர் மணியத்தின் அட்டைப் படம் வெகு அருமை.

திருச்சி
12—1—57 எஸ். சங்கரமூர்த்தி

## ரேடியோ வாரம்

ரேடியோ வார நிகழ்ச்சிகளில் நேற்று சென்னையில் ஒலிபரப்பப்பட்ட திரு முசிரி சுப்ரமணிய ஐயர் அவர்கள் கச்சேரியை அநேகம் நேயர்கள் கேட்டிருப்பார்கள் என்று நம்புகிறேன். இவர்கள் சாரீர வசதிக் குறைவினுல் இப்பொழுதெல்லாம் மேடைக் கச்சேரிகளில் அவ்வளவாகப் பங்கெடுத்துக் கொள்வதில்லை. இருந்தும், இவர் சங்கீதத்தில் என்ன சுருதி சுத்தம், அழுத்தம், வளைவு குழைவுகள், சாகித்ய கோவை. பாவமோ, அது இவரிடம் கடன் வாங்க வேணும். சங்கராபரணத்தில் மைசூர் சதாசிவராவ் கீர்த்தனமும் பைரவியில் நீபாதமுலேயும் இவர் ஒவ்வொரு கீர்த்தனம் பாடம் பண்ணுவதற்கு எவ்வளவு கவனமும் உழைப்பும் எடுத்துக் கொள்கிருர் என்பதை விளக்குகின்றன. இவ்விஷயம் நம் இளம் வித்வான்கள் கவனிக்க வேண்டியது. இவர்கள் இப்போதெல்லாம் இரண்டு பிருக்காவைப் போட்டு மந்திரம் மாதிரி ஒப்பித்து விட்டால் பிரமாதமாகப் பாடி விட்டதாகத் தப்பாக எண்ணுகிருர்கள்.

ரேடியோ நிர்வாகிகளும் அகாடமி போன்ற சங்கீதத்தை வளர்க்கும் இதர சபைகளும் திரு முசிரியைப் போன்ற பெரிய வித்வான்களை இளம் வித்வான்கள் சார்பாகவும் ரசிகர்கள் சார்பாகவும் நன்கு பயன்படுத்திக் கொள்வார்கள் என்று நம்புகிறேன்.

சென்னை
16—1—57 ஏ. வி. பாலசுப்பிரமணியன்

## பிரயாணிகளின் அவதி!

பொதுமக்களின் குறைகளை அரசாங்கத்தின் செவிகளில் விழும்படி செய்யும் பெருமை பத்திரிகைகளையே சாரும்.

திரு ஓ. வி. அழகேசன் செங்கற்பட்டில் வாழ்ந்தவர்தான். ஆனல் இன்று தில்லியிலிருந்து செங்கற்பட்டுக்கு வந்தால் வரும்பொழுது ஸ்பெஷல் சலூனில் வருவதால், அவர் ரயில்வே நிலையங்களின் சுற்றுப்புறத்தையோ, பிரயாணத்தின் அவதியைப் பற்றியோ அறிந்து கொள்ள முடிவதில்லை. கண்ட கண்ட இடங்களிலெல்லாம் கல் நாட்டவோ, கட்டடம் திறக்கவோ செல்லும் இந்த ரயில்வே மந்திரி, சென்னைக்கும் திருவள்ளூருக்கும் மத்தியில் ஓடும் லோக்கல் ரயில் வண்டிகளை வந்து பார்க்கக் கூடாதா? பார்த்தால் தன் பசியே போய் விடுமே என்ற பயம் போலும்! உண்மைதான். ஒவ்வொரு பெட்டியின் ஒதுக்கப்பட்ட அறையும் அப்படித்தானே இருக்கிறது.

காலையில் புறப்பட்டு, மஞ்சள் வெய்யிலையும் பார்க்க முடியாமல் மாலையில் திருவள்ளூர் திரும்பிச் செல்லும் என்னைப் போன்றவர்கள், சுமார் 350 பேர்கள், கடந்த ஒரு வாரத்துக்குள் இரு முறைகள் தண்டவாளம் உடைந்த காரணத்தால் இரவு ஒரு மணிக்கு ஊர் போய்ச் சேர்ந்தோம். தினமும் தாமதமாகப் புறப்பட்டுத் தாமதமாகவே போய்ச் சேருகிறேம். செவ்வாய்ப் பேட்டைக்கும் திண்ணனூருக்கும் இடையே தண்டவாளத்தின் தாண்டவம் அடிக்கடி நடைபெறுகிறது. மந்திரி இக்குறையைத் தீர்க்க முன்வருவாரா?

சென்னை
12-12-56 புதுவை ரா. சுந்தரராஜ்

## தேவாமிர்தம்

டிசம்பர் 2ம் தேதி ''கல்கி'' இதழில் திரு ராஜாஜி அவர்களால எழுதப்பட்டு வரும் ''ரகுபதி ராகவ'' என்ற கட்டுரையைத்தான் முதலில் படித்தேன். திரு ராஜாஜி அவர்கள் அக் கட்டுரையில் கீதையின் சாராம்சத்தின் மூலமாக மனிதன் வாழ்க்கை நடத்த வேண்டிய முறையையும், பக்தர்களின் உள்ளத்தையும் மிகவும் அழகாக எடுத்துரைத்திருக்கிருர்.

சுகமும் துக்கமும் கலந்த ''வாழ்வு'' ஆகிய பாற்கடலிலிருந்து 'தேவாமிர்த'த்தைக் கடைந்து எடுத்து ஊட்டுகிருர். கடந்த எழுபத்தைந்து ஆண்டுகளாகத் தாம் கற்றதையும் அனுபவத்தின் பயனையும் நம் எல்லோருக்கும் உபதேசித்திருக்கிருர். தமிழ் நாட்டு மக்கள் உயர்வான உணர்வு, கடவுள் பக்தி, உறுதியான நம்பிக்கை பெற திரு ராஜாஜியின் கட்டுரைகள் உதவி செய்திருக்கின்றன.

ஜலகான் (E. K.)
5—12—56 வி. ராஜு

# தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் பரிசு பெற்ற எழுத்தாளர்கள்



நாவல்: அகிலன்



வானவியல்: ஏ. சுந்தரமூர்த்தி



வாலாறு:
கோ. ம இராமச்சந்திரஞ்
செட்டியார்



கட்டுரை: மு. வரதராசனர்



ரசாயனம்:
சோ. சிவபாதசுந்தரம்



சிறுவர் இலக்கியம்:
எம். எல் சபரிராஜன



சிறுவர் இலக்கியம்:
அழ. வள்ளியப்பா



## பெற்ற அறிஞர்கள்



வி. எஸ். ஸ்ரீனிவாச சாஸ்திரி



அக்பர் ஹைதரி



ராஜா அண்ணாமலைச் செட்டியார்



ஸர் ஸி. வி. ராமன்



ஸர் ஜான் இ. வாலிஸ்



ஸர் கே. ராமுண்ணி மேனன்



டாக்டர் அளகப்ப செட்டியார்



ராஜாஜி



அட்லி

களை இணைக்கும் மத்திய ஸ்தாபனமாகவும் பல தேர்வுகளை ஆண்டுதோறும் நடத்தும் நிலையமாகவும் மட்டும் அது இயங்கி வந்தது. நேரடியாக, மாணவர்களுக்கு அது கல்வி புகட்ட முற்படவில்லை. கல்விப் பயிற்சி கல்லூரிகளில்தான் நடைபெற்றது. இதற்கான பாடத் திட்டங்களை மட்டும் பல்கலைக் கழகம் வகுத்தது. கல்லூரிகளின் நிர்வாகத்தில் தலையிடாமல், பொதுவான மேற்பார்வையை மட்டும் ஏற்றது. கல்லூரிகளில், தேர்வுகளுக்கான பாடங்கள் போதிக்கப்பட்டு வந்தனவே யல்லாமல், ஆராய்ச்சியோ, ஒவ்வொரு அறிவுத் துறையிலும் மிக உயர்ந்த நிலையைத் தொடும் முயற்சியோ நடைபெறவில்லை. மெட்ரிகுலேஷன் (பல்கலைக் கழகத்தில் சேர்வதற்கு முன் தேறவேண்டிய பரீட்சை), பி.ஏ., சட்டம், வைத்தியம், இயந்திரக்கலை இவை சம்பந்தமான தேர்வுகளை மட்டும் பல்கலைக் கழகம் நடத்தி வந்தது.

1871-ம் ஆண்டில், அரசாங்கத்தார் நடத்திய ஐந்து கல்லூரிகளும், தனிப்பட்டோர் முயற்சியில் நடந்த ஏழு கல்லூரிகளும் இருந்தன. காலத்தின் தேவைக்கு ஏற்ப, பாடத் திட்டங்களை அவ்வப்போது பல்கலைக்கழகம் மாற்றி வந்தது. தேர்வுகளும் மிகக் கட்டுப்பாடான முறையில் நடந்தன. சென்னைப் பல்கலைக் கழகப் பட்டங்களைப் பற்றி, அன்னியர்கள்கூட எப்போதும் உயர்வாகவே எண்ணி வந்திருக்கிறார்கள். 1860-ல் பட்டமளிப்பு விழாவில் பேசிய ஜே. டி. மெயின் என்ற ஆங்கிலேயர் 'சென்னைப் பல்கலைக் கழகப் பட்டங்களைப் பெற்றுச் செல்கின்றவர்கள், பரந்த ஞானமும் நுட்பமான அறிவும் பெற்றே செல்கின்றார்கள்' என்று பெருமையோடு கூறினர்.

இருந்தாலும், பல்கலைக் கழகத்தின் நிர்வாகம் அன்றைய அரசாங்கத்தின் நேரடியான ஆதிக்கத்தில் இருந்தது. இதனால் நாட்டின் நிலைமைக்கு ஏற்றவாறு, கழகம் இயங்குவதில் தடை ஏற்பட்டது. 1904-ம் ஆண்டில் பல்கலைக் கழகத்தின் பொறுப்பும், கடமையும் உரிமையும் சிறிது விரிவாக்கப்பெற்றன. மாணவர்களுக்குக் கல்வி போதிக்கும் பணியை, பல்கலைக் கழகங்கள் நேரடியாகவே மேற்கொள்ளுவது நலம் என்ற கொள்கை வற்புறுத்தப் பெற்றது. இதனால், பல கல்லூரிகள் இணைந்த சென்னைப் பல்கலைக் கழகம்போல் அல்லாது, நேரடியாகக் கல்விப் பயிற்சி தரும் பல்கலைக் கழகங்கள் சில தோன்றின. சென்னைக் கழகத்தைப் பொறுத்தமட்டில், அதோடு இணைக்கப் பெற்ற கல்லூரிகளைக் கண்காணிக்கும் பொறுப்பு முன்னினும் விரிவாகியது. கல்லூரிகளில் உள்ள கட்டட வசதிகள், மாணவர் விடுதி வசதிகள், ஆசிரியர் தகுதி, விஞ்ஞான கூடங்கள், புத்தகசாலை இவற்றின் தகுதி - இவற்றை யெல்லாம் நுணுக்கமாகக் கண்காணித்து, தகுந்த முறையில் வைத்திருக்கும் பொறுப்பை, பல்கலைக் கழகம் மேற்கொண்டது. அதோடு, பல்கலைக் கழகத்தின் நிர்வாகத்தின்கீழ், ஆராய்ச்சித் துறைகளை அமைக்க வேண்டும் என்ற கொள்கையும் தோன்றியது.

'சென்னைப் பல்கலைக் கழகச் சட்டம்', 1923-ம் ஆண்டில், சென்னைச் சட்டசபையில் நிறைவேறியது. இதிலிருந்து சென்னைப் பல்கலைக் கழகத்தின் புதிய சகாப்தம் தோன்றியது. இந்தச் சட்டத்தின்படி, சென்னை கவர்னர் பல்கலைக் கழகத்தின் வேந்தர் ஆவார். சென்னை அரசாங்கக் கல்வி மந்திரி இணைவேந்தர் ஆவார். இருந்தாலும் இவர்கள் இருவரும் நிர்வாகத்தில் நேரடியாகத் தலை இடுவதில்லை. நிர்வாகப் பொறுப்பு துணை வேந்தர் ஒருவர் கையில் ஒப்படைக்கப் பெற்றது. பல் கலைக் கழகம் விரிவான அளவுக்குச் சுதந்திரம் பெற்றது.

இந்த முப்பத்து மூன்று வருஷங்களில், சென்னைப் பல்கலைக் கழகம் வெகு வேகமாக வளர்ந்து வந்திருக்கிறது. ஆராய்ச்சித் துறைகள் பல, கழகத்தின் நேர் மேற்பார்வையில் அமைக்கப் பெற்றன. இன்று பல ஆராய்ச்சி இலாகாக்கள் சிறந்த முறையில் அறிவை வளர்த்து வருகின்றன.

உதாரணமாக, தமிழ் ஆராய்ச்சித் துறை இருக்கிறதே.'

'ஆமாம், அதன் தலைவர் நமது சொல்லின் செல்வர் பேராசிரியர் ரா. பி. சேதுப்பிள்ளை அவர்கள் தானே?'

'ஆம். அவருடைய தலைமையில் அந்தத் துறை அருமையான பணியாற்றி உள்ளது. அவருக்கு முன் பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளை தலைமையில் 'தமிழ் அகராதி' ஒன்று வெளிவந்தது உனக்கு ஞாபகம் இருக்குமே? தமிழின் பெருமையை, தமிழ்த்துறை மாத்திரம் இல்லை, ஹிந்தி ஆராய்ச்சித் துறையும் வளர்த்து வருகிறது.'

'அப்படியா?' என்றேன்.

'ஆம். அந்தத் துறையின் தலைவர் திரு சங்கரராஜு நாயுடு ஒரு தமிழர். திருக்குறளை ஹிந்தியில் அற்புதமாக மொழிபெயர்த்திருக்கிறார். ஜர்மன் தேசத்து மாணவர் ஒருவருக்கு, ஹிந்தி இலக்கணமும், தமிழ் இலக்கியமும் வழங்கி இருக்கிறார். தமிழ்ப் புலவர்களோடு, ஹிந்திப் புலவர்களை ஒப்பிட்டு இலக்கியப் பரிவர்த்தனையை நடத்தி வருகிறார். ஸம்ஸ்க்ருதத் துறையில் டாக்டர் வே. ராகவன் தலைமையில் 'அட்டவணைகளின் அட்டவணை' என்ற முக்கியமான ஆராய்ச்சி சாதனத் தொகுப்பு ஒன்று தயாராகி வருகிறது. உலகம் முழுவதிலிருந்தும், பயனுடைய இம் முயற்சிக்குப் பாராட்டு வந்திருக்கிறது. கன்னடத்திலும், மலையாளத்திலும்...'

'மொழிகள் இருக்கட்டும், விஞ்ஞானக் கலைகளில் நம்முடைய சாதனைகள்?'

'கணித மேதை ராமானுஜம், டாக்டர் ஸர் சி. வி. ராமன், டாக்டர் கே. எஸ். கிருஷ்ணன், அமெரிக்காவில் விஞ்ஞான நிபுணராக விளங்கும் டாக்டர் சந்திரசேகர், விவசாய நிபுணர் வேங்கடராமன்...இன்னும் எத்தனையோ பேரறிஞர்கள் நம்முடைய சென்னைப் பல்கலைக் கழக விஞ்ஞான மாணவர்கள். கிண்டியில் நடைபெற இருக்கும் நூற்றாண்டு விழா விஞ்ஞானக் கண்காட்சியைப் போய்ப் பார்த்துவிட்டு வா. விஞ்ஞான வளர்ச்சியில் சென்னைப் பல்கலைக் கழகத்தின் பங்கும், விஞ்ஞானக் கல்வியில் அது காட்டிவரும் கவனமும் நன்கு தெரியும்.'

'பொருளாதாரம், வரலாறு, சங்கீதம்?'



ஜயப் பிரகாஷ் நாராயண்



அபுல் கலாம் ஆசாத்



வல்லபாய் படேல்



சித்தரஞ்சன் தாஸ்



விதல் பாய் படேல்



சுவாமி சிரத்தானந்தா



மோதிலால் நேரு



லாலா லஜபதிராய்

சிவா




காரமாக நடித்திருக்கிறார். சந்தர்ப்பங்களுக்கேற்ற முகபாவங்களை அவரால் எப்பொழுதும் கொண்டுவர முடிகிறது. இந்தப் படத்தில் நன்றாய் நடித்திருக்கும் பாக்கியசாலி அவர்தான்.

தமிழ்ப் படக் கதாநாயகர்களாக வேடம் தாங்கிப் பழக்கப்பட்ட 'ஆகிவந்த' நடிகர்களில் யாரையும் போடாமல் ஒரு புது முகமான பாலாஜியைக் கதாநாயகன் பாகத்துக்குத் தேர்ந்தெடுத்தது துணிச்சலான காரியம் தான். கதாநாயகன் வரும் சந்தர்ப்பங்கள் இந்தப் படத்தில் மிகவும் கொஞ்சம்தான். என்றாலும், பாலாஜி அந்தச் சந்தர்ப்பங்களில் சோடை போய்விடவில்லை. முன்னுக்கு வரக் கூடிய புள்ளி அவர்.

கிளியூர் மீனா வீட்டை விட்டுப் புறப்பட்டதிலிருந்து கள்ளன் மாரப்பனும், செயற்கைச் சந்திரனைப் போல அவளையே சுற்றிவருகிறான். மாரப்பனாக நடிக்கும் பி. எஸ். வீரப்பா குறை சொல்ல இடம் வைக்காமல் நடித்திருக்கிறார்.

மூனா செட்டியாராக நடிக்கும் வி. எஸ். ராகவன் அமெச்சூர் நாடகங்களில் நடித்துப் புகழ் பெற்றவர். தாம் ஏற்ற பாகத்தைச் சிறப்பாகச் செய்திருக்கிறார்.

தங்கையைக் காணாமல் தவிக்கும் கருப்பையாவின் வாழ்வில் காதல் ஒன்று குறுக்கிடுகிறது. அந்தக் காதலி பாகத்தை ஏற்று டி. பி. முத்துலக்ஷ்மி படத்தின் ஹாஸ்ய பாகத்தைச் சிறப்பிக்கிறார்.

திரைக் கதை, வசனம் மக்களன்பன் அவர்களால் சுவையுடன் அமைக்கப்பட்டிருக்கிறது.

"பானை பிடித்தவள் பாக்கியசாலி" சுவாரஸ்யமான கதையைக் கொண்டிருந்தாலும், அழுத்தமான உணர்ச்சியைக் கொண்டதல்ல. முன்பு வெளியான "மிஸ் மாலினி"யைப் போல் எல்லோருக்கும் களிப்பூட்டும் நோக்கத்தை மிகுதியாகக் கொண்ட படம். சிறு சிறு வேடிக்கைச் சம்பவங்களைக் கொண்ட இது போன்ற படங்களுக்கு, மேல் நாடுகளில் நல்ல வரவேற்பு இருப்பதுண்டு. நம் நாட்டிலும் அத்தகைய படங்கள் ஆங்கிலத்தில் இருந்தால் பார்த்து ரஸிப்பார்கள். தமிழில் அதுபோன்ற படங்களுக்கு இருக்கும் வரவேற்பை இனிமேல்தான் பார்க்க வேண்டும்.

வெந்நீரில் குளிப்பதாக இருந்தால், நல்ல சூடாக விட்டுக்கொண்டு சுகமாகக் குளிக்க வேண்டும்; இல்லையென்றால், குளிர்ந்த ஜலத்திலேயே குளித்துவிட வேண்டும். அதை விட்டு, குளிர்ந்ததாயும் இல்லாமல், சூடாயும் இராமல் 'வெதவெத' வென்று இருக்கும் நீரில் குளிப்பதில் சுகமில்லை.

அதுமாதிரி, இந்தப் படத்தை முழு ஹாஸ்யமாகவும் செய்யாமல், உணர்ச்சிமயமாகவும் செய்யாமல் கொஞ்சம் கலப்படமாகச் செய்திருக்கிறார்கள். அதில் கொஞ்சம் கவனம் செலுத்தியிருக்கலாம்.

பெருங் குழு நடனங்களின் ஆர்ப்பாட்டம் அளவுக்கு மீறிப்போய்விடுகிறது. தயை, தாட்சண்யமில்லாமல் மேற்படி நடனங்களைக் குறைத்து, படத்துக்கு விறுவிறுப்பூட்டியிருக்கலாம். இருந்தாலும் இந்தப் படம் பார்ப்பவர்கள் பாக்கியசாலிகள்தான்.

'பிமல்ரா'யின் டைரக்ஷனில் அற்புதமாக உருவாகியிருக்கும் "அப்ராதி கௌன்" என்னும் ஹிந்திப் படம் பார்த்தேன். சுமார் பன்னிரண்டாயிரம் அடிகளுக்குள் அற்புதம் விளைவித்திருக்கிறார்கள் என்று கூறலாம். அது ஒரு துப்பறியும் கதை. குற்றவாளி யார் என்று தெரியாமல் திகைக்க வைத்துக் கடைசியில் திடுக்கிடும் வண்ணம் உண்மை புலனாகிறது. கதை மிகவும் ரஸமாகப் புனையப்பட்டிருக்கிறது.

அந்தமாதிரி இந்தப் படத்தையும் சுருக்கி விறுவிறுப்பாக வெளியிட்டிருந்தால் இது ஒரு நல்ல படம் என்பதில் சந்தேகமில்லை.

பாரத் புரொடக்ஷன்ஸார் விக்கிரமாதித்தன் கதையைத் திரைப்படமாக உருவாக்கி வருகிறார்கள். இப்படத்தில் பத்மினி ரத்னமாலையின் பாகத்தை ஏற்று நடித்து வருகிறார். ரத்னமாலையின் ஒரு தோற்றம் இது.

★

பயங்கரமான சண்டைக்குத் தயாராக இருப்பவர்கள் வி. கே. ராமசாமியும் டி. எஸ். பாலையாவுந்தான். ஏழுமலையான் பிக்சர்ஸார் தயாரித்து வரும் மாதா பிதா குரு தெய்வம் என்ற படத்தில் சண்டைப் பிரியர்கள் இந்த யுத்தத்தைக் கண்டு களிக்கலாம்.

தென்னைமரத் தோப்பிலே சௌகார் ஜானகியைச் சுற்றிக் குதூகலமாகக் கொம்மாளம் போடுகிறார்கள் இந்தப் பெண்கள். ஸ்ரீலக்ஷ்மி பிக்சர்ஸாரின் நல்லஇடத்து சம்பந்தம் என்ற திரைப் படத்தில் வரும் ஒரு காட்சி

*

வனவாசத்தையும் குதூகலமாகவே அனுபவிக்கும் ராமரும் சீதையும். எம். ஏ. வி. பிக்சர்ஸார் சம்பூர்ண ராமாயணத்தை மிகச் சிறப்பாகத் தயாரித்து வருகிறார்கள். அதில் என். டி. ராமராவும் பத்மினியும் தோன்றும் ஒரு கட்டம்.






1. பரோடா அலெம்பிக் ரசாயனப் பொருள்கள் உற்பத்தி சாலையின் ஐம்பதாம் ஆண்டு விழா சமீபத்தில் மிகச் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. மத்திய அரசாங்கத் தொழில் மந்திரி ஸ்ரீ மனுபாய் எம். ஷா விழாவுக்குத் தலைமை வகித்துச் சிறப்பித்தார்.

2. விசாகப்பட்டினத்தில் கால்டெக்ஸ் கம்பெனியார் புதிதாக ஸ்தாபித்துள்ள கல் எண்ணெய் சுத்திகரிப்புத் தொழிற்சாலையை ஆந்திரா முதன் மந்திரி சஞ்சீவி ரெட்டி ஆரம்பித்து வைத்தார்.

3. பம்பாய் பிரீமியர் ஆட்டோமொபைல்ஸ் இதுவரை 55,000 மோட்டார் வண்டிகளைத் தயாரித்திருக்கின்றது. இந்த மாபெரும் சாதனையைக் கொண்டாடிய போது திரு லால்சந்த் ஹீராசந்த் வண்டியின் சக்கரத்தில் தேங்காய் உடைத்து அனுப்பினர்.






# கலாக்ஷேத்திரத்தில் கலை விழா





வழக்கம் போல் அடையாறு கலா க்ஷேத்திரத்தில் கலை விழா சிறப்பாக நடந்தேறியது. கலை நிகழ்ச்சிகளை லோக் சபை சபாநாயகர் திரு அனந்தசயனம் அய்யங்கார் அரம்பித்து வைத்தார். இந்தக் கலைவிழாக் காட்சிகள் சிலவற்றை இந்தப் பக்கத்தில் காணலாம்

1. ருக்மிணிதேவி வரவேற்புரை நிகழ்த்துகிறார். 2. பிரார்த்தனை. 3. முதல் நாளன்று மிக நன்றாகப் பாடி அனைவரது பாராட்டுதலையும் பெற்ற திரு பசுபதி 4. எண்பத்து இரண்டு வயது நிரம்பிய சாந்து பணிகர் துர்வாஸராகக் கதகளி நடனத்தில் தோன்றி அபாரமாக நடித்து அனைவரையும் மகிழ்வித்தார். ★ ★





ஜனவரி 1-ம் தேதி கூடிய சங்கீத வித்வத்சபையின் சதஸுக்கு முதுபெரும் வித்வான் மைசூர் கே. வாசுதேவாச்சார் தலைமை வகித்தார். ஸ்ரீ சௌடய்யா அவர்களுக்குச் சங்கீத கலாநிதி என்ற கௌரவப் பட்டமும், மற்றும் ஐந்து முதுபெரும் சங்கீத வித்வான்களாகிய ஆர். அனந்தகிருஷ்ண சர்மா, கல்லிடைக் குறிச்சி ராமலிங்க பாகவதர், சாக்கோட்டை ரங்கு அய்யங்கார், பி. என். அங்கப்ப பிள்ளை, ஸ்ரீமதி ஷண்முக வடிவு ஆகியவர்களுக்குக் கௌரவப் பாராட்டுப் பட்டமும் வழங்கப் பெற்றன. ஸ்ரீமதி ஷண்முக வடிவு நேரில் வர இயலாததால் அவருடைய அருமைப் புதல்வி ஸ்ரீமதி எம். எஸ். அந்தப் பட்டத்தைப் பெற்றுக் கொண்டார். சங்கீதப் போட்டியில் கல்கி ஞாபகார்த்த தம்புராப்பரிசுபெற்றவரையும், அமோகமாக மிருதங்கம் வாசித்து, சபையோரைக் குதூகலப்படுத்தி விசேஷ தங்கப் பதக்கங்களைப் பெற்ற ஸ்ரீ ராகவன், ஸ்ரீ வேணுகோபால் ஆகியவர்களையும் காணலாம்.



கொழும்பு சைவ மங்கையர் கழகத்தைச் சேர்ந்த மங்கையர்கள் இசை விழாவில் கலந்து கொள்வதற்காகச் சென்னைக்கு வந்திருந்தனர். அவர்களுடைய வாத்திய சங்கீதம் சென்னையில் நடைபெற்ற இசை விழாக்களில் ரஸிகர்களின் உற்சாக ஆரவாரத்துடன் நடைபெற்றது. சென்னை ரஸிகர்களைத் தங்கள் வாத்திய சங்கீதத்தினுல் மகிழ்வித்த மங்கையர்களை மேலே காணலாம்.



தமிழிசைச் சங்கத்தார் ஆண்டுதோறும் நடத்தும் கோபாலகிருஷ்ண பாரதியார் பாடல் போட்டியில் இந்த வருஷம் ராஜாஜியின் தம்புராப் பரிசை திருமதி சுந்தரவல்லி சீனிவாசன் விழாத் தலைவர் திரு மாணிக்கவேலரிடமிருந்து பெற்றுக்கொள்வதைக் கீழே படத்தில் காணலாம்.



# கல்கத்தா தமிழ் எழுத்தாளர் சங்கம்

டிசம்பர் 22-ந் தேதி கல்கத்தா தமிழ் எழுத்தாளர் சங்கத் துவக்க விழா மிகச் சிறப்பாக நடைபெற்றது. விழாவுக்கு ஸ்ரீ டி. எஸ். சீதாபதி தலைமை வகித்தார். ஸ்ரீ ஏ. ஜி. வேங்கடாச்சாரியார் சங்கத்தைத் துவக்கிவைத்தார். ''வளரும் தமிழில் சிறுகதை இலக்கியம்'' என்ற பொருள் பற்றி ஸ்ரீ ரா. கி. ரங்கராஜன், ஸ்ரீ கோமதி சுவாமிநாதன், ஸ்ரீ கன்னிக் கண்ணன் ஆகியோரும், ''வளரும் தமிழில் நாவல் இலக்கியம்'' என்ற பொருள் பற்றி ஸ்ரீ ஜடாதரன், ஸ்ரீ ரஸவாதி, ஸ்ரீமதி எம். எஸ். கமலா ஆகியோரும் பங்கு கொண்டனர். பொதுச் செயலாளர் ஆங்கரை நா. ஜபராமன் நன்றி கூறக் காலை நிகழ்ச்சிகள் முடிவடைந்தன. மாலை நிகழ்ச்சிகள் ஸ்ரீ எஸ். டீ. ஸ்ரீநிவாஸன் தலைமையில் ஆரம்பமாயின. ''வளரும் தமிழில் விமர்சன இலக்கியம்'' என்ற பொருள் பற்றி ஸ்ரீ கொடுமுடி ராஜகோபாலன், ஸ்ரீ மகரம், ஸ்ரீ முன்ஷி ஆகியோரும், ''வளரும் தமிழில் கவிதை இலக்கியம்'' என்ற பொருள் பற்றி ஸ்ரீ ந. சஞ்சீவி, ஸ்ரீ புத்தனேரி சுப்பிரமணியம், ஸ்ரீ அழ. வள்ளியப்பா, ஸ்ரீ ம. பொ. சிவஞான கிராமணியார் ஆகியோரும் பங்கு கொண்டனர். பின்னர் ஸ்ரீமதி மங்களம் மணி கோஷ்டியாரின் இன்னிசை நடைபெற்றது. முடிவில் பொதுச் செயலாளர் ஸ்ரீ ப. ந. தியாகராஜன் நன்றி கூற விழா இனிது முடிந்தது.








# கிண்டி தொழிற் பேட்டை திறப்பு விழா




சென்னைக்கு அருகில் இருக்கும் கிண்டி ஏற்கெனவே குதிரைப் பந்தயத்திடலினுல் முக்கியத்துவம் பெற்றிருக்கிறது. இப்பொழுது அங்கு உருவாகி இருக்கும் தொழிற்பேட்டையின் மூலம் அதிக முக்கியத்துவம் வாய்ந்ததாகத் திகழ்கிறது. இங்கு எழுபது லட்சம் ரூபாய் செலவில் நிர்மாணிக்கப்பட்டிருக்கும் தொழிற் பேட்டையைப் பாரதத்தின் பிரதமர் நேரு அவர்கள் சென்ற ஏழாம் தேதி காலையில் திறந்துவைத்தார். பேட்டையைத் திறந்து வைக்க வந்த பிரதமரைச் சென்னை ராஜ்ய தொழில் மந்திரியும், தொழில் வர்த்தக டைரக்டரும் வரவேற்றுப் பேசிய பின் விழா ஆரம்பமாகிறது. இந்த விழாக் காட்சிகள் சிலவற்றை இந்தப் பக்கத்தில் காணலாம்.

1. பிரதம மந்திரி மேஜை மீது இருந்த சிறிய அட்டையில் கையொப்பமிட்டதும் மேடையிலிருந்த திரை தானுகத் திறந்து கொண்டது. சரஸ்வதி கையில் வீணையுடன் காட்சி அளித்தாள். எல்லா விளக்குகளும் எரிந்தன. தானுகவே தேங்காய் உடைந்தது. கற்பூரம் எரிந்தது. நாகஸ்வர இசை எழுந்தது. இந்தக் காட்சியைக் கண்டு நேருஜி வியப்படைந்தார். 2. 3. தொழிற்கூடப் பகுதிகளைப் பிரதமர் பார்வையிடுகிருர். 4. அதிகாலையிலேயே ஆயிரக்கணக்கில் கூடியிருந்த மக்கள் முன்னிலையில் தொழிற் பேட்டையைத் திறந்து வைத்து உணர்ச்சியுடன் பேசுகிருர் பிரதமர் நேரு. போட்டோ : விச்சு





தமிழ்க் கலைக் களஞ்சிய ஐந்தாவது தொகுதி வெளியீட்டு விழாவைப் பிரதமர் ஜவாஹர்லால் நேரு ஆரம்பித்து வைத்த காட்சிகளை இந்தப் பக்கத்தில் காணலாம்.

1-2. பிரதம மந்திரி தமிழ்க் கலைக் களஞ்சிய வெளியீட்டில் பேசுகிறார். 3. தமிழ்க் கலைக் களஞ்சிய ஐந்தாவது தொகுதிப் பிரதியைக் கழகத் தலைவர் திரு அவினாசிலிங்கம் செட்டியார் பிரதம மந்திரிக்கு அளிக்கிறார். 4. தமிழ் வாழ்த்துப் பாடலுக்குத் தலைவர்கள் கரம் குவித்து நிற்கின்றனர்.

# தமிழ் கலைக் களஞ்சிய வெளியீட்டு விழா



# விஞ்ஞான காங்கிரஸ்



சென்னையில் ஜனவரி ஆறுந் தேதி நாற்பத்தைந்தாவது இந்திய விஞ்ஞான காங்கிரஸ் கூடியது. இந்த விஞ்ஞான மகா நாட்டைப் பாரதப் பிரதமர் நேருஜி துவக்கி வைத்தார். தேசத்தின் முன்னேற்றத்துக்கு அடிப்படைத் தேவையான விஞ்ஞானத்தை மகாநாட்டில் மூவாயிரத்துக்கு மேற்பட்ட இந்திய, அயல் நாட்டு விஞ்ஞானிகள் கூடி ஆராய்ந்தனர். இந்த மகாநாட்டுக் காட்சிகள் சிலவற்றை இந்தப் பக்கத்தில் காணலாம். 1. பாரதப் பிரதமர் விஞ்ஞான காங்கிரஸ் மகாநாட்டுக்கு வருகிறார். 2. அயல் நாடுகளிலிருந்து விஜயம் செய்த விஞ்ஞான மேதைகள். 3. நேருஜி மகா நாட்டுத் துவக்கவுரை நிகழ்த்துகிறார். 4. விஞ்ஞானக் கண்காட்சியில் விஞ்ஞானத்தின் விந்தைகளை நேருஜிக்கு விளக்குகிறார் ஒரு விஞ்ஞானி.



சிரஞ்சீவி எஸ். சந்தானம் அவர்களுக்கும் சௌபாக்கியவதி பங்கஜத்துக்கும் டிசம்பர் முதல் தேதியன்று திருச்சியில் திருமணம் நடந்தேறியது.



பம்பாய் மாதுங்காவில் திரு எம். ஆர். ராமச்சந்திரன் அவர்களுக்கும் திருமதி பி. எஸ். சீதாலக்ஷ்மிக்கும் விவாகம் விமரிசையாக நடந்தேறியது.



தக்ஷிண ரயில்வேயைச் சேர்ந்த திரு எம். கே. சீனிவாசனுக்கும் திருமதி பானுமதிக்கும் சமீபத்தில் வெகு சிறப்பாகத் திருமணம் நடைபெற்றது.

# வாழ்க மணமக்கள்



ஏர் இந்தியா இண்டர் நேஷனலைச் சேர்ந்த திரு கிருஷ்ணமூர்த்திக்கும் திருமதி லக்ஷ்மிக்கும் பம்பாயில் விவாகம் வெகு சிறப்பாக நடைபெற்றது.



சிக்கா பிரைவேட் கம்பெனியைச் சேர்ந்த திரு ராமகிருஷ்ணனுக்கும், பொன்னம்மாளுக்கும் பூனாவில் திருமணம் விமரிசையாக நடந்தது.

# வித்வத் சபையின் விருது பெற்ற வித்வான்கள்



அனந்தகிருஷ்ணசர்மா



ராமலிங்க பாகவதர்







அங்கப்ப பிள்ளை



வீணை சண்முகவடிவு

ரங்கு அய்யங்கார்



# சென்னையில் இசை விழாக்கள்





சென்னை மியூஸிக் அகாடமியின் முப்பத்தோராவது இசை விழா டிசம்பர் 21உ மாலை சென்னை பி. எஸ். ஹைஸ்கூல் பந்தலில் ஜாம் ஜாம் என்று ஆரம்பமாகியது. அன்று காலை சென்னைக்கு வந்த மைசூர் கவர்னர் ஸ்ரீ ஜெயசாமராஜ உடையார் அவர்களை அகாடமியின் உப தலைவர் ஸ்ரீ கே. சீனிவாசன் அவர்களும் மற்ற அகாடமி அங்கத்தினர்களும் சென்னை சென்ட்ரல் ஸ்டேஷனுக்குச்சென்றுவரவேற்றனர். உபதலைவர் ஸ்ரீ கே. சீனிவாசன் அவர்கள் விழாவில் வரவேற்புரை நிகழ்த்தினார்.

மைசூர் கவர்னர் தமது துவக்க உரையில் ''இந்திய சங்கீதத்தின் லட்சியம் ஆத்மீக அநுபவம் தான். கடவுளைக் காண்பதால் ஏற்படுவதைப் போன்ற ஆனந்தத்தை ஏற்படுத்துவதே சங்கீதத்தின் இறுதி லட்சியம்!'' என்றார். ஸ்ரீ டி. சௌடய்யா தலைமையுரை நிகழ்த்திய பிறகு தாமே தமது சிஷ்யர்களுடன் கச்சேரி செய்தார். சென்னையிலுள்ள சங்கீத ரஸிகர்கள் ஆண்களும் பெண்களும் பெருந்திரளாக வந்திருந்து சிறப்பித்தனர்.



தமிழிசைச் சங்கத்தின் பதினைந்தாம் ஆண்டுவிழா டிசம்பர் 21ல ராஜா அண்ணாமலை மன்றத்தில் ஆரம்பமாகியது.

1 விழாவைத் துவக்கி வைத்து மந்திரி திரு எம். ஏ. மாணிக்கவேலு பேசுகிறார். விழாத் தலைவர் நாமக்கல் கவிஞர் அவர்களும், கழகத் தலைவர் திரு டி. எம். நாராயணசாமிப் பிள்ளை அவர்களும்.
2 விழாவுக்கு வந்திருந்த பிரமுகர்கள்.



இந்திய லலித கலைச் சங்கத்தின் இருபத்தைந்நாவது விழா டிசம்பர் 24ந் தேதி கோகலே மன்றத்தில் ஆரம்பமாகியது. விழாவுக்கு திரு ஈ. கிருஷ்ணய்யர் தலைமை தாங்கிச் சிறப்பித்தார். பிரதம நீதிபதி திரு பி. ராஜகோபாலன் அவ் விழாவை ஆரம்பித்து வைத்தார்.

3 நீதிபதி திரு ராஜகோபாலன் விழாவை ஆரம்பித்து வைத்துப் பேசுகிறார்.

4 விழாவுக்கு வந்திருந்த ரஸிக மகா சபை.

# ஆட்சி மொழி மகாநாடு

மத்திய சர்க்காரின் ஆட்சி மொழி இப்பொழுது இருப்பது போலவே, ஆங்கிலம் தொடர்ந்து இருக்க வேண்டும் என்பதைத் தென்னகத்தின் பெருந் தலைவர்கள் சென்னையில் கூடித் தீர்மானித்தார்கள். இந்த மகாநாட்டுக்கு வரவேற்புரை எம். ரத்னசுவாமி நிகழ்த்தினார். துவக்கவுரை மிர்ஸா இஸ்மெயில் நிகழ்த்தினார். டாக்டர் ஸி. பி. தலைமை தாங்கினார். ராஜாஜி முக்கிய தீர்மானத்தைப் பிரேரேபித்தார். திருவாளர்கள் பி. டி. ராஜன், பி. கோதண்டராவ், நெடுஞ்செழியன், பேராசிரியர் ஷண்முகம், செல்லசாமி, எஸ். ஆர். வேங்கடராமன், ஆர். வி. கிருஷ்ணய்யர் முதலியவர்கள் மகாநாட்டுத் தீர்மானங்களை ஆதரித்தனர். மகாநாடு காலையில் சீனிவாச சாஸ்திரி ஹாலிலும் மாலை கோகலே மண்டபத்திலும் நடைபெற்றது. 1. டாக்டர் ஸி. பி. பேசுகிறார். 2. ராஜாஜி பேசுகிறார். 3. கோகலே மண்டபத்தில் கூடியிருந்த பெருமக்கள். 4. மயிலாப்பூர் சீனிவாச சாஸ்திரி ஹாலில் கூடியிருந்த பிரமுகர்கள்.

